# நகரத்தார் கோயில்கள்

## ஒன்பதின் விவரங்களும் சிறப்புகளும்


இளையாத்தன்குடி கோயில்


மாற்றூர்க் கோயில்


வைரவன் கோயில்


இரணியூர்க் கோயில்


பிள்ளையார்பட்டிக் கோயில்


நேமம் கோயில்


இலுப்பைக்குடிக் கோயில்


சூரைக்குடிக் கோயில்


வேலன்குடிக் கோயில்

வெற்றியூர் அரு.சுந்தரம்

மணிமேகலைப் பிரசுரம்



# நகரத்தார் கோயில்கள் ஒன்பதின் விவரங்களும் சிறப்புகளும்




வெற்றியூர் அரு. சுந்தரம், M.A., M.Ed.







**மணிமேகலைப் பிரசுரம்**

தபால் பெட்டி எண் : 1447

7 (ப.எண் 4), தணிகாசலம் சாலை,

தியாகராயநகர், சென்னை – 600 017.

தொலைபேசி : 2434 2926, 2434 6082

மின் அஞ்சல் : manimekalai1@dataone.in

மின் இணையம் : www.tamilvanan.com




# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | நகரத்தார் கோயில்கள் ஒன்பதின் விவரங்களும் சிறப்புகளும் |
| ஆசிரியர் | : | வெற்றியூர் அரு. சுந்தரம், M.A., M.Ed. |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : | 2011 |
| பதிப்பு விவரம் | : | முதற் பதிப்பு |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | : | 18.6 |
| நூலின் அளவு | : | டெம்மி சைஸ் (14x21 செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | : | 11 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | viii + 248 = 256 பக்கங்கள் |
| நூலின் விலை | : | **ரூ. 150.00** |
| அட்டைப்பட ஓவியம் | : | ஓவியர் ஜமால் |
| லேசர் வடிவமைப்பு | : | பி.எஸ். முத்து கிராஃபிக்ஸ் சென்னை – 600 015. |
| அச்சிட்டோர் | : | பி.வி.ஆர். ஆப்ஃசெட் சென்னை – 600 094 |
| நூல் கட்டுமானம் | : | தையல் |

# பொருளடக்கம்

# ஏன்னுரை

உலகில் கோயில்களைத் தழுவிய (சார்ந்த) குடிகளாக வாழ்பவர்கள் நகரத்தார்கள் மட்டுமே. இவர்களை நகரத்தார்கள் என அடையாளம் காட்டுவது இவர்களுடைய குலமரபுக் கோயில்களே யாகும்.

இவர்கள் காரைக்குடியைச் சுற்றி 25 கி.மீ. தொலைவுக்குள் தங்களுக்கு என ஒன்பது கோவில்களை அமைத்துக் கொண்டு செட்டி நாட்டில் வாழத் தலைப்பட்டனர். அவை 'நகரக் கோயில்கள்' என அழைக்கப்படுகின்றன.;

பண்டிதமணி, சா. கணேசன், சோமலெ. முனைவர்கள் தமிழண்ணல், வ. தேனப்பன் எனப் பல நகரத்தார்கள் நகரக் கோயில்களைப் பற்றி எழுதியுள்ளனர்.

நகரத்தார் அல்லாத, 'கோயில் கலைச் செம்மல்' திரு. மா. சந்திரமூர்த்தி ஒன்பது நகரக் கோயில்களைப் பற்றி விரிவாக, தனித் தனியாக ஒன்பது நூல்கள் எழுதியுள்ளார்.

சுந்தரரும், நம்பியாண்டார் நம்பியும் சேக்கிழார் பெருமான் 'திருத்தொண்டர் புராணம்' எழுத உந்து சக்தியாக இருந்ததைப் போல, இந்நூலை நான் எழுத உந்து சக்தியாக இருந்தது திரு. மா. சந்திரமூர்த்தியின் ஒன்பது நூல்களே. அன்னாருக்கு என் நன்றி.

இன்றைய நகரத்தார் இளைஞர்களுக்கு, பெண்களுக்கு நகரக் கோவில்களைப் பற்றி திருமணத்திற்குப் பாக்கு வைப்பது, கோவில் மாலை வருவது போன்ற சில செய்திகள் தவிர ஏனைய செய்திகள் தெரியாது.

வாழையடி வாழையென வரும் நகரத்தார்கள், தங்கள் குலக் கோயில்களின் சிறப்பைத் தெரிந்து, தங்கள் மரபையும், பண்பாட்டையும் போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்ற பெரு நோக்கில் இந் நூலை எழுதியுள்ளேன்.

நகரத்தார்களைப் பற்றி நான் எழுத, கிரியா ஊக்கியாக இருப்பவர் அண்ணன் திரு. இரவி தமிழ்வாணன் அவர்கள். அவர்கள் அளித்த ஆக்கத்திலும், ஊக்கத்திலுமே இந்நூல் உருவானது. அண்ணனுக்கு என் நன்றி.

நகரத்தார்களைப் பற்றி நான் எழுதும் மூன்றாவது நூல் இது. என்னுடைய முந்தைய நூல்களான 'நகரத்தார் பெருமை', 'நகரத்தாரின் தமிழ்ப் பணிகள்' ஆகிய நூல்களை வாங்கி ஆதரித்துப் போற்றிய நகரத்தார்கள், இந்நூலையும் வாங்கி ஆதரிப்பார்கள் என நம்புகிறேன்.

என்னுடைய இரண்டு நூல்களை வெளியிட்ட அண்ணன் திரு. இரவி தமிழ்வாணன் அவர்களே இந் நூலையும் வெளியிடுகிறார். அண்ணனுக்கு என் நன்றி. இதன் அச்சுப்படிகளைத் திருத்தி உதவிய வாழைக்குறிச்சி திரு. பூ.மணிமொழி அவர்களுக்கும் நன்றி.

இந் நூலை எழுதப் பல நூல்கள் உதவின. அதன் விபரம் நூற்பட்டியலில் உள்ளது. நூலின் ஆசிரியர்களுக்கும், வெளியீட்டாளர்களுக்கும் என் நன்றி.

நகரக் கோயில்களுக்கு நான் சென்றபோது பலர் உதவினர். அவர்கள் அனைவருக்கும் என் நன்றி.

இந் நூலில் சில செய்திகள் விடுபட்டிருக்கலாம். அதனைத் தெரிவித்தால், அடுத்த பதிப்பில் சேர்த்துக் கொள்வேன்.

ஒன்பது நகரக் கோயில்களையும் ஒருசேரப் படித்து மகிழ இந் நூல் பெரிதும் உதவும் என நம்புகிறேன்.

இந் நூல் என்னுடைய இருபதாவது நூலாகும்.

ஆசை பெரிது, ஆக்கம் சிறிது. உங்கள் அன்பு விரியட்டும், ஆதரவு பெருகட்டும். விரைவில் மீண்டும் சந்திப்போம்.


அன்பன்<br>
**அரு. சுந்தரம்**<br>
செல் : *99425 63332*

# விற்பனையாகும் இதர நூல்கள்!

## ஜோஸ்யம் – Astrology

ஜோஸ்யம் கற்றுக்கொள்ளுங்கள் ---------------------------------- 110.00

## இந்தியா – India

2020ல் வளர்ச்சியடைந்த இந்தியாவைக் காண்போம் --------------- 75.00

இந்திய நாடாளுமன்றம் ஓர் இனிய வரலாறு ---------------------- 50.00

இந்திய அரசியலில் சுவையான ரகசியங்கள் ---------------------- 85.00

## தேசப் பற்று – Patriotism

தேசிய ஒருமைப்பாட்டில் நமது பங்கு ---------------------------- 28.00

நம் தேசியக் கொடி ---------------------------------------------- 17.00

காஷ்மீர் பிரச்னை முழு விபரங்களும்
தீர்வுக்கான யோசனைகளும் ------------------- 55.00

இந்தியாவின் விடுதலைக்கு வித்திட்ட இயக்கங்கள் ---------------- 40.00

வ.உ.சி.யின் முத்தான மொழிகள் ---------------------------------- 25.00

இந்திய விடுதலைப் போரின் வீர நிகழ்ச்சிகள் -------------------- 60.00

இந்தியா! என் இந்தியா! ---------------------------------------- 35.00

சுதந்திரப் போராட்டத்தில் ஓர் அற்புத தியாகம் -------------------- 45.00

நம்நாடு நலம்பெற நல்ல யோசனைகள் ------------------------- 40.00

## தமிழகம் – Tamil Nadu

தமிழ்நாடு பற்றிய சுவையான செய்திகள் ------------------------ 52.00

தமிழகத்தின் மண் வளங்கள் ---------------------------------- 20.00

தமிழ் இலக்கிய வரலாறு ------------------------------------- 85.00

தமிழரின் முழுமையான வரலாறு
(ஆதிகாலத்திலிருந்து இன்றுவரை) ---------------------- 250.00

தெரிந்த ஊர் தெரியாத சேதி ---------------------------------- 70.00

குற்றாலம் உங்களை அழைக்கிறது ----------------------------- 30.00

நகரத்தார் பெருமை ------------------------------------------- 90.00

தமிழக ஊர்களின் பெயர்க்காரணங்களும் சிறப்புகளும்
(875 ஊர்களைப் பற்றிய சுவையான தகவல்கள்) ------------------ 250.00

நகரத்தாரின் தமிழ்ப் பணிகள் ----------------------------------- 110.00

பண்டைத் தமிழகமும் சமுதாயச் சீர்கேடும் ----------------------- 120.00

## விற்பனையாகும் இதர நூல்கள்!

நகரத்தார் கோயில்கள் ஒன்பதின் விவரங்களும்
சிறப்புகளும் ---------------------------------- 200.00

### மொழி – Language

இந்தியாவில் பேசப்படும் 325 மொழிகளும்
விவரங்களும் ---------------------------------- 26.00

உலக மொழிகளும் அவை பற்றிய விவரங்களும் ---------------------------------- 70.00

இத்தாலி மொழியை இலகுவாகக்
கற்றுக்கொள்ளுங்கள் ---------------------------------- 70.00

### தென்னக மொழி – Southern Language

தெலுங்கு கற்றுக் கொள்ளுங்கள் ---------------------------------- 45.00

தெலுங்கில் பேசுவது எப்படி? ---------------------------------- 50.00

தெலுங்குப் பழமொழிகள் ---------------------------------- 16.50

மலையாளம் கற்றுக்கொள்ளுங்கள் ---------------------------------- 60.00

மலையாளத்தில் பேசுவது எப்படி? ---------------------------------- 70.00

மலையாளப் பழமொழிகள் ---------------------------------- 35.00

கன்னடம் கற்றுக் கொள்ளுங்கள் ---------------------------------- 60.00

கன்னடத்தில் பேசுவது எப்படி? ---------------------------------- 65.00

கன்னடப் பழமொழிகள் ---------------------------------- 13.50

### செம்மொழி - Semmozhi

செம்மொழி தமிழின் இலக்கியச் சிறப்பு ---------------------------------- 95.00

செம்மொழித் தேரும் செந்தமிழர் நூறும் ----------------------------------

செம்மொழி தமிழும் இதர இந்திய மொழிகளும் ---------------------------------- 120.00

### தமிழ் – Tamil

Learn Tamil through English ----------------------------------

The Cultural Contribution of the Tamils ---------------------------------- 80.00

தமிழின் பெருமையும் தமிழரின் உரிமையும் ---------------------------------- 60.00

தமிழ் மொழியின் சிறப்பு ---------------------------------- 55.00

தமிழ் மொழியில் இலக்கிய சிறப்பு ---------------------------------- 45.00

இணுவை சின்னத்தம்பி புலவர் அருளிய
சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ் ---------------------------------- 30.00

தூய தமிழில் பேசுவோம் ---------------------------------- 42.00

செந்தமிழ் வளம்பெற வழிகள் ---------------------------------- 130.00



## நகரக் கோவில்கள் - அமைவிடம் :

நகரக் கோயில்கள் ஒன்பதும் காரைக்குடியைச் சுற்றியே அமைந்துள்ளன. அதன் விபரம் வருமாறு :

1. இளையாற்றங்குடி : காரைக்குடியிலிருந்து குன்றக்குடி, நேமம், கீழச்சிவல்பட்டி வழியாக ஆவினிப்பட்டி செல்லும் சாலையில் 25 கி.மீ. தொலைவில் உள்ளது.

2. மாத்தூர் : காரைக்குடியிலிருந்து கிழக்கே இலுப்பைக்குடி வழியாகச் செல்லும் சாலையில் 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

3. இலுப்பைக்குடி : காரைக்குடியிலிருந்து கிழக்கே மாத்தூர் செல்லும் சாலையில் 3 கி.மீ. தொலைவில் உள்ளது.

4. பிள்ளையார்பட்டி : காரைக்குடியிலிருந்து குன்றக்குடி வழியாக மதுரை செல்லும் சாலையில் 14 கி.மீ. தொலைவில் உள்ளது.

5. வயிரவன்பட்டி : காரைக்குடியிலிருந்து குன்றக்குடி வழியாக மதுரை செல்லும் சாலையில் 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

6. நேமம் : காரைக்குடியிலிருந்து குன்றக்குடி வழியாகக் கீழச்சிவல்பட்டி செல்லும் சாலையில் 18 கி.மீ. தொலைவில் உள்ளது.

7. சூரக்குடி : காரைக்குடியிலிருந்து கழனிவாசல் வழியாக நேமத்தான்பட்டி செல்லும் சாலையில் 10 கி.மீ. தொலைவில் உள்ளது.

8. இரணியூர் : காரைக்குடியிலிருந்து பிள்ளையார்பட்டி, வயிரவன்பட்டி வழியாக விராமதி செல்லும் சாலையின் இடது புறம் பிரியும் கிளைச் சாலையில் 24 கி.மீ. தொலைவில் உள்ளது.

9. வேலங்குடி : காரைக்குடியிலிருந்து திருச்சி செல்லும் சாலையில் 9 கி.மீ. தொலைவில் உள்ளது.

## நகரக் கோவில்கள் - பிரிவுகள்

1. இளையாற்றங்குடி : *இறைவன் - கைலாசநாதர், இறைவி - நித்தியகல்யாணி.*

பிரிவுகள் : *ஒக்கூருடையார், பட்டணசாமியார், பெருமருதூருடையார், கழனிவாசக்குடியார், கிங்கிணிக் கூருடையார், பேரசெந்தூருடையார், சிறுசேத்தூருடையார்.*

2. மாத்தூர் : *இறைவன் - ஐந்நூற்றீசுவரர், இறைவி - பெரியநாயகி.*

பிரிவுகள் : *உறையூருடையார், அரும்பாக்கூருடையார், மணலூருடையார், மண்ணூருடையார், கண்ணூருடையார், கருப்பூருடையார், குளத்தூருடையார்.*

3. இலுப்பைக்குடி : *இறைவன் - தான்தோன்றீசர், இறைவி - சௌந்தரநாயகி.*

பிரிவு : *சூடாமணிபுரமுடையார்.*

4. பிள்ளையார்பட்டி : *இறைவன் - திருவீசர், இறைவி - சிவகாமவல்லி. இறைவன் - மருதீசர், இறைவி - வாடாமலர்மங்கை. கற்பக விநாயகர்.*

பிரிவு : *திருவேட்புடையார்.*

5. வயிரவன்பட்டி : *இறைவன் - வளரொளிநாதர், இறைவி - வடிவுடை அம்மை.*

பிரிவு : *சிறுகுளத்தூருடையார்.* உட்பிரிவுகள் : *பெரிய வகுப்பு, தெய்யனார் வகுப்பு, பிள்ளையார் வகுப்பு, கழனிவாசலுடையார், மருதேந்திரபுரமுடையார்.*

6. நேமம் : *இறைவன் - செயங்கொண்ட சோழீசர், இறைவி - சௌந்தரநாயகி.*

பிரிவு : *இளநலமுடையார்.*

7. சூரக்குடி : *இறைவன் - தேசிகநாதர், இறைவி - ஆவுடைய நாயகி.*

பிரிவு : *புகழ் வேண்டியபாக்கமுடையார்.*

8. இரணியூர் : *இறைவன் - ஆட்கொண்டநாதர், இறைவி - சிவபுரந்தேவி.*

பிரிவு : *திருவேட்டையார்.*

9. வேலங்குடி : *இறைவன் - கண்டீசுவரர், இறைவி - காமாட்சி.*

பிரிவு : *கழனிநல்லூருடையார்.*



உ
*சிவமயம்*
*அண்ணாமலையார் துணை*

# நகரத்தார் கோவில்கள் ஒன்பதின் சிறப்புகளும் விவரங்களும்

## மரகத விநாயகர் வணக்கம்

மாவாழும் ஏழுவழி நகரத்தார்க்கு என்றும்
கோவாழும் செல்வக் குலதெய்வம் மாவாழ்
மரகத விநாயகனை மாமலர்தூய் வாழ்த்த
வரநலவாழ் வெல்லாம் வரும்

*- சதாவதானம் சுப்பிரமணியய்யர்.*

## கற்பக விநாயகர் வணக்கம்

தனையன் வேண்டினும் சம்பத்து வேண்டினும்
மனையை வேண்டினும் வரம்பல வேண்டினும்
கனைவளங் கொள் கணேசபு ரேசனை
இனிய கற்பக மூர்த்தியை யேத்துமே

*- சொக்கலிங்க அய்யா*

அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்
பொய்யில்லை கண்ட உண்மை!

*- கவியரசு கண்ணதாசன்*

## தனவணிகர் வாழ்த்து

பொருள்ஈட்டி அறம்பேணி புகழ் வளர்த்து
நெறிநின்று பொருவில் ஈசன்
அருள்ஈட்டி வாழ்ந்து வரும் தனவணிகர்
வரலாறாம் ஆழிக் கண்ணே
இருள்ஓட்டும் பொருண்மணிகள் பலவுளமற்
றிவைகாண எழுமின் சான்றீர்!
பொருள்ஈட்டும் கருவியெனத் திகழ்தரும் இந்
நூல்நீடு சிறக்க நன்றே!

*- பெரும்புலவர் பண்டிதமணி*

## இலக்குமி வணக்கம்

நின்மேலும் ஆணைநின் மகன்மேலும்
ஆணை நின்மாக் கொழுநன்
தன்மேலும் ஆணை தன்கடன்மேலும்
ஆணை தனமா வணிகர்
சின்னஞ்சிறுவர் தெரியாத காளையர்
என் செய்யினும் நீ
பின்னும் பொறுத்தே இருப்பாய்
சிறப்பாய் பெரிய இலக்குமியே!

*-பாடுவார் முத்தப்பர்*

## வாழி நகரத்தார்

வாழி நகரத்தார் வள்ளன்மை மிக்கோர்கள்
வாழி பலவும் உயர்ந்திருக்க - ஆழிசூழ்
இத்தலத்தில் கோயில் இயற்றியோர் வாழியவே
எத்தலமும் போற்ற இனிது

*- திருமுருக கிருபானந்த வாரியார்*





# நகரத்தாரும் கோவிலும்

உலகில் தோன்றிய குலங்களில் மிகத் தொன்மையான குலம் நகரத்தார் குலம். சங்கப் பாடல்களில் இக்குலத்தைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஐம்பெருங் காப்பியங்களில் மூன்று காப்பியங்கள் இக்குலப் பெருமை பேசும் காப்பியங்களாகும்.

சங்ககாலப் புலவர்களில் இக்குலத்தைச் சார்ந்த இருபால் புலவர்கள் உள்ளனர்.

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து இக்குலத்தின் வரலாறு தொடங்குகிறது.

நகரத்தார் குலத்தின் வரலாறு கடல்போல் ஆழமுடையது, வளமுடையது.

எழுதப்பட்ட வரலாறு உடைய குலம் நகரத்தார் குலம்.

"நகரத்தார்கள் ஒரு சிறுபான்மை சமூகத்தினர்தான். ஆயினும் தமிழக வரலாற்றில் அவர்களுக்குப் பெரும் பங்குண்டு" என்று குறிப்பிடுகிறார் கவியரசர் கண்ணதாசன்.

"150 ஆண்டுகளுக்குள் கடல் வணிகத்திலும், உள்நாட்டு வணிகத்திலும் சிறந்து, உழைத்து, உண்மை பேசி, நாணயமாக இருந்து முன்னேறி, கோடி கோடியாக அறம் செய்து, கட்டுப்பாடாக வாழ்ந்து சிறந்த ஒரு குடி நகரத்தார் குடியேயாகும்" என நகரத்தாரை மதிப்பிடுகிறார் பேராசிரியர் வெ.சு. அழகப்பன்.

"5000 ஆண்டுகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சமூகம் நமது நாட்டில் ஒன்று இருக்குமானால், அது நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகம் ஒன்றே! என்றுதான் கூற வேண்டும்" என்கிறார் அ. சேசாத்திரி சர்மா.

"ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாய்த் தமிழ்மரபுகளின் காப்பகங்களாக விளங்குகிற சமூகம் நகரத்தார் சமூகம். மரபுச் செல்வங்களை காலந்தோறும் காப்பாற்றி வழிவழியாக வரும் தலைமுறைகளுக்கு வழங்கி வரும் சமூகம். மக்கள் தொகையில் சிறியது எனினும், சாதனைகளால் சிறந்தது. பாரதியார், பாரதிதாசன், கவிமணி, கவியரசர் கண்ணதாசன் ஆகியோரது பாடல்களால் சிறப்புப் பெற்ற சமூகம் நகரத்தார் சமூகம்" எனப் பாராட்டுகிறார் பதிப்புச் செம்மல் தமிழவேள் ச. மெய்யப்பன்.

"நகரத்தார் பெருமக்கள் கோவிலைச் சார்ந்த குடிகள். குடிகள் சார்ந்த கோவிலை உடையவர்கள்" என்பார் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள்.

"நகரத்தார்கள் இல்லையேல் கோவிலும் இல்லை. வேதமும் இல்லை" என்பார் காஞ்சிப் பெரியவர் பரமாச்சாரியார்.

"கோவில் கூரையில் விரிசலா? கூப்பிடு செட்டியாரை" என்ற சொலவடையும் உண்டு.

உலகில் உள்ள சைவ, வைணவ கோயில்களைக் கட்டிக் காக்கும் வள்ளல்களாக நகரத்தார்கள் திகழ்கின்றனர்.

நகரத்தார் சமூகம் கோவில் சார்ந்து வாழும் குடிகளை உடைய சமூகம். அவர்களது சுவீகாரம் (பிள்ளை கூட்டிக் கொள்ளுதல்), திருமணம் முதலிய சமூக உறவுகள் ஒன்பது கோவில்களுக்குள்ளேயே நடைபெறுகின்றன.

நகரத்தார் திருமணம் ஒவ்வொன்றும் ஒன்பது கோவில்களுள் அவரவர் சார்ந்த கோவிலில் பாக்கு வைத்துப் பதிவு செய்யப்படுகிறது. பழங்காலத்திலேயே திருமணத்தைப் பதிவு செய்த சமூகம் நகரத்தார் சமூகம். கோவில் மாலை வந்தால்தான் நகரத்தார் திருமணமே சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்படும்.

"கோவில் மாலை திருமணத்திற்குரிய சமூக அங்கீகாரமாகும்" என்கிறார் பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பன்.

நகரக் கோவில்கள் ஒன்பதிலும், அக்கோவில் சார்ந்த புள்ளிகள் ஊர் வாரியாக எத்தனை பேர் உள்ளனர் என்ற விவரம் பதிவு செய்யப் பெற்றுள்ளது.

*அளப்பரிய பெருமையுடைய நகரத்தார் சமூகத்தின் வாழ்வு மையங்கள் கோவில்களே ஆகும்.*

*ஒருவர் நகரத்தாரா இல்லையா என்று அறிந்துகொள்ள, "நீங்கள் எந்தக் கோவில்" என்று கேட்டால், அவர் நகரத்தாராய் இருந்தால், அவருடைய நகரக் கோவிலைச் சொல்லுவார். எடுத்துக்காட்டாக மாத்தூர் கோவில் - அரும்பாக்கூர் பிரிவு என்பார்.*

*அவர் நகரத்தார் இல்லையாயின் நம் கேள்வி புரியாமல், "நான் சைவன்" என்றோ, "வைணவன்" என்றோ சொல்லுவார்.*

*எனவே ஒன்பது நகரக் கோவில்கள், நகரத்தாரை அடையாளம் காட்டும் குறியீடாகவும் விளங்குகிறது.*

*"கோவில் இல்லா ஊரில் குடி இருக்க வேண்டாம்" என்றாள் தமிழ் மூதாட்டி ஔவையார். நகரத்தார்கள் கோவிலைக் கட்டியே குடியேறினர். கோவிலைச் சார்ந்தே வாழ்ந்தனர்.*

*பாண்டிய நாட்டில் ஓங்காரக்குடியில் நகரத்தார்கள் குடியேறும் போதே, கோவில் கட்டிக்கொள்ள மன்னனிடம் அனுமதி பெற்றே குடியேறினர்.*

*எனவே கோவில், நகரத்தார்களுடன் இரண்டறக் கலந்ததாகும்.*

"பூ எப்போ மலரும்
பொழுது எப்போ விடியும்
சிவன் எப்போ வருவார்?
வரம் எனக்குத் தருவார்"

*என இளம் வயதிலேயே பக்தி உணர்வுடன் பிள்ளைகளை வளர்ப்பது நகரத்தார் குலமரபாகும்.*

*இதனையே காரைக்கால் அம்மையாரும்,*

"பிறந்து மொழி பயின்ற
பின்னெல்லாம் காதல்
சிறந்து நின் சேவடியே
சேர்ந்தேன்"

*எனக் கூறுகிறார்.*

*சம்புத்தீவில் நாக நாட்டில் சந்தியாபுரி நகரில் ஆதியில் வாழ்ந்து*

வந்த வைசியர்கள் கோபதீசுவரர் சுவாமி தரிசனமும், மரகத விநாயகர் பூசையும் செய்து வந்ததாகக் கல்வெட்டுச் செய்தி கூறுகிறது.

நகரத்தார்கள் இடம் பெயர்ந்து குடியேறியபோதும் விநாயகர் வழிபாட்டைக் கைவிடவில்லை.

எனவே, இராசமனை (அரண்மனை) போல வீடு கட்டி வாழும் நகரத்தார்கள் தொன்றுதொட்டு வழங்கும் குல மரபாகக் கோவிலை அடிப்படையாகக் கொண்டே வாழத் தலைப்பட்டனர்.

உறவு வலுப்பெறவும், குலம் பெருகவும், மரபுகள் காக்கப்படவும், தொன்றுதொட்டு கடைப்பிடித்து வரும் வழக்கம் தொடரவும், பாண்டிய நாட்டில் குடியேறிய சில காலங்களுக்குள் தங்களுக்கென ஒன்பது கோவில்களை நகரத்தார்கள் அமைத்துக் கொண்டனர். இவற்றை 'நகரக் கோவில்கள்' என்றழைத்தனர்.

"கோவில் சார்ந்த குடிகள், குடிகளைத் தழுவிய கோவில்கள் எனத்தமிழ்ச் சமுதாய மரபில், வந்த சமூகம் நகரத்தார் சமூகம். நகரத்தார்க்குரிய அடிப்படை அடையாளமாக அமைபவை ஒன்பது நகரக் கோவில்களே" எனக் குறிப்பிடுகிறார் முனைவர் கரு. முத்தையா.

(நன்றி : நகரக் கோவில்கள் ஒன்பது திருப்பதிகம்)

"நகரத்தார்கள் கோவிலைச் சார்ந்து வாழும் குடிகள். கோவிலையே கோத்திரமாகக் கொண்டவர்கள். சிவபெருமானையே வழிபடுவார்கள். ஆனாலும், நகரச் சிவன் கோவில்கள் தவிர, தாங்கள் வாழும் 78 ஊர்களுக்கு அண்மையில் உள்ள ஆலயங்களுக்கும், சைவ, வைணவ, சாக்த, கௌமார, காணாபத்திய பேதமின்றிப் பல நற்பணிகளுக்குப் பொருளை வாரி வழங்கி இருக்கின்றனர்" என்கிறார் சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள்.

(நன்றி : நகரத்தார் மரபும், பண்பாடும்)

"நகரத்தார்கள் கோவிலைச் சார்ந்து வாழும் குடிமக்கள். அவர்கள் தங்கள் கோத்திரப் பிரிவுகளையே இவ்வாறு கோவிலின் பேரால் அமைத்துக் கொண்டனர். பரிமேலழகர் மூவேந்தர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'படைப்புக்காலம் தொட்டு சிறப்புற்று விளங்கி வரும் குடிகள்' எனக் குறிப்பிடுவார். மன்னர் பின்னோராகிய நகரத்தாரும் 'இளையாற்றாங்குடியார், மாத்தூர் அரும்பாக்கூருடையார்' எனக் குலமரபு கூறப்படுதலான், இவர்களும்

படைப்புக் காலம் தொட்டு மேம்பட்டு வரும் குடிகளோ என எண்ணத் தோன்றுகிறது.

நகரத்தார் கோவில்கள் நீதிமன்றங்களாகவும் செயல்பட்டன. நகரத்தார்கள் கோவில் நிர்வாகம் பற்றி அறிந்தால் பலரும் வியப்படைவர்" என்கிறார் முனைவர் தமிழண்ணல்.

(நன்றி : அணிந்துரை - ஒன்பது நகரக் கோவில்கள்)

"தொழிலில் வேறு யாரும் செய்ய முடியாத ஒரு சிறந்த பண்பை இவர்களிடம் மட்டுமே காண முடிகிறது. தமது தொழிலில் நகரக் கோவில் இறைவனையும் ஒரு பங்குதாரராகச் சேர்த்துக்கொண்டு, வரும் இலாபத்தில் இறைவனுக்கும் ஒரு பங்கு ஒதுக்கி அதனை ஊருக்கு வரும்போது இறைவனுக்கு அளிப்பது வேறு யாரிடமும் காண முடியாதது.

எத்தனை தூரத்தில் இருந்தாலும், தமது தெய்வங்களையும், முன்னோர்களையும் ஆண்டுக்கு ஒரு முறை சொந்த ஊருக்கு வந்து வழிபடும் உயர்ந்த பண்புடையவர்கள்" என நகரத்தார்களை மதிப்பிடுகிறார் கோவில் கலைச்செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நகரத்தார் மரபும், பண்பாடும்)

மனித வாழ்க்கையில் நாளும் கோளும் (நட்சத்திரங்களும், நவக்கிரகங்களும்) நல்லதைக் கெடுத்து அல்லதைக் கொடுத்து வருவதாக நம்பப்படுகிறது. இதனை மாற்றத்தான் திருஞானசம்பந்தப் பெருமான் 'கோளறு திருப்பதிகம்' பாடினார். இதனைத் தம் வழிபாட்டில் தவறாது சொல்லுபவர்கள் நகரத்தார்கள்.

சர்வ வல்லமையுள்ள தனிக்கடவுள் சதாசிவன்தான் என நம்பினர். எனவே, அயல் மதம் சாராமல் சைவர்களாய் வாழ்ந்து வருகின்றனர். எனினும் மதக்காழ்ப்பிற்கு அவர்கள் இடம் தரவில்லை.

சிவன் கோவில் கட்டிய நகரத்தார்கள் பெருமாள் கோவிலையும் கட்டினர். நகரத்தார்கள் ஊர்கள் சிலவற்றில் 'பெருமாள் கோவில் செட்டியார் வீடு' என்ற அடையாளப் பெயரால் அழைக்கப்படுவதை நாம் காணலாம்.

உலகிலேயே இதுவரை மதம் மாறாத ஓர் இனம், ஒரு குலம் உண்டென்றால், அது நகரத்தார் குலமன்றி வேறில்லை. ஆதியிலிருந்தே இவர்கள் சைவர்கள்தான்.

தேவாலயம் கட்டவும், பள்ளிவாசல் கட்டவும் 'நகரத்தார்கள் நன்கொடை கொடுப்பார்கள்'.

இவ்வாறு சமயப் பொறையுடன் வாழும் குலம் நகரத்தார் குலமே.

நகரத்தார்கள் அன்னை பராசக்தியை, உமா மகேஸ்வரியைத் தங்கள் நகரக்கோவில்களில் நித்திய கல்யாணியாக, பெரிய நாயகியாக, வடிவுடைஅம்மனாக, சிவகாமிவல்லியாக, வாடா மலர்மங்கையாக, சௌந்திரநாயகியாக, காமாட்சியாக, சிவபுரந்தேவியாகச் சிவனுடன் சேர்த்தே வழிபட்டு வருகின்றனர்.

தமிழ்நாட்டிலோ அன்றி வெளிமாநிலங்களிலோ நகரத்தார் குடியேறியதும் அவர்களது முதல்பணி ஒரு பிள்ளையார் கோவிலையோ, சிவன் கோவிலையோ கட்டுவதேயாகும்.

"செட்டியார்கள் சைவர்கள். அவர்கள் பலர் கூடி வாணிகம் நடத்திய இடத்தில் நிச்சயம் ஒரு கோவிலைக் கட்டினார்கள். அக்கோவில், உள்ளூர் செட்டியார் இனத்திற்கு மையமாகவும், தொழிலுக்குத் தலைமையகமாகவும் விளங்கியது.

இரங்கூனில் (யாங்கோன்) கோவிலின் ஆறு அறைகள் கீழே விளங்க, இரண்டாவது தளத்தில் ஒரு சிவாலயமும், தொழில் சம்பந்தமாகக் குழுக்கள் கூடும் இடமும் இருந்தன.

இப்படி கோவில் விக்கிரகங்களும், பணப்பெட்டியும் ஒரே கூரையின்கீழ் அமைந்தது, இவர்களின் சமய, சமுதாய இணைப்பைக் காட்டுகிறது" என்கிறார் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நகரத்தார் மரபும், பண்பாடும்)

"அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்"

என்ற வள்ளுவர் வாக்கின்படி செயல்பட்டவர்கள் நகரத்தார்கள். செல்வம் நிலைக்காத இயல்பை உடையது. அத்தகைய செல்வத்தைப் பெற்றால், பெற்ற அப்பொழுதே நிலையான அறங்களைச் செய்ய வேண்டும் என்பது அக்குறளின் பொருளாகும். அதன்படி எல்லா நகரத்தார்களும் தங்கள் வருவாயில் சில சதவிகிதத்தைத் தர்மத்திற்குச் செலவிட்டனர்.

நகரத்தார் வரலாற்றுக் குறிப்புகளை நகரத்தார் பெண்கள் குருபீடம், துலாவூர் நிரம்ப அழகிய தேசிகரின் பட்டயம் தெளிவாகக் கூறுகிறது.

"நகரத்தார்கள் பாண்டிய நாட்டுக்கு வந்தது, குன்றக்குடியில் ஆதினம் அமைத்தது, ஔவையாரின் பாட்டுக்கு நகரத்தார்கள் 'பொற்பாடகம்' கொடுத்தது, இப்பரிசால் மனம் மகிழ்ந்த ஔவையார் 'மடிச் சீலை பெருக' என வணிகர்களாகிய இவர்களை வாழ்த்தியது, நகரத்தாரின் நாணயச் சிறப்பு" எனப் பல செய்திகளை இப்பட்டயம் கூறுகிறது.

இப்பட்டயத்தின் இரண்டாவது சாசனத்தில் திருமணமானவர்களைக் குறிக்கும் 'புள்ளி' என்ற சொல் உள்ளது. ஒவ்வொரு புள்ளியும் கொடுக்கும் பணம் 'புள்ளிக்காசு' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இப்புள்ளிப் பணம் பழனிக் கோவில் பராமரிப்பு மற்றும் கோவில் காரியங்களுக்குப் பயன்படுத்தப் பெற்றது.

(நன்றி : திரு.மா. சந்திரமூர்த்தி, நூல்: நகரத்தார் மரபும், பண்பாடும்)

நகரத்தார் வாழ்க்கையில் கோவில்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இவர்கள் வாழ்நாள் முழுவதும் ஒன்பது கோவில்களுடன் தங்களைப் பிணைத்து வாழ்வர். ஒவ்வொரு நகரத்தாரும் பிறப்பால் தகப்பன் வழியில் ஒரு கோவிலைச் சேர்ந்தவர்களாவர். பெண் பிள்ளைகள் திருமணமானவுடன் கணவனுடைய கோவிலைச் சார்ந்தவள் ஆகிறாள்.

செட்டி நாட்டின் எல்லை குன்றக்குடியை மையமாக வைத்தே குறிக்கப்படுகிறது. செட்டி நாட்டெல்லைகள் வருமாறு :

வெள்ளாறது வடக்காமேற் குப்பிரான் மலையாந்
தெள்ளார் புனல்வகை தெற்காகும் - ஒள்ளியநீர்
எட்டிக் கடற்கிழக்கா மிஃதன்றோ நாட்டரண்சேர்
செட்டிநாட் டெல்லையெனச் செப்பு.

நகரத்தார்களின் ஒன்பது கோவில்களும் (இளையாத்தங்குடிக் கோவில், மாற்றூர்க் கோவில், இலுப்பைக்குடிக் கோவில், நேமங்கோவில், சூரக்குடிக் கோவில், இரணிக் கோவில், பிள்ளையார்பட்டிக் கோவில், வைரவன்பட்டிக் கோவில், வேலங்குடிக் கோவில்) குன்றக்குடிக்கு அருகிலேயே அமைந்துள்ளன.

ஒரே கோவிலைச் சேர்ந்த எல்லா ஆண்களும் 'பெரும் (கோவில்) பங்காளிகள்' எனப்படுவர். கோவிலின் உட்பிரிவைச் சார்ந்தவர்கள் 'பங்காளிகள்' எனப்படுவர்.

எனவே, பங்காளிகளுக்குள் பெண் எடுக்கக்கூடாது. ஏனெனில் அது சகோதரப் பாசமாகும். ஆனால், பங்காளிக்குள் தத்து எடுத்துக் கொள்ளலாம். (சுவீகாரம் செய்தல்)

இதுகாறும் கூறியவற்றிலிருந்து நகரத்தார்களும் கோவில்களும் நகமும், சதையும் போன்றவை - பிரிக்க முடியாதவை என்பதை உணரலாம்.

நகரத்தார்கள் கோவிலுக்குச் செய்வதைப் பூர்வ புண்ணியமாக, பிறவிப்பயனாகக் கருதினார்கள்.

கி.பி.15-ஆம் நூற்றாண்டில் திருநெல்வேலியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்த பராக்கிரம பாண்டியன் தென்காசியில் விசுவநாதருக்கு ஓர் ஆலயம் எழுப்பினான். வருங்காலத்தில் கோவிலையும், ஒன்பது நிலைகளை உடைய இராசகோபுரத்தையும், கவனிப்பாரன்றிச் சிதிலம் அடைந்து விட்டால் என்ன ஆவது என்று கவலைப்பட்டான். அதனைக் கல்வெட்டில் பொறித்து வைத்தான்.

அது இது :

**ஆராயினும் இந்தத் தென்காசி மேவு பொன்ஆலயத்து**
**வாராதோர் குற்றம் வந்தால் அப்போது அங்கு தந்ததனை**
**நேராகவே ஒழித்துப் புரப்பார்களைத் துதியுடன்**
**பாரார்அறியப் பணிந்தேன் பராக்கிரமப் பாண்டியனே!**

இக்கோவிலைப் பழுது பார்ப்பவர்கள் காலில் விழுந்து வணங்குவேன் என்றான் மன்னன். அரசனுக்குத் திருக்கோவில் பணியில் எவ்வளவு ஈடுபாடு!

இதற்குச் சற்றும் குறையாத ஈடுபாடு நகரத்தார்களுக்கு. தங்களுக்குப் பின்னும் இப்பணி முட்டின்றி நடைபெற ஏராளமான சொத்துக்களை அக்கோவில்களுக்கு வழங்கினர். தங்களின் வாரிசுகளையும் கோவில் திருப்பணிகளில் ஈடுபடச் செய்தனர்.

"நகரத்தாரின் ஒன்பது கோவில்கள் திருப்பணிப் பெருமைக்கு இக்கோவில்கள் கட்டியம் கூறுவன. நகரத்தார்கள் செய்திருக்கிற திருப்பணிகள் காவியப் பெருமை உடையன. நகரத்தார் சமூக

*அமைப்பு ஒன்பது கோவில்களை அடிப்படையாகக் கொண்டது. இவர்கள் ஒரு கட்டமைப்புடைய சமூகமாகச் சிறந்து விளங்குவதற்கு இந்த ஒன்பது கோவிற் கட்டமைப்பு துணையாக அமைகிறது".*

- தமிழவேள் முனைவர் ச. மெய்யப்பன்
(நன்றி : வயிவரன் கோவில்)

*"நகரத்தார்களின் பக்திப் பெருக்கீடு சிற்பிகளின் கைவண்ணம் தமிழகத்தில் அழிந்துவிடாமல் காத்தது. ஆதலின் தமிழகத்தின் தெய்வீகக் கலைகள் அழிந்துவிடாமல் காத்த நகரத்தார் கோவில்கள் இருந்த பகுதியே சிற்பிகளின் தலைமை இடமாயிற்று"*

- முனைவர் இரா. நாகசாமி
(நன்றி : மேற்படி நூல்)

## ஒன்பது நகரக்கோவில்கள் எவ்வாறு வந்தன?

*'நகரத்தார்களைக் கோவிலைக்கொண்டு பிரிக்கும் முறை எவ்வாறு உண்டானது?' என்ற இராயவரம் கும. இராமனாதன் வினாவிற்குப் 'பூச்சரம்' செப்டம்பர் 2009 இதழில், அதன் சிறப்பாசிரியர் பேரா. தெ. சொக்கலிங்கம் அளித்துள்ள பதில் வருமாறு :*

*நகரத்தார்களின் தொன்மையான பூர்வீக வாழ்விடம் செட்டி நாடே. நகரத்தார்கள் கி.பி.1200 முதல் இப்பகுதியில் வாழ்ந்தமைக்குக் கல்வெட்டு ஆதாரங்கள் கிடைக்கின்றன. இவர்கள் 'செட்டியார்கள்' என்று அழைக்கப்பெறாமல், 'ஐந்நூற்றுவர்' என்று வழங்கப்பெற்றனர். 'திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர்' என்ற வணிகக்குழுவில் பங்குபெற்றுப் பல இடங்களில் வணிகம் செய்தனர். கடல் கடந்து நாடுகளுக்குச் சென்றனர். தமிழகத்தில் உள்ள கடற்கரை நகரங்களில் தங்கியும் பெரும் அளவில் வியாபாரம் செய்தனர்.*

*உள்நாட்டில் இருந்து வாணிகம் செய்த நகரத்தார்கள், தாங்கள் வியாபாரத்துக்குப் போனபோது ஏதோ ஒரு வட்டாரத்தைத் தேர்ந்தெடுத்து அப்பகுதியில் வணிகம் செய்தனர். தங்கள் வியாபாரத்தில் ஒரு பகுதியைக் கோவிலுக்குக் கொடுத்தனர். மிளகு, பாக்கு போன்ற பொருள்களில் வரியாக ஒரு பகுதியைக் கோவிலுக்கு வழங்கிவிட்டு வணிகத்தைத் தொடர்ந்தனர்.*

*ஒரே பகுதியில் வணிகம் செய்தபோது அங்கிருந்த சிவன் கோவிலுக்கு ஒரு பகுதியைத் திருவிளக்கு எரிக்க காணிக்கையாகக்*

கொடுத்தனர். ஒருவர் மட்டுமன்றி, அவரோடு தொடர்புடைய பலரும் இவ்வாறு பொருள் வழங்கினர். இதன் மூலம் சிறுகச் சிறுக கோவிலில் வணிகர்கள் ஈடுபாடு காட்டலாயினர். ஒரு கொடியில் வளர்ந்த பலரும் அக்கோவிலைக் கொண்டாடினர். இதனால், அக்கோவிலே இந்தக் குடும்பதை, குழுவைச் சார்ந்தவர்களுக்குரிய கோவிலாகியது. நாளடைவில் எல்லா உரிமைகளும் இவர்கள் வசம் வந்தன. பிற இனத்தார் சிறு தெய்வ வழிபாட்டிலேயே ஈடுபாடு காட்டியபோது, இவர்கள் சிவ வழிபாட்டில் ஈடுபட்டனர். இதனால் இன்ன கோவிலைக் கும்பிடுவோர் இன்ன கோவிலார் என்று அடையாளம் காட்டப் பெற்றனர். ஒன்பது நகரக் கோவில்கள் நகரத்தார்களுக்கு இவ்வாறுதான் வந்தன.

(நன்றி : பூச்சரம் செப்டம்பர் 2009)

இக்கருத்து சரிதானா என்பதை அறிஞர்கள் ஆராய்க.





# இளையாத்தங்குடி கோவில்

நகரத்தார் கோவில்கள் ஒன்பதிலும் காலத்தால் முந்திய முதற்கோவில் இளையாத்தங்குடிக் கோவில்.

நகரத்தார்கள் பாண்டிய நாடு வந்து முதன்முதலில் குடியேறிய இடம் இதுவாகும்.

சோழ நாட்டில் பூம்புகாரில் வாழ்ந்து வந்த நகரத்தார்கள் பாண்டிய நாட்டுக்கு வரக் காரணம் என்ன?

எந்த சோழ மன்னனுக்காக காஞ்சிபுரத்திலிருந்து பூம்புகாருக்கு நகரத்தார்கள் வந்தார்களோ, அந்தச் சோழ மன்னர்களாலேயே தங்களுக்குத் தொல்லை ஏற்பட்டது கண்டு நகரத்தார்கள் மனம் உடைந்தார்கள்.

சிறந்த பக்திமான்களான அவர்கள், தங்கள் குறைகளை இறைவனிடம் சொல்லி முறையிட்டார்கள். நகரத்தார்கள், பக்தியையும், இறைத் தொண்டையுமே தங்கள் கடமையாக நினைப்பவர்கள்.

தாங்கள் வசிக்கும் பகுதியில் உள்ள ஆயிரக்கணக்கான கோவில்களுக்கு லட்சக்கணக்கில் செலவு செய்து புணருத்தாரணம் (திருப்பணி) செய்பவர்கள் ஆயிற்றே!

கற்புக்கரசி கண்ணகி பிறந்த பூமியில் இருந்த அவர்களை, அதே கண்ணகி தன் கற்புத்திறம் காட்டிக் கடவுள் தன்மை அடைந்த இடத்திற்கு அழைத்துக் கொள்ள முடிவெடுத்தான் இறைவன்.

சிதம்பரத்தில் வாழ்ந்த அகோர சிவாச்சாரியாரிடம் தங்கள் நிலையை நகரத்தார்கள் கூறினர். இத் துன்பத்திலிருந்து விடுபட அவரிடம் வழி கேட்டனர்.

*சூரபத்மனால் ஏற்பட்ட துன்பத்திற்கு ஆளான தேவர்கள் இளைப்பாறிய ஊரான இளையாத்தங்குடிக்கு நகரத்தார்களைச் செல்ல அகோர சிவாச்சாரியார் பணித்தார்.*

*ஏனெனில், சோழ மன்னனால் ஏற்பட்ட துன்பத்திற்கு ஆளான நகரத்தார்கள் இளைப்பாற சரியான இடம் இளையாத்தங்குடியே என அவர் நினைத்து அங்கு செல்லுமாறு கூறினார்.*

(நன்றி : இணையற்ற இளையாத்தங்குடி -
டாக்டர் எஸ்.ஏ.பி.ஜவகர் பழனியப்பன்)

*அசுரர்களின் துன்பத்தில் வருந்திய தேவர்களின் இளைப்பை ஆற்றியதால், இவ்வூர் 'இளையாத்தங்குடி' என வழங்குவதாகத் தலபுராணம் கூறுகிறது.*

*இவ்வூருக்கு 'சிவபுரம், பூகைலாயம், காமபிரபூரணபுரம், சித்தபுரம், புராதனவனம், நித்தியகல்யாணபுரம், சிரமாப நோதனபுரம்' எனப் பல பெயர்கள் உள்ளதாக 'இளையாத்தங்குடி மான்மியம் என்ற இளசைப் புராணம்' குறிப்பிடுகின்றது.*

"சோழநிலாப் புகார் விடுத்துப்
பாண்டி நாட்டில்
தொன்மைமிகு தமிழ்ச்சைவக்
குடியோர் முன்னாள்
வாழவரும் போதவரின்
இளைப்பை மாற்றி
வளம்சேர்க்கும் நித்தியகலியாணி அம்பாள்
சூழ நிறை கயிலாயநாதன் தன்னை
சுடர் விளக்கைத்
தொன்மையான மரபைப் போற்றும்
ஏழகத்தார் சிறக்க வைக்கும்
இறைவன் தன்னை
இளையாத்தங் குடிநகரில்
வணங்கு வோமே

*என இளையாத்தங்குடி பெயர்க் காரணத்தைக் கவிஞர் சித.சிதம்பரம் குறிப்பிடுகிறார்.*

- (நன்றி : நகரக்கோயில் ஒன்பது திருப்பதிகம்)

*"27 நட்சத்திரங்கள், 9 கோள்கள் (நவக்கிரகங்கள்), 12 இராசிகள் இவற்றால் உண்டாகும் கேடுகளை நீக்கி, நன்மைகள் பெருக*

வேண்டுமாயின், நித்தியகல்யாணி உடனாய கைலாசநாதரை இளையாத்தங்குடி சென்று வணங்குங்கள்" என்கிறார் கவிஞர் சித.சிதம்பரம்.

(நன்றி : நகரக்கோயில் ஒன்பது திருப்பதிகம்)

"பாண்டிய மன்னன் மாறவர்மன் குலசேகர பாண்டியன் நினைவாக இளையாத்தங்குடி 'குலசேகரபுரம்' என்றும் அழைக்கப்பெற்றது.

பாண்டியர் கல்வெட்டுக்களில், சிவன் கோவில் 'கல்வாயில் ஆண்ட நாயனார் கோவில்' என்றும், இறைவன் 'ஸ்ரீ கைலாசமுடைய நாயனார்' என்றும், இறைவி 'திருக்காமக் கோட்ட நாச்சியார்' என்றும், பழைய பழுதடைந்த பெருமாள் கோவில் 'விண்ணகர் எம்பெருமான் கோவில்' என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

இங்கு சைவம், வைணவம் மட்டுமன்றி, பௌத்தம், சமணம் சமயங்களும் தழைத்திருந்தன" என்கிறார் கோவில் கலைச்செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நகரத்தார் மரபும் பண்பாடும்)

காவிரிப்பூம்பட்டினம் செல்வதற்கு முன் காஞ்சிபுரத்தில் சமண சமயத்தைத் தழுவிய பிறகு மீண்டும் சைவ சமயத்திற்கே வந்திருப்பதாகக் கம்பன் அடிப்பொடியும், முனைவர் தமிழண்ணலும் கருதுகின்றனர் என்கிறார் முனைவர் வ. தேனப்பன்.

(நன்றி : 'ஒன்பது நகரக்கோவில்கள்' - ஆய்வேட்டு நூல்)

இளையாத்தங்குடி சென்ற பிறகும், சிலரிடம் சமண வழிபாடு இருந்திருக்கிறது. அங்கு தற்பொழுது ஆய்வாளரால் கண்டுபிடிக்கப்பட்ட சமணர் சிலையும் ஒரு சான்றாகிறது. அது கண்டுபிடிக்கப்பட்ட இடத்திற்கு 'சமணக்காடு' என்று பெயராகும்.

(நன்றி : முனைவர் வ. தேனப்பன் 'ஒன்பது நகரக்கோவில்கள்')

காஞ்சி மடத்தில் 1851 முதல் 1890 வரை அருளாட்சி செய்த 65வது ஆச்சாரியார் ஸ்ரீ மகாதேவேந்திர சரசுவதி சுவாமிகள் இத்தலத்தில் முக்தி அடைந்திருக்கிறார்கள்.

68வது குருமகா சந்நிதானம், மகாப் பெரியவர் காஞ்சி முனிவர் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரசுவதி சுவாமிகள் இத்தலத்தில் ஆன்மீக வித்துவசுஸ் நடத்தினார்கள்.

"நகரத்தார்கள் கோவிலைச் சார்ந்து வாழும் குடிகள். அவர்கள் தங்கள் கோத்திரப் பிரிவுகளையே இவ்வாறு கோவில்களின் பேரால் அமைத்துக் கொண்டவர்கள்.

பரிமேலழகர் மூவேந்தர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, 'படைப்புக்காலம் தொட்டு சிறப்புற்று விளங்கி வரும் குடிகள்' எனக் குறிப்பிடுவார். மன்னர் பின்னோராகிய நகரத்தாரும் 'இளையாத்தங்குடியார், மாத்தூர் அரும்பாக்கூருடையார்' எனக் குலமரபு கூறப்படுதலான், இவர்களும் படைப்புக்காலம் தொட்டு மேம்பட்டு வரும் குடிகளே என எண்ணத் தோன்றுகிறது.

நகரக்கோவில்கள் நீதிமன்றங்களாகவும் செயல்பட்டன. நகரத்தார்களின் கோவில் நிர்வாகம் பற்றி அறிந்தால் பலரும் வியப்படைவர்" என்கிறார் முனைவர் தமிழண்ணல்.

(நன்றி : 'ஒன்பது நகரக் கோவில்கள்' அணிந்துரை - முனைவர் தமிழண்ணல்)

'நகர்' என்னும் சொல்லுக்கு கோவில் என்ற ஒரு பொருளுண்டு. கோவிலையே தங்களது ஆதி முதலாகக்கொண்டு, அவற்றின் அடிப்படையிலேயே 22 கோத்திரங்களாக வாழும் நாட்டுக்கோட்டை செட்டியார்களை 'நகரத்தார்' என்றழைப்பர். நகரத்தார்கள் தங்கள் பிரிவுகளுக்கு அடையாளமாகப் பேணிப் பாதுகாத்து வளர்த்து வரும் கோவில்கள், "நகரக் கோவில்கள் என வழங்கப் பெற்றன" என்கிறார் முனைவர் வ. தேனப்பன்.

(நன்றி : 'ஒன்பது நகரக்கோவில்கள்')

"உலகத்தில் மிகவும் சிறு தொகையினரான ஒரு மரபினர் மிகப்பெரும் அளவில் அறப்பணிகளையும், திருப்பணிகளையும் செய்துள்ளது பற்றி ஓர் ஆய்வு செய்தால், அதில் முதலிடத்தை நகரத்தார் சமூகத்தினர்தான் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை" என வியந்து பாராட்டுகிறார் தொல்பொருள் ஆய்வாளர் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நகரத்தார் மரபும் பண்பாடும்)

"பல மன்னர்களிடம் குடிமக்களாக இருந்து பலவாறு துன்புற்ற நகரத்தார்கள், துன்பமில்லாத வாழ்வு வாழ, இறைவனது குடிமக்களாக மாறுவது ஒன்றே வழி எனக் கண்டனர்" என்கிறார் முனைவர் வ. தேனப்பன்.

(நன்றி : 'ஒன்பது நகரக்கோவில்கள்')

அதாவது இறைவனையே தலைவனாகக் கொண்டு, கோவிலையே முதன்மையாய்க் கொண்டு வாழ முடிவு செய்து நகரக் கோவில்களை ஏற்படுத்தினார்கள். சுருங்கச் சொல்லின் 'நாமார்க்கும் குடியல்லோம்' என்ற திருநாவுக்கரசர் கருத்துப்படி வாழத் தலைப்பட்டனர்.

"இரணியூர்க் கோவில், பிள்ளையார்பட்டிக் கோவில் தவிர, பிற ஏழு நகரக் கோவில்களும் கி.பி. 8ஆம் நூற்றாண்டிலிருந்து நகரத்தார்களால் பேணிப் பாதுகாத்து வரப் பெறுகின்றன.

நகரத்தார்கள் தங்களது சமூகக் கட்டுதிட்டங்கள் வகுக்கின்ற சட்டமன்றமாகவும், ஆட்சி மன்றமாகவும், நீதி மன்றமாகவும் இக்கோவில்களை அமைத்திருந்தனர்.

நகரக் கோவில்கள் மிகுதியான சமய, சமுதாயப் பணிகளை ஆற்றி வருகின்றன.

பழமையைப் போற்றும் மரபு காணப்படுவதால் ஆகமங்களில் குறிப்பிட்டுள்ளது போன்ற வழிபாடுகள், விழாக்கள் நகரக் கோவில்களில் நடைபெற்று வருகின்றன. வீடு பேறு அடைய வழிகாட்டும் முழுமையான வழிபாட்டு முறைகள் ஒன்பது நகரக் கோவில்களிலும் காணப்படுகின்றன" எனப் பதிவு செய்கிறார் முனைவர் வ. தேனப்பன்.

(நன்றி : 'ஒன்பது நகரக்கோவில்கள்')

அரசர்களுடன் ஏற்பட்ட முரண்பாடுகளால் மனம் வெறுத்த நகரத்தார்கள், மாதா, பிதா, குரு, தெய்வம், குல தேவதை - இவர்களை மட்டுமே வணங்குவது என சாதிமுறை நியாயத்தை நிருணயம் செய்து கொண்டார்கள்.

இதனைக் 'கண்ணுடையம்மன் பள்ளு'

"மாதா பிதா குரு தெய்வம்
தன்னை வணங்குவதல்லால்
விம்பமா முடிவேந்தரையும்
புவி மீதினில் வணங்காத நகரம்"

எனக் குறிப்பிடுகின்றது.

*இதே கருத்தைப் பாடுவார் முத்தப்பர் தன் 'திருமுக விலாச'த்தில்,*

**"அன்னை தந்தை தெய்வம் முதல்
ஆசானைப் போற்றுதலால்
மன்னவரைக்கூட வணங்காதவர்"**

*என்கிறார்.*

*"கோவில் வழியாகக் குடிகளை அமைத்துக் கொண்ட ஒப்பற்ற நாகரிகம் இன்று நகரத்தார் சமூகத்தில்தான் நிலவுகிறது. அதனால் அச் சமூகத்தினர் திருக்கோவில்களுக்கு வழங்குவதில் கணக்குப் பார்ப்பதில்லை. வழங்குவதோடு மட்டுமின்றி முறையாக வழிபாடுகள் செய்வதிலும் ஈடுபட்டார்கள்" என நகரத்தார்களின் கோவில் ஈடுபாட்டைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிடுகிறார்.*

இளையாத்தங்குடியில் நகரத்தார்கள் வாழ்ந்தபோது, அவர்களுக்குள் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அதனால் பிரிந்து தங்களுக்கென ஆறு கோவில்களைக் (மாத்தூர், இலுப்பைக்குடி, வேலங்குடி, நேமம், சூரக்குடி, வைரவன்பட்டி) கட்டிக் கொண்டனர். பின்னர் இளையாத்தங்குடி திருவேட்பூருடையார்கள் இரு பிரிவாகப் பிரிந்தனர். அவர்கள் தங்களுக்கென கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பிள்ளையார்ப்பட்டி, இரணியூர் ஆகிய இடங்களில் கோவில்களைக் கட்டிக் கொண்டனர். எனவே ஏழு நகரக்கோவில்கள் ஒன்பதாயிற்று.

ஆனாலும் இளையாத்தங்குடிக் கோவில்தான் நகரத்தார்களின் தலைமைக் கோவிலாகும்.

இளையாத்தங்குடி என்ற ஊர் மூன்று பிரிவுகளை உடைய ஊராகும். ஒன்று - தெற்கு இளையாத்தங்குடி. இரண்டு - வடக்கு இளையாத்தங்குடி. மூன்று - கோயில் இளையாத்தங்குடி. இதனை அடுத்து சமணக்காடு என்ற பகுதி உள்ளது.

கோவில் இளையாத்தங்குடியில்தான் நகரத்தார்களின் முதல் கோவில் அமைந்துள்ளது.

இத் தலத்தைப் பற்றிக் கணேச பண்டிதர் 'இளசைப் புராணம்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

விசுவநாத அய்யர் 'இளையாத்தங்குடி மான்மியம்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

புகழ் பெற்ற வணிகர்கள் 38 பேரின் கதையைச் சூடாமணிப் புலவர் 'வைசிய புராணம்' என்ற பெயரில் பாடியுள்ளார்.

இப்புராணங்களின் மூலம் இளையாத்தங்குடி கோவிலின் சிறப்பை நாம் அறியலாம்.

இளையாத்தங்குடி கோவில் நகரத்தார்கள் ஏழு பிரிவினராக உள்ளனர். (ஆதியில் எட்டுப் பிரிவினராய் இருந்தனர். திருவேட்பூருடையார் பிரிந்து சென்றதால் ஏழு பிரிவாயினர்)

இவர்கள் ஒவ்வொரு பிரிவினரும் தங்களுக்கென்று தனித்தனியே விநாயகர் கோவிலும், ஊருணியும் அமைத்துள்ளனர்.

இளையாத்தங்குடிக் கோவில் நகரத்தார்கள் பிரிவு வருமாறு :

(1) ஒக்கூருடையார் (2) பட்டணசாமியார் (3) பெருமருதூருடையார் (4) கழனிவாசக்குடியார் (5) கிங்கிணிக்கூருடையார் (6) பேர செந்தூருடையார் (7) சிறு சேத்தூருடையார்.

இதில் கிங்கிணிக் கூருடையார் அமைத்த விநாயகர் 'சுந்தர விநாயகர்' என்றழைக்கப்படுகிறார்கள்.

ஏனைய பிரிவினர் அமைத்த விநாயகர்கள் 'கைலாச விநாயகர்' என்றழைக்கப்படுகிறார்கள்.

இக்கோவில் கழனிவாசல் பிரிவினர் 'ஆதிகேசவப் பெருமாள் கோவிலை'க் கட்டியுள்ளனர். இது நகரத்தார்களின் சமயப்பொறைக்கு எடுத்துக்காட்டாகும். இக்கோவிலில் இப்பிரிவைச் சார்ந்த நாட்டரசன்கோட்டை நகரத்தார்கள் ஒவ்வொரு ஆண்டும் புரட்டாசி மாதத்தில் இராமாயணச் சொற்பொழிவை நடத்துகின்றனர். இந் நூலாசிரியருக்கும் இவ்வாய்ப்பு கிடைத்தது.

செட்டிநாட்டுக் கலைஞர்களின் ஆற்றலை இக்கோவிலில் காணலாம்.

கல்லில் யானைகளை வடித்து வைத்துள்ளனர். மற்ற கோவில்களை விட, கல் யானைகளின் எண்ணிக்கை அதிகம். யானைகளைப் போலவே சீறும் சிங்கங்களையும் கல்லில் வடித்து வைத்துள்ளனர்.

குரங்குகளின் பல்வேறு வடிவங்களை உணர்வுபூர்வமாகக் கல்லில் வடித்துள்ளனர்.

உயிர்த்தெழும் உடும்பு, கலைமான், பிணைமான், பாயும் குதிரை, பறக்கும் பறவை, பேசும் கிளி, ஆடும் மயில், குரைக்கும் நாய், வஞ்சக நரி, இலை தின்னும் ஆடு, துள்ளும் மான், படமெடுக்கும் பாம்பு, யாளி முதலியவற்றையும் கல்லிலே வடித்துள்ளனர்.

சோழர்காலக் கலைப்பாணி, பாண்டியர் காலக் கலைப்பாணி என்பதைப்போல, இதனை நகரத்தார் காலக் கலைப்பாணி எனலாம்.

எதிலும் தனித்துவம் பெற்ற நகரத்தார், கோவில் கட்டுவதிலும் தனிப்பாணியைக் கடைப்பிடித்துள்ளனர்.

இனி அங்குள்ள தெய்வங்களையும், கோவில்களையும் தரிசிப்போம்.

## கைலாசநாதர் கோவில்

இளையாத்தங்குடி நகரத்தார்கள் வணங்கும் சிவபெருமான் 'கைலாச நாதர்' என அழைக்கப்படுகிறார்.

"கயிலைக்கு நிகரான பெருமை மிக்க தலம் இளையாத்தங்குடி என்பதால், அங்கு காட்சி தந்த இறைவன் 'கைலாச நாதர்' எனப் போற்றப்படுகிறார்" என்கிறார் டாக்டர் எஸ்.ஏ.பி. ஜவகர் பழநியப்பன்.

**(நன்றி : இணையற்ற இளையாத்தங்குடி)**

கைலாசநாதர் கோவில் அமைப்பு பின்வருமாறு உள்ளது.

கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், நடராசர் சபை, முக மண்டபம், கொலு மண்டபம், பைரவர் சன்னதி, பள்ளியறை, அம்மன் சன்னதி, மேல்ச்சுற்றுப்பிரகாரம், தட்சிணாமூர்த்தி மண்டபம், பரிவார சன்னதிகள், சோமாஸ்கந்தர் சன்னதி, விசுவநாதர் மண்டபம், திருச்சுற்றுப் பாதை, திருமாளிகைப் பத்தி, அம்மன் கோபுரம், நந்தி மண்டபம், பலி பீடம், கொடி மரம், இரு விநாயகர் சன்னதிகள், மங்களேசுவரி உடனாய அரசமங்களநாதர் சன்னதி ஆகிய பகுதிகள் உள்ளன.

கோவில் உள்ளே வாகன அறை, மடைப்பள்ளி, நிர்வாக அறை, கிணறு உள்ளது.

கம்பீரமான இராசகோபுரம், திருச்சுற்று மதில், வெளி மண்டபம், விடுதி, நந்தவனம், பசுமடம், கோவில் பணியாளர் குடியிருப்பு முதலியன உள்ளன.

எல்லாச் சிவன் கோவில்களிலும் உள்ளது போலத் தெய்வ உருவங்கள் இக்கோவிலில் அமைக்கப்பட்டுள்ளன. இங்கு திருமால் தன் தேவி இலக்குமியுடன் நின்ற கோலத்தில் உள்ளார்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் நீண்ட மேடைமீது வைக்கப்பட்டுள்ளனர். இவர்களுக்கு நித்திய பூசை நடைபெறுகிறது. இது வேறு எந்தச் சிவன் கோவிலிலும் காண இயலாத காட்சியாகும். எனவே, இவ்வழிபாடு இக்கோவிலின் தனிச்சிறப்பாகும்.

முக மண்டபத்தில் நகரத்தார்களின் குரு பாதரக்குடி சேனாபதி சுவாமிகளின் உருவம் உள்ளது.

கொலு மண்டபத்தில் கலால்பேட்டை ஜமீந்தார் பெரிய நம்பித் தேவர் உருவமும், இளையாத்தங்குடி ஜமீந்தார் உருவமும் உள்ளது.

இவ் உருவங்கள் அனைத்தும் சுவாமியையும், அம்பாளையும் வணங்கும் நிலையில் அமைக்கப்பட்டுள்ளன.

இக்கோவிலுக்கு அருகில் இளையாத்தங்குடி கழனிவாசல் பிரிவினருக்குரிய "ஆதிகேசவப் பெருமாள்" கோவில் உள்ளது.

இளையாத்தங்குடிக் கோவில் பட்டினசாமிப் பிரிவினர்களுக் குரிய ஆத்மநாதர் உடனாய சௌந்தரநாயகி அம்பாள் கோவில் (சிவன் கோவில்) உள்ளது.

இச்சிவன் கோவில் அருகில் காஞ்சி மடத்தின் 65வது ஆச்சார்ய சுவாமிகள் ஸ்ரீ மகாதேவேந்திர சரசுவதி சுவாமிகளின் அதிட்டானம் உள்ளது.

கைலாசநாதர் லிங்கம் ஏறத்தாழ 800 ஆண்டுகள் பழமை வாய்ந்தது என்று கூறுகின்றனர். நாள்தோறும் 5 காலப்பூசை நடைபெறுகிறது.

கைலாசநாதர் கோவில் விமானம் அதிட்டானம், சுவர், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என ஆறு பகுதிகளைக் கொண்டு கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

இங்கு 'கோமுகி' என்னும் நீர்ப்பாதை உள்ளது. அபிசேக நீர் கோமுகியின் வழியாகப் புனித நீர்த்தொட்டியை அடைகிறது. அத்தொட்டியில் உள்ள சாளரத்தின் வழியாகத் திருமதிலை அடைந்து வெளியேறுகிறது.

அபிசேக நீர் யார் காலிலும் மிதிபடாமலும், கோவிலின் புனிதத்தன்மை கெடாமலும், சாளரத் துவாரங்கள் வழியாக வெளியேறும்படி அமைக்கப்பட்டுள்ள பாங்கு வியப்புக்குரியதாய் உள்ளது.

கோவிலைப் புனிதமான இடமாக நகரத்தார்கள் கருதினர் என்பதற்கு இது தக்க சான்றாகும்.

தெய்வக் குற்றத்திற்குப் பயப்படாதவர்கள் யாரேனும் உண்டா?

கோமுகி என்றால் நீர்த்தாரை அல்லது நீர் செல்லும் பாதை என்று பொருள்.

கைலாசநாதர் கோவில் அதிட்டானம் முதல் கூரைவரை வெள்ளைக்கல் திருப்பணியாகும்.

நடராசர் சன்னதியின் உட்கூரைப்பகுதி சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது.

"கூரையின் உட்பகுதியை மரச்சாத்துக்களை அறுத்து அமைத்ததைப் போன்று, கல் கம்பிகளைக் கொண்டு இணைத்துள்ள பாங்கு வியக்கத்தக்கது. கல் சாத்துக்களின் ஓரங்களில் கல் ஆணி மற்றும் பலவகை மலர்களையும் செதுக்கி வைத்துள்ளனர். கற்களைக் கொண்டு இவ்விதம் நுட்பமான வேலைப்பாட்டுடன் கற்கூரைகளை அமைக்கும் திறன் செட்டிநாட்டுச் சிற்பிகளின் கைவினைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது" எனக் குறிப்பிடுகிறார் கோவில் கலைச்செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

நடராசர் சன்னதியில் கூரைமேல் உள்ள யாளி வரிகளும், அதன் முனைகளில் உள்ள மகரத்தலைக் கட்டுகளும் காண்பவரை எளிதில் கவரும் வண்ணம் வடிக்கப்பட்டுள்ளது.

"இம்மண்டபத் தூணில் அழகிய சிற்ப வடிவங்களைக் காணலாம். அதில் ஒன்று மான் சிற்பம். இம் மான் சிற்பத்தில் ஒரு பக்கம் மானின் உடலை மறைத்துப் பார்த்தால் ஆண் மானாகிய கலைமான் கொம்புகளுடன் தெரிகிறது. மறுபக்கம் உடலை மறைத்துப் பார்த்தால் பெண் மானாகிய பிணைமான் தெரிகிறது. கொம்புகள் இன்றி இம் மான் வடிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு ஒரு தலை, இரண்டு உடல்கள் கொண்டு வடித்துள்ள சிற்பியின் ஆற்றல்

போற்றுதலுக்குரியது. இதுவும் நகரத்தார்களின் சிற்பக் கலைக்குச் சான்றாகும்" என்கிறார் கோயில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

"பொதுவாக மானின் உருவங்களை தட்சிணாமூர்த்தி அமர்ந்துள்ள கயிலை மலையில் காட்டுவது வழக்கம். இதற்கு மாறாக இங்கு தூணில் மான்களைக் காட்டியுள்ளனர்" என மேலும் நுணுக்கமாகக் குறிப்பிடுகிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

"இத்தகைய கல்மண்டபங்கள் நகரத்தார்களின் தனிக் கலைப் பாணியை அடையாளம் காட்டும் அங்கமாக அமைந்துள்ளன" எனவும் மதிப்பீடு செய்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

## நித்திய கலியாணி அம்மன்

இளையாத்தங்குடிக் கோவில் அம்மன் நித்திய கலியாணி என்றழைக்கப்படுகிறார்.

"எப்போதும் ஈசனை நீங்காதவளாக, அனைத்து மங்களங்களையும் அருளுபவளாக அம்பிகை விளங்குவதால் நித்திய கலியாணி என்று அழைக்கப்படுகிறாள்" என்கிறார் டாக்டர் எஸ்.ஏ.பி. ஜவகர் பழநியப்பன்.

(நன்றி : இணையற்ற இளையாத்தங்குடி)

பள்ளியறையை அடுத்து அம்மன் ஆலயம் உள்ளது. அம்மனின் கருவறை சதுர வடிவில் உள்ளது.

அம்மன் இரு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளாள். வலக்கரத்தில் நீலோற்பவ மலர் உள்ளது. இடக்கரம் தாழ்ந்து முழங்கால்வரை நீண்டுள்ளது. காதுகளில் மகரக் குண்டலங்கள் உள்ளன. கழுத்தில் மங்கல நாண் உள்ளது. தலையில் மகுட அலங்காரம் உள்ளது. கைகளில் வளையல்கள், கால்களில் தண்டை ஆகிய அணிகலன்கள் உள்ளன. சர்வ அலங்காரத்தில் காட்சி தரும் அமமனின் முகத்தில் இளம் முறுவல் காணப்படுகிறது. இது அவளின் அருள் நோக்கைக் காட்டுகிறது.

அம்மன் கோவில் முகமண்டபத்தை மேஷம் முதல் மீனம் முடிய உள்ள 12 இராசி மண்டலம் அலங்கரிக்கிறது.

பெருமானுக்கு வாகனமாய் உள்ள நந்தி அம்மனுக்கு எதிரே உள்ளது.

இராசி மண்டலத்தை அடுத்து, ஒரே கல்லில் மிக நேர்த்தியாக வேலைப்பாடு செய்யப்பெற்ற கற் சங்கிலி உள்ளது.

அம்மன் கோவில் கோபுரம் மூன்று நிலைகளை உடையது. இங்கு தூண் சிற்பங்கள் பல உள்ளன. பிரகாரம் முழுவதும் சித்திரக்கால் தூண்கள் உள்ளன.

இத் தூண் சிற்பங்கள் பற்றிய பட்டியலைக் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி கீழ்க்கண்டவாறு கொடுத்துள்ளார்.

1. தூண் சிற்பங்கள்.

2. கொலு மண்டபம்.

3. நந்தி மண்டபம்.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

சிவபெருமானின் பரிவார தெய்வங்களை அட்ட பரிவாரங்கள் எனக் கூறுவர். இக்கோவிலில் சப்த மாதர்களைத் தவிர ஏனைய பரிவார தெய்வங்கள் உள்ளன. சூரியன், சந்திரன் தவிர ஏனைய பரிவார தெய்வங்களுக்குச் சிறு ஆலயங்கள் எழுப்பி உள்ளனர்.

இங்குள்ள விநாயகர் நான்கு கரங்களுடன் விளங்குகிறார். அவரின் மேல் வலக்கரத்தில் பாசக் கயிறுள்ளது. கீழ் வலக்கரம் ஒடிந்த தந்தத்தைப் பற்றியுள்ளது. அவரின் மேல் இடக்கரத்தில் அங்குசம் உள்ளது. கீழ் இடக்கரம் மோதகம் ஏந்தும் நிலையில் உள்ளது.

இவர் இடப்புரி விநாயகராவார்.

இவரின் தம்பி சுப்பிரமணியர் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். அவருடைய இரு தேவிகளான வள்ளியும், தெய்வானையும் நின்ற கோலத்தில் உள்ளனர். தேவியர் இருவரும் ஒரு கரத்தில் மலரை ஏந்தி உள்ளனர். அவரின் பின்புறத்தில், மயில் நிற்கிறது. இவரின் வலப்புறம் வள்ளியும், இடப்புறம் தெய்வானையும் உள்ளனர்.

நான்கு திசைகளிலும் கஜலெட்சுமியின் வடிவச் சிற்பங்கள் உள்ளன. கஜலெட்சுமியின் இரு பக்கங்களிலும் இரு யானைகள் கலசத்தை ஏந்தியவாறு உள்ளன.

சிவபூசையின் நிறைவையும், பலனையும் தரும் சண்டிகேசுவரர் சிவஆகம கோவில் விதிப்படி, சுற்றுப் பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில் இரு கரங்களுடன் காட்சி தருகிறார். அவரின் வலக்கரத்தில் மழுவாயுதம் உள்ளது. இடக்கரம் தொடையின்மீது உள்ளது.

நகரக் கோவில் ஒன்பதிலும் பைரவருக்குச் சிறப்பான இடமுண்டு. சான்றாக வைரவன்பட்டி நகரக் கோவிலைக் குறிப்பிடலாம்.

இறைவியின் காம கோட்டம் அமைய வேண்டிய இடத்தில் இங்கு பைரவர் சன்னதி உள்ளது.

சிவனுடைய 25 வடிவங்களில் பைரவரும் ஒன்று.

"பைரவரையும், வீரபத்திரரையும் சிவனின் மூர்த்த பேரங்களாகச் சிற்ப நூல்கள் விரித்துக் கூறும்" என்கிறார் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

இறைவன் பிரம்மனை ஒறுக்கும் (தண்டிக்கும்) வேளையில் தோன்றிய தோற்றமே பைரவர் தோற்றம். சிவபெருமான் பிரம்மனிடம் கோபம் கொண்டபோது, பிரம்மனின் தலையைக் கொய்ய பைரவரைப் பணித்ததாகச் சமய வரலாறு உண்டு.

இங்கு பைரவர் நின்ற கோலத்தில் நான்கு கரங்களில் கொடிய ஆயுதம் ஏந்திக் கோபத்துடன் காட்சி தருகிறார். மேல் வலக்கரத்தில் உடுக்கை, கீழ் வலக்கரத்தில் நீண்ட திரிசூலம், மேல் இடக்கரத்தில் கபாலக் கிண்ணம், கீழ் இடக்கரத்தில் பாசக்கயிறு முதலியவற்றை ஏந்தி காட்சி தருகிறார்.

ஆடை அணியாக் கோலத்தில் பைரவர் உள்ளார். அவருக்குப் பின்புறத்தில் அவரது வாகனமான நாய் உள்ளது. நான் மறைகளே நாய் வடிவில் பைரவருக்கு வாகனமாய் உள்ளதாகச் சமயச் சான்றோர் கூறுவர்.

நீண்ட நெடுங்காலமாகச் சூரிய வழிபாடு வழக்கத்தில் உள்ளது. காலையில் எழுந்து, காலைக் கடன்களை முடித்துப் பல் துலக்கி,

நெற்றி நிறைய விபூதி பூசி, சூரிய (நமஸ்காரம்) வழிபாடு செய்வது நகரத்தார்களின் வழக்கம். செட்டியாரும், ஆச்சியும் சூரியனை வணங்குவார்கள். வாழையடி வாழையாகத் தங்கள் பிள்ளை களுக்கும் இப் பழக்கத்தைச் சொல்லிக் கொடுப்பார்கள்.

சூரியனை வழிபடுவது கண்ணுக்கு நல்லது எனக் கற்றுக் கொடுப்பார்கள்.

"கண்ணு கெட்டதற்குப் பிறகா சூரிய நமஸ்காரம்" என்ற சொலவடையை நினைவூட்டுவார்கள்.

சூரியனுக்கு நன்றி தெரிவிக்கும் விழாதான் பொங்கல் விழா என்பதையும் கூறுவார்கள்.

தமிழில் தோன்றிய (எழுதப்பட்ட) சிலப்பதிகாரத்தில் (இது நரகத்தார் காப்பியமாகும்) இயற்கை வாழ்த்தாக

"ஞாயிறு போற்றுதும்
ஞாயிறு போற்றுதும்"

என ஞாயிறை வணங்குகிறார், வாழ்த்துகிறார்!

இவ் உலக இயக்கமே சூரியனாலேதான் நடைபெறுகிறது. இவ் உண்மையை நன்குணர்ந்த நகரத்தார்கள் சிவன் கோவிலில் சூரியனுக்குச் சன்னதி அமைத்து வழிபடுவதை வழக்கமாக்கினர்.

இக்கோவிலிலும் சூரியனுக்குச் சன்னதி உள்ளது.

சூரியனுக்கு உஷா, பிரத்யுஷா என இரு மனைவிகள் உண்டு என்றும், பிள்ளைகள் உண்டு என்றும் புராணங்கள் கூறுகின்றன. ஆனால், எல்லாச் சிவாலயங்களிலும் சூரியன் தனியாகத்தான் உள்ளார். அதுபோலவே, இங்கும் சூரியன் நின்ற கோலத்தில் காட்சி தந்து இன்னருள் புரிகிறார்.

நட்சத்திர நாயகனான சந்திரனைச் சோமன் என்றழைப்பர்.

சிலப்பதிகாரத்தில் இயற்கை வாழ்த்தாக இளங்கோவடிகள்,

"திங்களைப் போற்றுதும்
திங்களைப் போற்றுதும்"

என்று வாழ்த்துகிறார்.

பெண்களால் பெரிதும் விரும்பப்படுபவன் சந்திரன். சித்திரா பௌர்ணமி வழிபாடு பெண்களால் பெரிதும் கொண்டாடப்படும் விழாவாகும்.

எல்லாச் சிவாலயங்களிலும் இடம் பெற்றுள்ளதைப் போலவே, இக் கோவிலிலும் சந்திரன் நின்ற கோலத்தில் காட்சி தந்து இன்னருள் புரிகின்றான்.

பிற்காலப் பாண்டியர் காலத்தில் இங்கு ஒரு சிவன் கோவில் இருந்தது. கால வெள்ளத்தில் அது அழிந்து போனது. நகரத்தார்கள் இக் கோவிலைத் திருப்பணி செய்து 1939இல் புதுப்பித்தனர். இதனைக் கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது.

சிவனது குருமூர்த்தமே தட்சிணாமூர்த்தி எனப்படும். நவக்கிரகங்களில் இவர் "குரு பகவான்" என அழைக்கப்படுகிறார்.

குரு ஸ்தலமாக ஆலங்குடி சொல்லப்படுகிறது. செட்டி நாட்டின் குரு ஸ்தலம் பட்டமங்கலமாகும். இது "அட்டமாசித்தித்" தலம். இங்கு இறைவன் திருவிளையாடல் நடத்தினான். இதனை மாணிக்கவாசகரின் திருவாசகத்திலும், பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணத்திலும் நாம் காணலாம்.

எல்லாச் சிவன் கோவிலிலும் தட்சிணாமூர்த்தி தெற்குப் பக்கத்தில் வீற்றிருப்பார். அதனால் இவருக்குத் "தென்முகக் கடவுள்" என்று பெயர்.

ஆனால், பட்டமங்கலத்தில் இந்த ஆலமர்ச் செல்வர் தனிச் சன்னதியில் கிழக்கு முகமாய் வீற்றிருந்து அருள் பாலிக்கிறார்.

நான்கு விதமான தட்சிணாமூர்த்தி வடிவங்கள் உண்டு எனக் கோவில் ஆகம விதி நூல் குறிப்பிடுகிறது.

அவை : ஞான உபதேசம் செய்யும் ஞான தட்சிணாமூர்த்தி வடிவம்.

தியானத்தில் இருக்கும் யோக தட்சிணாமூர்த்தி வடிவம்.

வியாக்யானம் (விவாதமும், விளக்கமும்) செய்யும் வியாக்யான தட்சிணாமூர்த்தி வடிவம்.

இசையை உபதேசிக்கும் வீணாதர தட்சிணாமூர்த்தி வடிவம்.

இந் நால்வகையில் இக் கோவிலில் உள்ளவர் ஞான தட்சிணாமூர்த்தியாவார். இவர், ஆல விருட்சமும், சனகாதி முனிவர்களும், ஓலைச்சுவடியும் இன்றித் தனித்துக் காணப்படுகிறார்.

லிங்கோத்பவர் என்றழைக்கப்படும் அண்ணாமலையார் இக் கோவிலில் உள்ளார். அடி, முடி தேடிய திருமால், பிரம்மன், எவ் வடிவில் தேடிச் சென்றார்களோ அவ் வடிவைக் (வராகம், அன்னம்) குறிப்பாகக் காட்டியுள்ளனர்.

நான்கு முகங்களும், நான்கு கரங்களும் உடைய பிரம்மா இங்கு நின்ற கோலத்தில் காட்சி தருகிறார்.

நான்கு கரங்களுடன் விஷ்ணு துர்க்கை காட்சி தருகிறாள். துர்க்கையின் மேல் இரு கைகளில் ஆழியும், சங்கும் காணப்படுகிறது.

இக் கோவிலின் வாயில் காப்பவர்களாக ஸ்ரீ தண்டி, ஸ்ரீ முண்டி என்ற துவார பாலர்கள் உள்ளனர்.

அம்பாளின் அர்த்த மண்டப வாயிலை ஸ்ரீ வீரசக்தி, ஸ்ரீ விஜய சக்தி என்ற இரு துவார சக்திகள் காத்து நிற்கின்றனர்.

மேற்குப் பிரகாரத்தில் விசுவநாதர் மண்டபம் உள்ளது. இங்கு நீண்ட மேடை மீது வேதமூர்த்திகள், நாகர், இடம்புரி விநாயகர், நாகர், காசி விசாலாட்சி விசுவநாதர், பழைய சுப்பிரமணியர், பிட்சாடனர், சுந்தரர், துர்க்கை ஆகிய தெய்வ வடிவங்கள் உள்ளன. இவற்றிற்குத் தினம் பூசை நடைபெறுகிறது.

சிவபெருமானின் 25 மூர்த்தங்களுள் ஒன்று பிட்சாடனர் வடிவம். கையில் கபாலமேந்தி பிச்சை கேட்கும் பெருமானாக, அங்கங்களில் ஆடை இன்றி, அணிகலன் இன்றி, கால்களில் பாதரட்சை அணிந்து, துள்ளிக் குதிக்கும் மானோடு தோன்றிய வடிவமே பிட்சாடனர் வடிவமாகும்.

மேற்குப் பிரகாரத்தில் லெட்சுமி நாராயணர் உள்ளார். எல்லா சிவன் கோவிலிலும் திருமால் தன் தேவியருடன் நிற்கும் உருவை அமைப்பது வழக்கம். அவ் வழக்கப்படியே இக்கோவிலிலும் அமைக்கப்பட்டுள்ளது.

நால்வர் சிற்பங்கள் உள்ளன. கிரக என்னும் சொல்லுக்குப் “பிடி” என்பது பொருள். உயிர்களைத் தம் பிடியில் வைத்திருக்கும் ஒன்பது கோள்களை நவக்கிரகம் என்றழைத்தனர். இங்கு நவக்கிரகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

"உலகில் சூரியனை விட ஒளி பொருந்திய பொருள் கிடையாது. இவனது சாரதி அருணன். இவன்தான் மற்ற கிரகங்களுக்கு ஒளி கொடுப்பவன். காயத்ரி, திருட்டுபு, ஜெகதி, அனுபட்டபு, பந்தி, பிரஜதி, முட்டினுகு என இவனது தேர்க்குதிரைகள் ஏழும் அழைக்கப்படுகின்றன" என்கிறார் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

"நகரத்தார் காலக் கட்டடக் கலைக்கு மகுடம் இளையாத்தங்குடி கொடுங்கை எனக் கூறுமளவிற்குச் செம்மையாக அமைந்துள்ளது. நகரத்தார் காலச் சிற்பி தம் கைத்திறனைச் சித்திரத் தூண்களில் காட்டிய கவனத்தை விட, கபோதகச் சிற்பங்களில் காட்டியுள்ள திறன் போற்றுதலுக்குரியது" எனப் பாராட்டியதோடு, அச் சிற்பங்களின் பட்டியலையும் தந்துள்ளார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

## செப்புத் திருமேனிகள்

தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள் புகழ் பெற்றவை. இக்கோவிலில் சந்திரசேகரர், கௌரி அம்மன், அஸ்திரதேவர், முத்துமாரியம்மன், சோமாஸ்கந்தர், சிவன், பிரியாவிடை, ஸ்கந்தர், தனி அம்மன், விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி - தெய்வானை, சண்டிகேஸ்வரர், பிரதோஷ நாயகர் - நாயகி, நடராசர், முயலகன், சிவகாமி அம்மன், காரைக்கால் அம்மையார், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், பள்ளியறைச் சொக்கர், அம்மன், சுக்கிரவார அம்மன், நந்தி போன்ற 29 செப்புச் சிலைகள் உள்ளன.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

"தம் குலமரபுக் கோவில்களான ஒன்பது நகரக் கோவில்கள் மட்டுமன்றி, தாம் சென்ற இடமெல்லாம் கோவில்கள் கட்டித் திருப்பணி செய்து, கலைச் செல்வங்களைப் பெருக்கி, குட நீராட்டு விழா எடுத்த நகரத்தார்களின் அறச்செயல்கள் புதிய கலை மரபைத் தோற்றுவித்துள்ளது. ஆகவே, இப்புதிய கலைமரபை 'நகரத்தார் கலை' என அழைக்கலாம்" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)

## இராசகோபுரம்

'கோ' என்றால் இறைவன். 'புரம்' என்றால் மதில். எனவே 'கோபுரம்' என்றால் திருமதில். கோவிலைச் சுற்றி மதில் எழுப்பி, ஒரு புறம் பெரிய வாயில் அமைத்து, அதன்மேல் கோபுரத்தை எழுப்பினர். நுழைவாயிலின் மேல் உள்ள கோபுரம் 'இராச கோபுரம்' எனப்படும். அதன் உள்ளே சென்றுதான் நாம் இறைவனை வழிபட வேண்டும்.

உயர்ந்த இராச கோபுரத்தைத் தூரத்தில் இருந்தே நம்மால் வணங்க முடியும். அதனால்தான் 'கோபுர தரிசனம் கோடிப் புண்ணியம்' என்றும், 'கோபுர தரிசனம் பாவ விமோசனம்' என்றும் பழமொழிகள் கூறினர்.

இறை உணர்வை நம் உள்ளத்தில் தோற்றுவிப்பது கோபுரங்களே.

மூன்று நிலை இராசகோபுரம் இக்கோவிலின் கிழக்கு வாயிலில் உள்ளது. இது வெள்ளைக்கல் கொண்டும், செங்கல் சுதை கொண்டும் கட்டப்பட்டுள்ளது. கோபுரத்தில் கூர்ம அவதாரம், இராமன், சீதை, இலக்குவன் உருவங்கள் எனப் பல புடைப்புச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

## ஓவியங்கள்

இக் கோவிலின் கொலு மண்டபம், மேல்சுற்றுப் பிரகாரம், நந்தி மண்டபம், வெளி மண்டபம் ஆகிய பகுதிகளில் வண்ண ஓவியங்கள் பல தீட்டப்பட்டுள்ளன.

தெய்வ உருவங்கள், கின்னரர், கந்தர்வர், தேவமகளிர், இயற்கைக்காட்சிகள், வட்டங்களுள் பூக்கள், விரிந்த தாமரைகள், கல் யானைக்குக் கரும்பு கொடுத்தல், பொன்னூஞ்சல், அர்சுனனுக்குப் பாசுபதா அஸ்திரம் கொடுத்தல், காமாட்சி அம்மன், திருவிளையாடல் புராணம், கந்தபுராணம், சிவபுராணம் முதலியவற்றில் வரும் காட்சிகள் வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

## கல்வெட்டுக்கள்

இளையாத்தங்குடி நகரத்தார்கள் ஏழு பிரிவினரும் தங்கள் தங்கள் பிரிவுக்கென்று தனித்தனி விநாயகர் கோவில்களையும், அக் கோவிலின் முன் புறத்தில் ஊரணியும் அமைத்துள்ளனர். இளையாத்தங்குடி பட்டினசாமியார் பிரிவினர் விநாயகர்

கோவிலுடன், ஆத்மநாதசுவாமி கோவில் என்ற சிவன் கோவிலையும் கட்டியுள்ளனர்.

இக் கோவில் பெருமருதூருடையார் வெட்டிய ஊரணி 'கல்யாண தீர்த்தம்' எனக் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. ஆனால், ஊர் மக்கள் இதனை 'மண் குளம்' என அழைக்கின்றனர்.

இவ் ஊரணிக்கு மழை நீரைக் கொண்டு வர 'யானை மடு' என்ற உள்வாய் அமைக்கப்பட்டுள்ளது. இவ் ஊரணி மதில் சுவரின் வடபுறம்,

உ
சிவமயம்
இளையாற்றங்குடிக் கோயில்
பேரசெந்தூர் நகரத்தாருடைய திருக்குளம்
கல்யாண தீர்த்தம்.
விசுஸு தைமீ 19 (1.2.1942)

என்ற கல்வெட்டு காணப்படுகிறது.

இளையாத்தங்குடிக் கோவிலின் வடகிழக்குப் பகுதியில் கழனிவாசல்குடிப் பிரிவினர்க்குரிய கைலாச விநாயகர் கோவில் உள்ளது.

விநாயகர் கோவிலின் வெளிவாயிலின் முகப்பில் உள்ள கல்வெட்டு இவர்களுடைய ஊரணியைச் 'செங்குளம்' எனக் குறிப்பிடுகிறது.

இளையாத்தங்குடி கோவிலின் நந்தி மண்டபத்தில் இரண்டாம் குடைவரையின் தெற்குப் பகுதியில் பேரசெந்தூருடையார் பிரிவினர்க்குரிய கைலாச விநாயகர் கோவில் உள்ளது. அதன் மேற்கூரையின் மேலே,

உ
சிவமயம்
இளையாற்றங்குடி பேர்செந்தூர்
நகரத்தார் ஸ்ரீ கைலாச விநாயகர் - 1939.

எனப் பொறிக்கப்பட்டுள்ளது.

இவர்கள் அமைத்த ஊரணி பயன்படுத்த முடியாத அளவிற்கு முள்மரங்கள் நிறைந்து காணப்படுகிறது. இவ்ஊரணி பிடாரி

கோவிலுக்கு அருகில் அமைந்துள்ளதால் 'பிடாரி ஊரணி' என அழைக்கப்படுகிறது.

இளையாத்தங்குடிக் கோயில், நந்தி மண்டபத்தின் வடதிசையில் சிறுசேத்தூருடையார் பிரிவுக்குச் சொந்தமான கைலாச விநாயகர் கோவில் உள்ளது. இவர்களுக்குரிய ஊரணி மணிக்குளத்திற்கு அருகில் உள்ளது. இதில் இப்போது கருவேல மரங்கள் அடர்ந்துள்ளன. எனவே, தற்போது மக்கள் பயன்பாட்டில் இவ் ஊரணி இல்லை. இதனைக் 'கருவேலம் பள்ளம்' என மக்கள் அழைக்கின்றனர்.

இளையாத்தங்குடி கிங்கிணிக் கூருடையார் பிரிவைச் சார்ந்த நகரத்தார்களுக்குரிய விநாயகர் கோவில் 'சுந்தர விநாயகர் கோவில்' என்றழைக்கப்படுகிறது. (ஏனைய ஆறு பிரிவினர் விநாயகர் கைலாச விநாயகர் என்றே அழைக்கப்படுகிறார்.)

சுந்தர விநாயகரைச் சுற்றிக் கல் திருவாச்சி உள்ளது. விநாயகரின் நெற்றியில் திருநீறு பூசப்பட்டுள்ளது. துதிக்கையில் வீரமணி கட்டப்பட்டுள்ளது. வாயிலின் இரண்டு பக்கங்களிலும் துவாரக பாலகர் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளது. இக் கோவிலுக்குரிய ஊரணி 'மணிக்குளம்' என அழைக்கப்படுகிறது. ஊரணியின் முகப்பில்,

உ
சிவமயம்
கிண்கிணிக்கூர் நகரத்தாருடையார்
மணிக்குளம்.
விக்கிரமஞூஆவணிமீ
15.9.1940
புதுப்பிக்கப்பெற்றது

என்ற கல்வெட்டு காணப்படுகிறது.

## அருள்மிகு சௌந்தரநாயகி உடனுறை ஆத்மநாதசுவாமி திருக்கோவில்

இக் கோவில் இளையாத்தங்குடி பட்டினசாமி பிரிவு நகரத்தார்களுக்குரிய கோவிலாகும். இக் கோவில் பட்டினசாமி ஊரணியின் மேல் கரையில் அமைந்துள்ளது. வெள்ளைக்கல் திருப்பணியால் இக் கோவில் கட்டப்பட்டுள்ளது. 5-03-03இல் குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது.

எல்லாச் சிவாலயங்களிலும் இடம் பெற்றுள்ள தெய்வ வடிவங்கள் இச் சிவாலயத்திலும் இடம் பெற்றுள்ளன. நித்திய வழிபாடு நடைபெற்று வருகிறது. இப்பிரிவு நகரத்தார்களுக்குத் தனியாக கைலாச விநாயகர் கோவில் உள்ளது.

இளையாத்தங்குடியில் நகரச் சிவன் கோவில், ஆத்மநாத சுவாமி கோவில் என இரண்டு சிவாலயங்கள் உள்ளன.

## அருள்மிகு ஆதிகேசவப் பெருமாள் கோவில்

இக் கோவில் இளையாத்தங்குடி கழனிவாசல்க் குடிப்பிரிவு, நகரத்தார்களுக்குச் சொந்தமானது.

பரம்பரை பரம்பரையாகச் சைவ சமயத்தில் ஆழமான பற்றுள்ள நகரத்தார்கள், வைணவ சமயத்திலும் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு இப் பெருமாள் கோவில் சான்றாக விளங்குகிறது.

நகரத்தார் குல மரபுக் கோவிலில் முதல் கோவிலாகிய இளையாத்தங்குடியில் நகரத்தார்கள் பெருமாள் கோவிலைக் கட்டி வழிபட்டத்தைப் பார்க்கும்போது, ஆரம்பத்தில் இருந்தே நகரத்தார்கள் சமயப்பொறை உடையவர்களாய் இருந்தனர் என அறிய முடிகின்றது.

இக் கோவில் இறைவன் ஆதிகேசவப் பெருமாள். தாயார் பரிமளவல்லி.

இரு வேறு வழிபாட்டு முறைகள் பெருமாள் கோவில்களில் உண்டு. ஒன்று வைகானச முறை. இரண்டு பாஞ்சரட்சர முறை. இதனை வடகலை வழிபாட்டு முறை, தென்கலை வழிபாட்டு முறை என்றும் கூறுவர். இக் கோவிலில் வைகானச முறை பின்பற்றப்பட்டு பூசைகள் நடைபெற்று வருகின்றன.

இக் கோவில் 1942இல் கட்டத் தொடங்கி 1948இல் கட்டி முடிக்கப்பெற்றது 21.04.1948இல் முதல் சம்போரட்சனம் (குடமுழுக்கு விழா) நடைபெற்றது. சம்போரட்சனம் என்பது கோபுரக் கலசங்களில் நீரைத் தெளிப்பதாகும். பெருமாள் அலங்காரப் பிரியரேயன்றி, அபிசேகப் பிரியரல்லர். எனவே பெருமாள் கோவில்களில் ஜீரணோத்தர அஷ்டபந்தன மகாசம்போரட்சனம் நடைபெறுகிறது.

06.02.63, 24.04.89 ஆகிய ஆண்டுகளில் சம்போரட்சன விழாக்கள் நடைபெற்றுள்ளன.

*"இக் கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார் வளர்த்த கட்டிடக் கலைக்கும், சிற்பக் கலைக்கும் சீரிய சான்றாக விளங்குகிறது" என்கிறார் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)**

*ஒரே கல்லில் செதுக்கி வைக்கப்பட்டுள்ள 'தசாவதாரச் சிற்பங்கள்' சிற்பக் கலைக்குச் சான்றாக உள்ளது.*

## நகரக்கோவில் கட்ட செலவு விபரம்

*நகரத்தார்களின் முதல் கோவிலான இளையாத்தங்குடி கோவில் கட்ட ரூ. 55,848-10-10 (ரூபாய் ஐம்பத்தைந்தாயிரத்து எண்ணூற்று நாற்பதெட்டு, பத்து அணா, பத்துப் பைசா) செலவில் கட்டப் பட்டதாக இளையாத்தங்குடி தேவஸ்தான அறிக்கையின் மூலம் அறிய முடிகிறது.*

*இக் கோவிலின் முதல் குடமுழுக்கு விழா 28-05-1939இல் நடைபெற்றது.*

*கோவிலுக்கு எதிரில் உள்ள மந்தை அம்மன் கோவில் ரூ. 300/- செலவில் கட்டப் பெற்றது.*

*கிராம தேவதைக் கோவில்கள் ரூ. 600/- செலவில் மராமத்துச் செய்யப் பெற்றது.*

*பசுமடத்திற்காக ரூ. 3067-1-11 (ரூபாய் மூவாயிரத்து அறுபத்தேழு, ஓர் அணா, பதினொரு பைசா) செலவில் ஒரு புதிய கட்டிடம் கட்டப் பெற்றது.*

*ஓர் ஏக்கர் 92 செண்டில் நந்தவனம் அமைக்கப் பெற்றது.*

*கோவிலுக்குத் தேவையான சாமான்கள் வைக்க ரூ. 3,600/- (ரூபாய் மூவாயிரத்து அறுநூறு) செலவில் அறை ஒன்று கட்டப் பெற்றது.*

*நகர விடுதி ரூ. 10,000/- (ரூபாய் பத்தாயிரம்) செலவில் விரிவு படுத்தப் பட்டுள்ளது.*

*கோவில் பணியாளர்களுக்காக 22 வீடுகள் கட்டப்பட்டன.*

*பக்தர்கள் தங்குவதற்காக மூன்று இடங்களில் 18 வீடுகள் கட்டப்பட்டன.*

பள்ளிக்கூடம் ரூ. 6,500/- (ரூபாய் ஆறாயிரத்து ஐந்நூறு) செலவிலும், தபால் அலுவலகம் ரூ. 1,400/- (ரூபாய் ஆயிரத்து நானூறு) செலவிலும், தேவஸ்தானம் அலுவலகம் ரூ. 4972-5-3- (ரூபாய் நான்காயிரத்து தொள்ளாயிரத்து எழுபத்திரண்டு, ஐந்தணா, மூன்று பைசா) செலவிலும் தேவஸ்தானத்தாரால் கட்டப் பட்டன.

தானியங்களைப் பத்திரப்படுத்த நெற்களஞ்சியம் ரூ. 797-6-6 (ரூபாய் எழுநூற்றி தொன்னூற்றேழு, ஆறு அணா, ஆறு பைசா) செலவில் கட்டப்பட்டது. இதில் 2000படி நெல் வரை சேமிக்கலாம்.

இவை அனைத்தும் முதல் திருப்பணியின்போது (1939ஆம் ஆண்டு) மேற்கொள்ளப்பட்டதாகத் திருப்பணிக்குப் பின் வெளியிடப்பட்ட நிர்வாக அறிக்கை விரிவாகக் குறிப்பிடுகிறது.

**(நன்றி : இளையாத்தங்குடிக் கோவில்)**

இக் கோவில் கழனிவாசல் குடிப்பிரிவைச் சார்ந்த நாட்டரசன் கோட்டை நகரத்தார்கள் தங்களுக்குரிய பெருமாள் கோவிலில் ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் இராமாயணச் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்து சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

ஒரு முறை இந் நூலாசிரியர் அக்கோவிலில் மூன்று நாள் இராமாயணச் சொற்பொழிவு செய்தார்.

## கீரணிப்பட்டி முத்து மாரியம்மன்

இளையாத்தங்குடியிலிருந்து 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது கீரணிப்பட்டி.

காவிரிப்பூம்பட்டினத்தை விட்டு பாண்டிய நாட்டிற்கு வந்த நகரத்தார்கள், தங்கள் குல தெய்வமாகிய முத்து மாரியம்மன் பிடி மண்ணை கீரணிப்பட்டிக்குக் கொண்டு வந்தனர். அங்கு முத்து மாரியம்மனுக்குக் கோவில் கட்டி வழிபடுகின்றனர்.

அம்மனின் பரிவார தேவதைகளாக மூன்று கருப்பர்கள் உள்ளனர். அம்மன் கோவிலுக்கு எதிரில் முன்னோடிக்குத் தனி ஆலயம் உள்ளது. இங்கு செல்ல பெண்களுக்கு அனுமதி இல்லை.

பங்குனி மாதத்தில் பூச்சொரிதல் விழா நடைபெறும். அதன் பின் காப்புக்கட்டி 10 நாள் திருவிழா நடைபெறும். அம்பாளின் உற்சவமூர்த்தம் இளையாத்தங்குடி சிவன் கோவிலில் இருந்து வரும்.

திருவிழா முடிந்தவுடன் மீண்டும் சிவன் கோவிலுக்குச் சென்று விடும். திருவிழாவின்போது நெல் அவித்தல், திருமணம் செய்தல் போன்றவற்றைச் செய்ய மாட்டார்கள்.

## இளையாத்தங்குடி நகரத்தார்களின் சிறப்புகள்

இளையாத்தங்குடி நகரத்தார்களின் பல்வேறு சிறப்புகளை கல்வெட்டுகள் தெளிவாக தெரிவிக்கின்றன. அதன் விபரம் வருமாறு:

அறம் சொன்ன மரபு: செட்டி நாட்டு வட்டாரத்தைச் சார்ந்த பகுதிகளில் உள்ள கல்வெட்டுக்களில் 'இளையாத்தங்குடி நகரத்தார்' என்ற தொடர் காணப்படுகிறது.

இளையாத்தங்குடி நகரத்தார்களின் பல்வேறு பெருமைகளை மேலப்பனையூர் ஞானபுரீசுவரர் சுவாமி கோவிலின் வடபுறச் சுவரில் உள்ள கல்வெட்டு குறிக்கின்றது. இக் கல்வெட்டின் காலம் கி.பி. 1360 (பிலவங்க வருடம் பங்குனி மாதம் 12ஆம் தேதி.)

கோவில் தகராறில் இளையாத்தங்குடி நகரத்தார்கள் நடுவராய் இருந்து நடுச் சொல்வது (தீர்ப்பு வழங்குவது) பற்றி இக் கல்வெட்டில் அறிய முடிகிறது.

பனையூர், குளமங்கலம் ஆகிய இரண்டு ஊராருக்கும் கோவில் நில உரிமை பற்றிய வழக்கு எழுந்தது. பனையூர் அறிவீசுவரமுடைய நாயனார்க்கும், குளமங்கலம் மலையக்கோவில் திருவெங்கைக் காளிசுவர நாயனார்க்கும் இடையேதான் வழக்கு.

இவ் வழக்கு நடைபெற்ற இடம் பொன்னமராவதி நாட்டு வடபத்து நாடாகும்.

இந்த வழக்கை ஆராய்ந்து நடுச் சொல்ல பக்கத்து நாடுகளில் உள்ளவர்கள் அழைக்கப்பட்டனர்.

கோவில் தொடர்பான வழக்கு என்பதால் கல்வாசல் நாட்டில் வாழ்ந்த இளையாத்தங்குடி நகரத்தார்கள் நடுச் சொல்ல அழைக்கப் பெற்றனர். இன்னொரு புறம் கோனாபட்டு வேளாளர்கள் அழைக்கப் பெற்றனர்.

நடுவர்களாய் இருந்தவர்களின் பெயர்கள் கல்வெட்டில் இல்லை.

இரண்டு ஊராரின் வாய்மொழிகளை நடுச் சொல்ல வந்தவர்கள் கேட்டு, இரு திறத்தாரும் நடந்து கொள்ள வேண்டிய வகையை நிலவரம் (முடிவு) செய்தார்கள்.

**செவலூர் கல்வெட்டு :** செவலூர் பூமீச்சுவரர் கோவில் கல்வெட்டு இளையாத்தங்குடி நகரத்தார்கள் பற்றிய செய்தியைத் தெரிவிக்கிறது.

இளையாத்தங்குடி நகரத்தார்களுக்குச் செவலூர் பூமீச்சுவரமுடைய நாயனார் கோவில் பண்டாரத்தாரும், ஊராரும் பிரமாணம் பண்ணிக் கொடுத்திருக்கின்றனர். இவ் இறைவன் பூசைத் திருநாளுக்கு 'இளையாத்தங்குடி நகரத்தார் தம்பிரான் வந்தான்' என்று திருச்சின்னம் கூறியதாக இக்கல்வெட்டு கூறுகிறது.

மேலும் செவலூரில் நகரத்தார்க்கு 30 வீட்டுமனை ஒதுக்கிய செய்தியும் காணப்படுகிறது.

இக் கல்வெட்டில் "கல்வாசல் நாட்டுக் குலசேகரபுரத்து இளையாத்தங்குடி நகரத்தார்க்கும், மேற்படி ஊர் கழனி வாசலுடையான் செழியதரையர் ஆவுடையார்க்கும்" என்ற பகுதி காணப்படுகிறது. இக் கல்வெட்டின் காலம் கி.பி. 1458.

இவ் வாசகத்தில் கழனி வாசலுடையார் இனத்தால் இளையாத்தங்குடியாரைச் சார்ந்தவர்கள். பங்காளி உறவு முறையால், கோவில் அடிப்படையால் வேறுபட்டவர்கள். அதனால்தான் இரு திறத்தாரையும் தனித்தனியாகக் கூறியுள்ளனர்.

கழனிவாசல் குடியார் என்ற பிரிவு இளையாத்தங்குடிக்கு உரியது. இக் கல்வெட்டோ கழனிவாசலுடையான் என்று குறிப்பிடுகிறது. இன்று கழனிவாசலுடையான் பிரிவு வயிரவன் கோவிலைச் சார்ந்தது.

அதனால், இளையாத்தங்குடிக் கோவில், வயிரவன் கோயில் சார்ந்த இரு கோவிலாரும் செவலூரில் குடியேற வீட்டு மனையை ஊராரிடமிருந்து பெற்றனர் என இக் கல்வெட்டால் அறிய முடிகிறது.

30 மனையில் 28 மனைகள் இளையாத்தங்குடியாருக்கும், 2 மனைகள் வயிரவன் கோவிலாருக்கும் கொடுக்கப்பட்டன. (பின்னர் இளையாத்தங்குடியாரிடமிருந்து 3 மனைகள் வயிரவன் கோவிலார் பெற்றனர். எனவே வயிரவன் கோவிலாருக்கு 5 மனைகள்)

இக் கல்வெட்டில் "இடுகாடு இவர்களும், ஊரவரும் பொருந்தின இடத்திலே இடக்கட வோமாகவும்" என்ற வரி காணப்படுகிறது. வீட்டுமனை பெறும்போதே பிறவற்றையும் நகரத்தார்கள் வரையறுத்துக் கொள்ளும் போக்கு இதனால் தெரிகிறது.

*இளையாத்தங்குடி நகரத்தார்கள் பல்வேறு ஊர்களுக்கும் குடிபோனதற்கு செவலூர் கல்வெட்டு சான்றாகிறது.*

**இராங்கியம் கல்வெட்டு:** *இராங்கியம் பூமீச்சுவரர் கோவிலில் வாயிலின் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டில் செவலூர் கோவிலில் நகரத்தார்களில் வயதில் மூத்தவருக்கு 'முதல் மரியாதை' கொடுப்பது என்று பொறிக்கப்பட்டுள்ளது. இக் கல்வெட்டு கி.பி. 1500ஆம் ஆண்டுக் கல்வெட்டாகும். (ரௌத்திர ஆண்டு ஆடி மாதம் 16ஆம் நாள்)*

*இவ் வழக்கம் இன்றைக்கும் எல்லாக் கோவில்களிலும் செட்டி நாட்டில் பின்பற்றப்பட்டு வருகிறது.*

*அக் கோவிலின் வாயில் வடபுறச் சுவரில் 'அமுது படிக்கு நன்கொடையாக மாதன் வாய்க்கால் செய் (நிலம்), கிணறு, தெங்கடிப் பறியாலை விற்ற செய்தி' குறிக்கப்பட்டிருக்கிறது. இக் கல்வெட்டு முந்தைய கல்வெட்டுக்குப் பத்து நாள் கழித்து (ரௌத்திர ஆண்டு ஆடி மாதம் 26ஆம் நாள்) வெட்டப்பட்டுள்ளது.*

**முதல் மரியாதை :** *இராங்கியம் பூமீச்சுவரர் கோவிலைக் 'கல்வாசல் நாட்டு குலசேகரபுரத்து ஒக்கூருடையான் வணிகராமர்' முன்னதாகக் கட்டியதாக 'கி.பி. 1446ஆம்ஆண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு' குறிப்பிடுகிறது.*

*ஆனால், இத் திருப்பணி அவர் காலத்தில் முழுமை பெறவில்லை.*

*பின்னர் ஒக்கூருடையார் சிவந்தெழுந்தார் இராயர், இராமதேவர் ஆசிரமங்காத்தார், கழனிவாசலுடையான் திருக்கோளக்குடியாண்டாரான செழியதரையர் என்ற மூவரால் இத் திருப்பணி முழுமை பெற்றது.*

*முதலில் கோவில் திருப்பணி செய்ய முற்பட்ட ஒக்கூருடையாருக்கு முதல் மரியாதை கொடுக்க வேண்டும், பின்னர் கழனிவாசலுடையார்க்கு (வயிரவன் கோவிலார்) கொடுக்க வேண்டும் என விதிமுறை வகுத்ததைக் கல்வெட்டு தெரிவிக்கிறது.*

*(ஒக்கூருடையார் வியன்தலை கொடுக்க ஒப்புக் கொண்டதால், முதல் மரியாதை பெற்றதாக வேறு ஒரு செய்தியும் உண்டு.)*

*இம் மரபு செட்டிநாட்டில் இன்றைக்கும் பின்பற்றப்பட்டு வருகிறது.*

மறவா மதுரைக் கல்வெட்டு : *இளையாத்தங்குடி நகரத்தார் ஊரணி வெட்டிக் கட்டி அறம் செய்ததைத் திருமயம் தாலுகா மறவா மதுரையில் உள்ள அகளங்கீசுவரர் சுவாமி கோவில் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு (கி.பி. 1518) தெரிவிக்கின்றது.*

(நன்றி : மா. சந்திரமூர்த்தி, நகரத்தார் மரபும் பண்பாடும்)

*இளையாத்தங்குடி நகரத்தார்கள், அரண்மனை சிறுவயல், அரிமழம், அரியக்குடி, க.அழகாபுரி, கொ.அழகாபுரி, பி.அழகர்புரி, ஆத்தங்குடி, ஆ.தெக்கூர், ஆவினிப்பட்டி, இராங்கியம், இராயவரம், உலகம்பட்டி, ஒக்கூர், கடியாபட்டி, கண்டரமாணிக்கம், கண்டவராயன்பட்டி, கண்டனூர், ப.கருங்குளம், கல்லல், கல்லுப்பட்டி, காரைக்குடி, காளையார் மங்கலம், கானாடுகாத்தான், கீழச்சிவல்பட்டி, கீழப்பூங்குடி, குருவிக்கொண்டான்பட்டி, குழிபிறை, கொப்பனாபட்டி, கோட்டையூர், கோனாபட்டு, சக்கந்தி, சண்முகநாதபுரம் (ஆராவயல்), சிறுகூடல்பட்டி, உய்யக்கொண்டான் சிறுவயல், சொக்கநாதபுரம், தேவகோட்டை, தேனிப்பட்டி, நடராசபுரம், நற்சாந்துபட்டி, நாச்சியாபுரம், நாட்டரசன்கோட்டை, நெற்குப்பை, நேமத்தான்பட்டி, பட்டமங்கலம், பலவான்குடி, பள்ளத்தூர், பனங்குடி, பனையப்பட்டி, பாகனேரி, புதுப்பட்டி, புதுவயல், பூலாங்குறிச்சி, மகிபாலன்பட்டி, மதகுபட்டி, மானகிரி, மிதிலைப்பட்டி, ஆ.முத்துப்பட்டனம், மேலச்சிவபுரி, வலையப்பட்டி, விராமதி, விரையாச்சிலை, வெற்றியூர்வேகுப்பட்டி, வேந்தன்பட்டி ஆகிய ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள்.*

(நன்றி : பூச்சரம் - சூலை 2009)

நல்இளையாற் றங்குடிக்கோ வில்நகர வேள்வணிகர்
சொல்லோங்கும் சிந்தைமிகு செல்வமீயும் சொல்நித்ய
கல்யாணி அம்பாள்சேர் கைலாச நாதருடன்
நல்கிவரும் பேறுபதி னாறு

- நல்லறக் கவிராயர் சுப.நா. நாகப்பன்





## மாத்தூர் கோவில்

**('மாற்றூர்' பின்னர் 'மாத்தூர்' என மருவியது)**

*கொங்கணச் சித்தர் இரசவாதத்தால் உருவாக்கிய தங்கத்தின் மாற்று உரைத்துப் பார்த்த ஊர் 'மாற்றூர்' என இலுப்பைக்குடி தலபுராணம் கூறுகிறது.*

*இக்கருத்தைக் கவிஞர் சித. சிதம்பரம்,*

**ஓட்டைப்பொன் ஆக்குகையில்**
**உயர் செம்பும் ஆகாதோ?**
**கொங்கணவர்தான் வழுத்தக்**
**குலமுழுதும் சேர்ந்திரைஞ்ச**

*எனக் குறிப்பிடுகிறார். தமது 'நகரக் கோவில் ஒன்பது திருப்பதிகம்' என்ற நூலில்,*

*"கேரள சிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய புரத்தில்" என இசைகுடிமானத்தில் இக் கோவில் நகரத்தார்கள் எழுதிப் பின் தாம் சார்ந்த பிரிவை எழுதுவர்.*

*இக்கோவில் நகரத்தார்கள் ஏழு உட்பிரிவுகளை உடையவர்கள். அப் பிரிவுகள் வருமாறு :*

1. *உறையூருடையார்*
2. *அரும்பாக்கூருடையார்*
3. *மணலூருடையார்*
4. *மண்ணூருடையார்*
5. *கண்ணூருடையார்*
6. *கருப்பூருடையார்*
7. *குளத்தூருடையார்*

*நகரத்தார்களுக்கே நகரக் கோவில்களின் சிறப்புத் தெரியாது. திருமணச் சமயத்தில் 'பாக்கு வைப்பதும்', 'கோவில் மாலை பெறுவதும்' என்ற அளவிலேயே நகரத்தார்கள் நகரக்கோவில்களைப் பற்றி அறிவர்.*

*திருக்கோவில்களில் திருமணப் பதிவேடு காக்கப்படுவதும், புள்ளிக்கணக்கு, மக்கள் தொகை விவரம் பதியப் பெறுவதும், கோவில் பிரிவு பேணப் பெறுவதும், நாடே அறிய வேண்டிய நல்ல செய்திகளாகும்.*

*மேலும், "நகரக் கோவில்கள் வரலாற்றுச் சிறப்புடையவை. ஓவியங்கள், சிற்பங்கள், செப்புப் பட்டயங்கள் இவற்றின் கருவூலங்கள், வளர்கலை வளர்க்கும் வாழ்வியல் மையங்கள்" எனக் குறிப்பிடுகிறார் பதிப்புச் செம்மல் ச. மெய்யப்பன்.*

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

*நகரக் கோவில்கள் கலைவளம் சிறப்பவை என்பதைக் கவியரசர் கண்ணதாசன் இவ்வாறு குறிப்பிடுகிறார்.*

**வண்ணக்கலை வளர்த்தோம்**
**வரலாறே நாம் சமைத்தோம்**
**எண்ணத் தொலையாத**
**எத்தனையோ கோவில்களைக்**
**கண்ணில் இருத்தி கலையோடு**
**காத்து வந்தோம்**
**காசி நகரத்துக் கடவுளரைப் பேச வைத்தால்**
**காவிரிப்பூம் பட்டினத்தார்**
**கலையுணர்ச்சி தோன்றவரும்**
**மாசற்ற பொன்னும்**
**மணி வயிரம் இரத்தினமும்**
**தூசென்று எண்ணித்**
**தூக்கிக் கொடுத்து வந்தோம்**
**பண்டைத் தமிழ்மரபைப்**
**பண்போடு காத்து வந்தோம்**
**அண்டை நிலங்களில் நம்**
**ஆண்டவனை ஊன்றி வைத்தோம்**
**காசி விசாலாட்சி**
**கவின் மதுரை மீனாட்சி**
**கட்டியுள்ள ஆடைகளும்,**

கழுத்திலுள்ள பொன்நகையும்,
சுற்றியுள்ள மண்டபமும்,
தூக்கிவரும் வாகனமும்,
முற்றும் அழியாத
மொட்டைக் கோபுரத்தழகும்,
அண்ணாமலையில்
அமர்ந்திருக்கும் பேரழகும்
ஆக்கிக் கொடுத்தவர்கள்
அமர்ந்திருந்து காத்தவர்கள்
நாட்டுக்கோட்டை வளர்த்த
நகரத்தார் அல்லாமோ?
ஆனாலும் நம்மவர்கள்
அடக்கத்தால் இன்றுவரை
தாமாகத் தம்மைத் தலைதூக்கிக்
கொண்டதில்லை

- கவியரசர் கண்ணதாசன்

“மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்பது எக்காலத்துக்கும் ஒவ்வும் கூற்று. மகேசன் தொண்டு கேட்பாரற்று இருந்த காலக்கட்டத்தில் திருப்பணிகளுக்கு ஊக்கம் அளித்துக் கோவில்களைப் பழுது பார்த்தும், புதுப்பித்தும், புதிதாகக் கட்டியும் தமிழகக் கலைகளுக்குப் புத்துயிர் ஊட்டியும், வளர்த்த பெருமையை உடையவர்கள் நம் முன்னோர்கள். சில, பல நூற்றாண்டுகள் அரசோச்சிய அரச வம்சத்தினர்கள் ஆற்றிய திருப்பணிகளுக்கு ஈடாக தமிழகம் முழுவதிலும், வேறு மாநிலங்களிலும், கடல் கடந்தும் திருப்பணி செய்துள்ள பெருமை நம்மவர்களைச் சாரும்.

நாயக்க மன்னர்கள், மராட்டிய மன்னர்கள் ஆகியோருக்குப் பின்னர் கலைஞர்களைப் பெருமளவு ஆதரித்து வந்துள்ளார்கள்.

‘மன்னர் பின்வந்தோர்’ என அறிஞர்களால் பாராட்டப்படும் இச் சமுதாயத்தின் அடிப்படை மரபுகள் காக்கப்பட்டு வரும் ஒன்பது நகரக்கோவில்கள் எந்த அளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பது அனைவரும் அறிய வேண்டிய ஒன்றாகும்.

கோவில் கலைகளில் நீண்ட பாரம்பரியமிக்க தமிழக வரலாற்றோடு தங்களை இணைத்துக் கொண்டவர்கள் நகரத்தார்கள்” எனக் குறிப்பிடுகிறார் அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் பதிவாளர் முனைவர் ஏ.ஆர். இலட்சுமணன்.

(நன்றி : மாத்தூர் கோவில்)

நகரத்தார்களின் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் மாற்றூர் கோவில் ஒன்றாகும்.

அக் கோவிலின் சிறப்பைக் காண்போம்.

கொங்கணச் சித்தருக்கும், இக் கோவிலுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாக இலுப்பைக்குடிக் கோவில் புராணம் கூறுகிறது.

இக் கொங்கணச் சித்தர் 'இரும்பு, சூதம், லிங்கம், அரிதாரம் முதலிய இரசவாதத்திற்குரிய பொருள்களோடு தாமிரத்தைச் சேர்த்தால் பொன் கிடைக்கும்' என்ற இரசவாதத் திறமையைப் பெற்றிருந்தார்.

அச் சித்தர் இத் தலத்தில் முதலில் 16 மாற்றுத் தங்கத்தைப் பெற்றார். பின்னர் 500 மாற்றுத் தங்கம் பெற்றார். இப் பகுதியில் உள்ள கரிமேட்டுப் புன்செய்க் காட்டில் தங்கி விளாரி என்னும் பச்சிலைச் சாற்றைப் பிழிந்து உலோகங்களை நெருப்பில் காய்ச்சிப் பொன் மாற்றுப் பெற்றார். அதனால் இவ்வூர் 'மாற்றூர்' என வழங்கப்பட்டது. பின்னர் 'மாத்தூர்' என மருவி வழங்கப்பெற்றது. இப் பெயரே நிலைத்து விட்டது என இப்பகுதி மக்கள் கூறுகின்றனர்.

இச் செவிவழிச் செய்தியைத் தவிர வேறு சான்றுகள் இல்லை. இவ்வூர் பெரிய மாத்தூர், சின்ன மாத்தூர் என இரண்டு பகுதிகளாக உள்ளது.

முன்னாளில் இவ்வூர் 'வீரபாண்டியபுரம்' என அழைக்கப் பெற்றது. இதனை இக் கோவில் நகரத்தார்களின் 'இசை குடிமானத்'தில் காணலாம்.

இக் கோவில் நகரத்தார்கள் இசை குடிமானம் எழுதும்போது "கேரளசிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில் வீரபாண்டியபுரத்தில் மாற்றூர் கோவில் அரும்பாக்கூருடையார்" என எழுதுவதிலிருந்து இவ்வூருக்கு வீரபாண்டியபுரம் எனப் பெயர் இருந்ததை நாம் அறியலாம்.

மாத்தூர் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையான ஊராகும். இங்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பே மக்கள் வாழ்ந்தனர் என்பதற்கு இங்கு கிடைத்துள்ள முதுமக்கள் தாழிகள், மட்பாண்டங்கள் முதலியன சான்றாக விளங்குகின்றன.

இங்குள்ள இறைவன் ஐந்நூற்றீசுவரர், இறைவி பெரியநாயகி அம்மன். இக் கோவிலில் பாண்டியர் காலப் பைரவர், நந்தி,

ஆறுமுகப் பெருமானின் பரிவாரங்கள், திருமகள் முதலிய சிற்பங்கள் கிடைத்துள்ளன.

பண்டைய நாளில் வரதராசப் பெருமாள் என்ற திருமால் கோவில் இங்கிருந்ததாகக் கூறுகின்றனர்.

இவ்வூரின் வடக்கே காட்டுக் காளியம்மன் என்ற அழகு நாச்சியம்மன் கோவில் உள்ளது. அனைவரும் வணங்கிக் கொண்டாடும் தெய்வமாக இம் மாகாளி விளங்குகிறாள்.

உஞ்சனை நாட்டில் உள்ள 32½ கிராமங்களில் மாத்தூரும் ஒன்று.

வணிகக் குழுக்களில் ஒன்று "ஐந்நூற்றுவர்" என்பது. அக் குழுவினர் இங்கு வாழ்ந்ததாகக் கூறுகின்றனர். இக் கோவிலுக்கும், அவர்களுக்கும் நெருக்கமான தொடர்பு இருந்தது என்பதை, இக் கோவில் இறைவன் 'ஐந்நூற்றீசுவரர்' என அழைக்கப் படுவதிலிருந்து அறிய முடிகிறது.

"இவ்வூரின் புகழையும், பெருமையையும் ஏழு நகரத்தாரின் பேரில் குளுவ நாடகம் என்ற நூலில் சிறக்கக் காணலாம். நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஆவணங்களிலும், நூல்களிலும் இவ்வூரைப் பற்றிய குறிப்புகள் உள்ளன" என்கிறார் மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

'கமலாலயம்' என்னும் திருக்குளத்தின் வடகரையில் ஐந்நூற்றீசுவரர் ஆலயம் அமைந்துள்ளது. கோவிலின் கிழக்கே வான் உயர்ந்த இராசகோபுரம் உள்ளது. தென்திசையில் இறைவி பெரிய நாயகி அம்பாள் உள்ளாள். உயர்ந்த கோபுரமும், திருமதிலும் உள்ளது.

கி.பி. 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் நகரத்தார்கள் இத் திருக்கோவிலைத் திருப்பணி செய்துள்ளனர். இத் திருப்பணிக்குக் கருங்கல்லையும், செங்கல்லையும் நகரத்தார்கள் பயன்படுத்தவில்லை. இத் திருக்கோவில் வெள்ளைக்கல் திருப்பணியாகும். இக் கற்கள் திருவண்ணாமலை, திருமயம் முதலிய ஊர்களிலிருந்து கொண்டு வரப்பட்டன.

கோவில் திருப்பணி வேலைகள் 1934இல் தொடங்கி, 1949இல் முடிவு பெற்றது. மொத்தத் திருப்பணிச் செலவு சுமார் ரூ. 18

*இலட்சமாகும்,. கோவிலுக்கெதிரே உள்ள மண்டபம் விழா மண்டபமாகும். அதனைக் கட்ட சுமார் ரூ.80,000/- ஆனது.*

*இரண்டாவது, திருப்பணியில்தான் கோவில் முழுமை பெற்றது. திருக்குட நன்னீராட்டு விழா சர்வதாரி ஆண்டு தை மாதம் 20ஆம் நாள் (2-2-1949) நடைபெற்றது.*

*இக் கோவிலை எழுவன் கோட்டை ஸ்தபதிகள் கட்டினர். ஸ்தபதிகள் கோவில் வளாகத்தில் தங்கிப் பணி செய்ய அங்கேயே அவர்களுக்கு நகரத்தார்கள் வீடுகள் கட்டிக் கொடுத்தனர்.*

*"இக் கோவிலைக் கட்டிய ஸ்தபதிகள் மூவர். தேவகோட்டை ஸ்தபதி வயி மகிஷ்வனம் ஆச்சாரி, ம.செல்லக்கண்ணு ஆச்சாரி, ம.வைத்தியநாத ஆச்சாரி" எனக் குறிப்பிடுகிறார் மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

*இக் கோவில் கட்ட வரையப்பட்ட வரைபடங்களை இன்றும் மாத்தூர் நகரக்கோவில் விடுதியில் காணலாம்.*

*இக் கோவிலுக்கு இதுவரை 5 முறை திருக்குட நீராட்டு விழா நடைபெற்றுள்ளது. முதல் திருக்குட நீராட்டு விழா எப்பொழுது நடைபெற்றதெனத் தெரியவில்லை. 2-2-1949, 1-7-1974, 19-8-1988, 27-3-2002 ஆகிய நாட்களில் திருக்குட நன்னீராட்டு விழாக்கள் நடைபெற்றன.*

*"சிற்பங்கள் இல்லாமலேயே ஓங்கி உயர்ந்து நிற்கும் ஐந்து நிலை இராசகோபுரத்தின் மாட்சியும், செங்கலைக் கொண்டே சிறப்பாகக் கட்டப்பட்டுள்ள கட்டடக்கலையின் நுணுக்கமும், கோபுர நிலைகளை அடைய அமைக்கப்பட்டிருக்கும் ஒரே கல்லால் ஆன படிக்கட்டுகளும், இதனைப் பிற கோபுரங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன" என மாத்தூர் இராசகோபுரக் கட்டடக் கலையைப் பார்த்து வியந்து புகழ்கிறார் மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

*இராசகோபுரப் படிக்கட்டுக்களை ஒரே கல்லில் அமைத்ததைப் போலவே, கோவில் மகா மண்டப முகவாயிலையும் ஒரே வெள்ளைக் கல்லில் இரு யானைகளுடன் கூடிய படிக்கட்டுக்களை யும், வாயிற் காவலர் பீடத்தையும் அமைத்துள்ளனர்.*

இதனை மா. சந்திரமூர்த்தி, "இப் பாங்கு நகரத்தார்களின் கட்டடக்கலையின் மேன்மையினையும், சிற்பிகளின் சீரிய கலைத்திறனையும் வெளிப்படுத்தி நிற்கின்றன" எனக் குறிப்பிடு கின்றார்.

(நன்றி : மாத்தூர் கோவில்)

சண்டிகேசுவரர் கோவில் அடி முதல் கலசம் வரை வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. இக் கோவிலின் கலசத்திற்கு மேல் உள்ள விதானப் பகுதியைக் கவிழ்ந்த குடை போலக் குடைந்து, அதன் நடுவில் சிறு துளையிட்டுள்ளனர். மழை பெய்கின்றபோது இத் துவாரத்தின் வழியே மழை நீர் இறங்கி கலசத்தையும், விமானத்தையும் தூய்மைப்படுத்துகிறது.

"இது நகரத்தார் காலக் கட்டடக் கலையின் மாட்சிக்குக் கட்டியம் கூறுகிறது" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

மகா மண்டபம், விழா மண்டபம், திருச்சுற்று ஆகிய பகுதிகளில் காற்றும், வெளிச்சமும் வரும்படி மேலே உயர்த்தி, சன்னல்கள் அமைத்துக் கட்டப்பட்டுள்ளது. இதற்கு 'எடுத்துக்கட்டி மண்டபம்' என்று பெயர்.

நகரத்தார்கள் தங்கள் வீடுகளையும் காற்றும், வெளிச்சமும் வருமாறு உயர்த்தியே கட்டுவார்கள்.

ஆல்ய அபிஷேக நீர் சாளரங்களின் வழியே திருமதிலுக்கு வெளியே உள்ள நீர்த் தொட்டிக்குப் போய்ச் சேருமாறு அமைக்கப்பட்டுள்ளது. கழிவு நீர் வெளியேறத் தனிச் சாளரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

விலங்கு, பறவை, சித்தர்கள், முனிவர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், கிம்புருடர்கள், தெய்வத் திருஉருவங்கள் முதலியவற்றைக் கல்லிலே வடித்த சிற்பங்கள் சிற்பிகளின் கலைநயத்தைக் காட்டுகின்றன. இக் கோவிலில் அக் கலைநயத்தை நிறையவே காணலாம்.

இலக்கியங்களில் காணப்படும் களிறுகளையும் (ஆண் யானைகள்), பிடிகளையும் (பெண் யானைகள்) இக் கோவிலில் காணலாம். இவ் யானைகள் பல்வேறு உணர்ச்சிகளை வெளிப் படுத்தும் வண்ணம் வடிக்கப்பட்டுள்ளன.

அம்மன் கோவில் முக மண்டபம் யானைகள் சூழ அமைக்கப் பட்டுள்ளது.

சுவாமி சன்னதியோ சிம்மங்கள் தூண்களில் அலங்கரிக்க அமைக்கப்பட்டுள்ளது.

"பல்லவர்களின் யானைத் தோற்றத்தில் ஒரு கம்பீரம். சோழர்களின் யானை வேகமாய் ஓடுவதிலே ஓர் அழகு. விசய நகரத்து யானை நடப்பதிலே ஒரு வனப்பு. ஆனால், நகரத்தார் கால யானைகளோ வளர்ச்சியை வெளிப்படுத்தும் வனப்புடையவை" எனப் பாராட்டுகிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

மனித உருவங்கள் மூலமாகப் பல்வேறு உணர்ச்சிகளைக் காட்டுவது இயல்பு. ஆனால் யானைகள் மூலமாகப் பல்வேறு உணர்ச்சிகளை இக் கோவிலில் கல்லிலே காட்டியுள்ளது வியப்புக்குரிய ஒன்று.

கலங்காத கண்ட விநாயகர் கோவில் முக மண்டபத்தில் ஆண் யானை, பெண் யானை, அதன் குட்டி என யானைக் குடும்பமே படம் போல கல்லிலே சித்தரிக்கப்பட்டுள்ளது.

மற்றொரு தூணில் யானையும், காளையும் ஒரு தலை இரு உடலாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. அதனை இடது பக்கத்தில் இருந்து பார்த்தால் யானையாகவும், வலது பக்கத்திலிருந்து பார்த்தால் காளையாகவும் தெரியுமாறு இச் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.

நேரில் பார்ப்பதைப் போன்று சிம்ம சிற்பங்கள் பலவற்றைச் சிற்பிகள் இக் கோவிலில் வடித்துள்ளனர். அடர்ந்த பிடரிமுடி, பரந்த முகம், பிளந்த வாய், கூரிய பற்கள், புடைத்த நாசி, திறந்த விழிகள், அடர்ந்த புருவம், நீண்ட உடல், கால்கள், கூரிய நகங்கள் பெற்று சிம்மங்கள் காட்சி தருவதாக வடிக்கப்பெற்றுள்ளன.

சிம்மங்களில் சில சீறிப் பாய்கின்றன. சில கர்ஜனை செய்கின்றன. உணவை வாயில் கவ்விய நிலையில் சில உள்ளன. இவை ஆப்பிரிக்கா நாட்டு சிம்மங்களை நினைவூட்டுகின்றன.

சிவபெருமானின் வாகனமான ரிஷபம் (எருது), அம்பாளின் வாகனமான சிம்மம், விநாயகரின் வாகனமான மூசிகம், முருகனின் வாகனமான மயில், இந்திரனின் வாகனமான ஐராவதம் (யானை),

திருமாலின் வாகனமான கருடன், பிரம்மாவின் வாகனமான அன்னம் முதலிய சிற்பங்கள் அழகாக வடிக்கப் பெற்றுள்ளன.

இக் கோவிலில் சுவாமி சன்னதி மற்றும் அம்மன் சன்னதி கூரையில் மிக இயற்கையாகக் குரங்குகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. குரங்குகள் ஓடுவதும், தாவுவதும், குதிப்பதும், சீறுவதும், நடப்பதும் எனப் பல நிலைகளில் சித்தரிக்கப்பட்டுள்ளன.

குரங்குக்குட்டிகள் வாழைப்பழத்தைத் தின்கின்றன. பெண் குரங்குகள் (மந்தி) மாம்பழத்தைத் தின்கின்றன. ஆண்குரங்குகள் (கடுவன்) தேங்காய் மூடியைச் சுரண்டுகின்றன.

சில குரங்குகள் கூரையை பிடித்துத் தலைகீழாகத் தொங்குகின்றன. சில குரங்குகள் கொடுங்கைமீது நடந்து செல்கின்றன.

குரங்குகளைப் போலவே உடும்புகளையும் பல்வேறு நிலைகளில் வடித்திருப்பதை இக் கோவிலில் காணலாம். அம்மன் சன்னதி அதிட்டானத்தில் முதிய உடும்பை நாம் காணலாம். முதிய உடும்பு ஒன்று கபோதகத்தின்மீது கூரையை இறுகப் பற்றியவாறு கீழே குனிந்து தரையைப் பார்க்கிறது. குட்டி உடும்பும் இங்குள்ளது.

"இலுப்பைக்குடிக் கோவிலில் பல்லியின் சிறிய உருவம் காட்டப்பட்டுள்ளதுபோல், இங்கு உடும்பின் உருவம் காட்டப் பட்டுள்ளது" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

பல்வேறு விலங்குகளை உயிரோவியமாக வடித்துள்ள இக் கோவில் கலைக்கூடமாக காட்சி தருகிறது.

இதனை, "நகரத்தார்கள் கலைப்பாணி மலர்ந்துள்ள கோவில்களில் ஒன்றே மாத்தூர் ஐந்நூற்றீசுவரர் கோவில்" எனக் குறிப்பிடுகிறார் மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

நகரத்தார்களின் ஒன்பது நகரக் கோவில்களில் அதிகமான புள்ளிகளைக் கொண்டது மாத்தூர் கோவிலாகும். இங்கு அரண்மனை போன்ற விடுதி உள்ளது.

நகரத்தார்கள் மரபுப்படி இக் கோவிலைச் சார்ந்தவர்கள் கோவிலில் பாக்கு வைத்து, கோவில் மாலை பெற்றுத் திருமணத்தைப் பதிவு செய்து நடத்துகின்றனர். திருமணம் நடப்பதற்கு மூன்று நாட்கள் முன்பாகக் கோவிலில் பாக்கு வைக்க வேண்டும். அக் கோவில் பங்காளி பாக்கு வைக்கச் செய்வது வழக்கம்.

## கோயில் அமைப்பு

கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம், அம்மன் சன்னதி, நந்தி பீடம், கொடிமரம், திருச்சுற்று மாளிகை, பரிவார ஆலயங்கள், இராசகோபுரம், விழா மண்டபம் முதலிய அமைப்பில் இக் கோவில் கட்டப்பட்டுள்ளது.

பரிவார தெய்வங்களுக்குச் சிறிய ஆலயங்கள், மேடைகள் கட்டப்பட்டுள்ளன.

இக் கோவிலின் உள்ளே தெற்குப் பகுதியில் மகிழமரத்து முனீஸ்வரர் உள்ளார். மகிழ மரத்தில் முனீஸ்வரர் ஐக்கியமாகி உள்ளார். எனவே இவர் மகிழமரத்து முனீஸ்வரர் என்றழைக்கப்படுகிறார். இவருக்கு கோவில் இல்லை. மரத்துக்கு முன்பு மேடை மட்டும் உள்ளது. அனைவரும் மரத்தையும், அம் மேடையையும் வணங்குகின்றனர்.

இக் கோவிலுக்குத் தல விருட்சம் இல்லை. மகிழ மரமே தல விருட்சமாகக் கருதப்படுகிறது.

கோவிலின் தென்கிழக்கு மூலையில் திருப்புனவாசல் சாதுவின் உருவம் உள்ளது. இவர், நகரத்தார்களின் மரியாதைக்குரியவராவார்.

வடக்கில் பள்ளியறையும், உக்கிராண அறையும், மடப்பள்ளியும் உள்ளன.

கோவிலுக்கு வெளியே கமலாலயம் என்ற திருக்குளமும், கலங்காத கண்ட விநாயகர் கோவிலும் உள்ளன.

கோவில் வாயில் நிலைகளின் இரண்டு பக்கமும் சிற்ப வேலைப்பாடுகளுடன் அரைத்தூண்கள் உள்ளன. சமயச் சிற்பங்கள் பலவும், நாட்டியப் பெண்கள் பலரும் தூண்களில் செதுக்கப் பட்டுள்ளனர்.

சுவரின் மேலே கருவறையை மூடும் கூரையில் பூத கணங்களின் உருவத்திற்குப் பதிலாக விரிந்த பூக்களை ஒத்த மதளைகள்

காணப்படுகின்றன. மரத்தைச் செதுக்கி வைத்ததைப் போலக் கொடுங்கைகள் காணப்படுகின்றன. சான்றாகத் தட்சிணாமூர்த்தி மேற்கூரையைக் கூறலாம்.

முருக்குக் கம்பிகளையும், ஆணிகளையும் கல்லிலே வடித்துள்ளனர். இதுவும் நகரத்தார் காலக் கட்டடக் கலைக்குச் சான்றாகும்.

கொடுங்கைக்குப் பேர் பெற்றது ஆவுடையார் கோவில் கொடுங்கையாகும். அதற்கு நிகராக இக் கோவில் கொடுங்கைகளைக் கூறலாம்.

கருவறைக்கு மேல் இரு தளங்கள் உள்ளன. இவைகள் சாலைகளாலும், கர்ண கூடங்களாலும் மாறிமாறி இணைக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கிடையே பஞ்சரங்கள் உள்ளன.

"சாலைகள் மற்றும் கர்ண கூடங்களின் கால்கள் தனித்தனியாகச் செதுக்கப்பட்டுள்ளது. இது அக் காலக் கட்டடக் கலையின் நுட்பமான வேலைப்பாட்டை வெளிப்படுத்துவதாக அமைகிறது" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

திருநிலைக் கால்களின் பக்க முனைகளில் பூவிதழ்கள் வரிசையாக வெட்டப்பட்டுள்ளன. அதன் பக்கங்களில் கல்மணிகள் காணப் படுகின்றன. மேலே விரிந்த தாமரை காணப்படுகிறது.

அர்த்த மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் நிலவறை உள்ளது. இது போர் நடக்கும்போதும், பகைவர்கள் தாக்க வரும்போதும், உற்சவ விக்கிரகங்கள் மற்றும் விலை உயர்ந்த ஆபரணங்களைப் பாதுகாப்பதற்கு ஏற்ற விதத்தில் கட்டப்பட்டுள்ளது.

விளக்கு மாடங்கள் உள்ளன. அர்த்த மண்டப வாயிலின் மேற்புறம் கஜலெட்சுமி காட்சி தருகிறாள். அவளின் இரு பக்கங்களிலும், இரு பெண்கள் ஒரு கையில் மலரும், மறு கையில் அன்னமும் ஏந்தியவாறு உள்ளனர்.

அர்த்த மண்டப வாயிலை ஒட்டி அரைத்தூண்கள் உள்ளன. புஷ்ப போதிகை மீது துவார பாலகர்கள் இருவரும், வெண்ணெய் தின்னும் கண்ணனின் இரு சிறு உருவங்களும் காணப்படுகின்றன.

அரைத்தூண்களின் உட்புறத்தில் அன்னப்பறவை, லிங்கத்திற்குப் பால் சொரியும் பசு, குதிரை வீரர்கள், களிறு, தாமரை, யாளி ஆகிய உருவங்கள் காணப்படுகின்றன.

நான்கு தூண்கள் மகா மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. தூணின் சதுரப்பட்டையில் தெய்வ உருவங்களும், சாதுக்களின் உருவங்களும் காணப்படுகின்றன. இத்தூண்கள் 16 பட்டைகளாகச் செதுக்கப்பட்டுள்ளன. அப்பட்டைகளின்மீது பூக்களாலான இடைவார் செதுக்கப்பட்டுள்ளது.

போதிகையின்மீது கிளிகள் உள்ளன. அவைகள் வாழைப்பூவைக் கடிக்கின்றன.

போதிகையின்மீது இரு உடல்களும், ஒரு தலையும் கொண்ட சிம்ம உருவத்தை அமைத்துள்ளனர்.

"நகரத்தார்களின் மற்ற கோவில்களுக்கு இல்லாத தனிச்சிறப்பு இக் கோவில் மகா மண்டபத்திற்கு உண்டு. இக் கோவில் மகா மண்டப வாயிற் படிகளும், அப் படிகளை அலங்கரிக்கும் இரு யானைகளும், அதையொட்டி உள்ள துவார பாலருக்குரிய இரண்டு நீண்ட பீடங்களும் ஒரே கல்லால் ஆனவை.

இத்தகைய நீண்ட வெள்ளைக் கல்லைக் கொண்டு மகா மண்டப வாயிற் படிகளையும், யானைகளையும், பக்க பீடங்களையும் அமைத்துள்ள பாங்கு போற்றுதற்குரியது. இவ் ஆலயத்திற்கு வரும் ஒவ்வொருவரும் கண்டு இன்புறத்தக்கது. இது நகரத்தார் காலக் கட்டடக் கலையின் மேன்மைக்குச் சான்றாக விளங்குகிறது" என வியந்து பாராட்டுகிறார் மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

நடராசர் சன்னதியின் மேற்கூரை சதுரமாய் அமைக்கப் பட்டுள்ளது. சுவாமி சன்னதியைப் போல, இவ் விமானத் தளமும் கர்ணகூடம் மற்றும் சாலை என மாறி மாறி அமைக்கப்பட்டுள்ளது. இடையிடையே சிறு சன்னல்களும் காணப்படுகின்றன.

இச் சன்னதியை ஒட்டி நீண்ட கல் மேடை உள்ளது. அதில் நடராசர், சிவகாமி அம்மன், மாணிக்கவாசகர் உருவ, உலோக சிலைகள் உள்ளன. இவற்றிற்கு நித்திய பூசை நடைபெறுகிறது.

நகரத்தார் காலக் கட்டடக் கலையின் மேன்மையை அடையாளம் காட்டும் விதமாக, விமானத் தளங்களை அலங்கரிக்கும்

தூண்கள் ஒவ்வொன்றும் தனித்தனியே செங்கல்லினால் கட்டப்பட்டுள்ளது. விமானக் கோட்டங்களில் நடராசர், நான்முகன், திருமால், முருகன் எனத் தெய்வ உருவங்கள் காணப்படுகின்றன.

வரிசைக்கு எட்டுத் தூண்கள் என இரண்டு வரிசைகளில் பதினாறு தூண்கள் முக மண்டபத்தில் உள்ளன. இவை ஒரே கல்லால் ஆன தூண்களாகும். இவை அணியொட்டித் தூண் வகையைச் சார்ந்ததாகும். இத் தூண்களின் கீழ்ப் பகுதி செவ்வக வடிவிலும், நடுப்பகுதியும், மேல் பகுதியும் சதுர வடிவிலும் அமைக்கப் பட்டுள்ளன. இத் தூண்களின் நான்கு மூலைகளிலும் நாக பந்தங்கள் காணப்படுகின்றன.

இப் பூ வேலைப்பாட்டை மா. சந்திரமூர்த்தி, "மிக நுட்பமாகப் பூ முனையைத் தனியாகச் செய்து, காடி எடுத்து அதைச் சிற்பிகள் பொருத்தியுள்ள பாங்கு போற்றுதற்குரியது. அக்காலக் கட்டடக் கலையின் மாட்சியை இது தெளிவுபடுத்துகிறது" எனப் புகழ்கிறார்.

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

நகரத்தார்களின் கட்டடக் கலைக்குச் சிகரமாய் அமைந்தது முக மண்டபத்தை அலங்கரிக்கும் கர்ணக்கால் தூண்களாகும்.

மதளைகளில் கூரிய பற்களை உடைய மகர மீன்கள் காணப்படுகின்றன. இது நகரத்தார்கள் அறிமுகப்படுத்திய மற்றொரு கட்டடக் கலைப்பாணியாகும்.

இதனை வியந்து மா. சந்திரமூர்த்தி இவ்வாறு பாராட்டுகிறார்.

"இம் மதளைகளின் இடைப்பகுதிகளில் இறக்கைகளுடன் கூடிய கந்தர்வப் பெண்களின் கைகளில் குழல் கொண்டு ஊதுவதும், நாட்டியப் பெண்கள் ஒயிலாக முத்திரை காட்டி நிற்பதும், இரு கைகளை விஸ்மய முத்திரையில் வியக்கும் கரமாகக் கொண்டு காத்து நிற்கும் வனிதையரின் உருவங்களும், நகரத்தாரால் அறிமுகப்படுத்தப் பட்ட கட்டடக் கலைப்பாணிக்கு மற்றொரு எடுத்துக்காட்டாகும்".

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

இரு கர்ணக்கால் முகப்புத் தூண்களில் மூசிக வாகனத்தின் மீது தேவியுடன் விநாயகர் உள்ளார். வடபுறத்தில் மயில் வாகனத்தில் முருகன் உள்ளார்.

முக மண்டபத்தின் முன்புறம் நந்தி பீடம், பலி பீடம், கொடிமரம் உள்ளது. மேற்கூரையில் 12 இராசிகள் பொறிக்கப் பட்டுள்ளன.

மேற்சுற்றுப் பிரகாரத்தில் 80 தூண்கள் உள்ளன. திருச்சுற்று மாளிகையில் 70 தூண்கள் உள்ளன. இதன் தென்மேற்கு மூலையில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் உருவச்சிலைகள் உள்ளன.

கன்னி மூலையில் கணபதி உள்ளார். அவர் அருகில் ஆதிலிங்கம் உள்ளது. அதன் முன்பு பழைய நந்தி உள்ளது. காசி விஸ்வநாதர் லிங்க வடிவில் உள்ளார். அவரருகில் விசாலாட்சி நின்ற கோலத்தில் உள்ளார்.

சிறிய நந்தி ஒன்று அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. அதன் கழுத்தில் கயிறும், மணிகள் கோர்த்த வாரும், இரு கொம்புக்களுக்கிடையில் பூச்சரமும், கொண்டு செதுக்கப்பட்டுள்ளது.

சோமாஸ்கந்தர், கணபதி சன்னதிகள் நீண்ட சன்னதிகளாக எழுப்பப்பட்டுள்ளன. இடையே சுவரால் தடுத்துள்ளனர். சோமாஸ்கந்தர் விமானம் ஒரு தளத்தை உடையது.

சனகாதி முனிவருடன் தட்சிணாமூர்த்தி அமர்ந்துள்ளார்.

மழு, மான் ஏந்தி சிவபெருமான் உமாதேவியுடன் காட்சி தருகிறார்.

நான்முகன் (பிரம்மா) சாவித்திரி, சரஸ்வதி என இரு தேவியருடன் உள்ளார்.

இந்தியா சுதந்திரம் அடைந்ததை நினைவூட்டும் விதத்தில் மகாத்மா காந்தியடிகள், ஜவகர்லால் நேரு ஆகியோரின் உருவங்கள் விநாயகரின் பக்கத்தில் காணப்படுகின்றன.

பிட்சாடனர் திருக்கோலம் அழகுற வடிக்கப்பட்டுள்ளது. இவர் நான்கு கரங்களுடன் காட்சி தருகின்றார். மேல் வலக்கரத்தில் உடுக்கை, மேல் இடக்கரத்தில் நீண்ட திரிசூலம், கீழ் வலக்கையில் மான், கீழ் இடக்கையில் கபாலம், தலையில் ஜடாபாரம் கொண்டு காட்சி தருகிறார். தாழ்சடை தொங்குகிறது. வலது காதில் மகரக்குழை, இடது காதில் ஓலைக்குழை அணிந்துள்ளார். கழுத்தில் கற்கள் பதித்த ஆபரணம் அணிந்துள்ளார். தோள்களில் தோள்வளை, மார்பில் பூணூல், இடையில் ஆடை இன்றிக் காட்சி தருகிறார்.

இச் சிற்பம் நகரத்தார் காலச் சிற்பிகளின் அழகிய கைவண்ணச் சிற்பமாகும்.

திருச்சுற்று மாளிகையின் மேற்குத் திசையில் வரதராசப் பெருமாள் சன்னதி உள்ளது. திருமகளும் (ஸ்ரீதேவி), நிலமகளும் (பூதேவி) பெருமாளின் இரு பக்கங்களிலும் நிற்கின்றனர்.

வடமேற்கில் சுப்பிரமணியர் சன்னதி உள்ளது. அவரின் பத்துக் கைகளில் ஆயுதங்களும், இரு கரங்களில் அபய, வரத முத்திரைகளும் காணப்படுகின்றன. வேலைப்பாடு மிக்க திருவாட்சி உள்ளது.

மகாலெட்சுமி சன்னதி உள்ளது. அவளின் இரு பக்கங்களிலும் இரு யானைகள் நீர் சொரியும் நிலையில் வடிக்கப்பட்டுள்ளது. இத் திருவாட்சியும் அழகிய வேலைப்பாட்டுடன் காணப்படுகிறது.

வடக்குப் பகுதியில் பள்ளியறை உள்ளது. காலைச் சந்தியாகிய திருவனந்தல், இரவு சந்தியாகிய அர்த்தசாமம் ஆகிய இரு காலங்களில் பூசை நடைபெறுகிறது. இப் பள்ளியறை கருப்புக்கல்லால் எழுப்பப்பட்டுள்ளது.

பள்ளியறைக் கருகே பைரவர் சன்னதி உள்ளது. தாமரை ஆசனத்தில், ஆடை இல்லாமல், நான்கு கரங்களுடன் நின்ற 'கோலத்தில் பைரவர் காட்சி தருகிறார். மேல் வலக்கையில் உடுக்கை, மேல் இடக்கையில் அரவம், கீழ் வலக்கையில் சூலம், கீழ் இடக்கையில் கபாலம் ஏந்தி காட்சி தருகிறார்.

தலையில் அனல் மகுடம், வலது காதில் மகரக்குண்டலம், இடது காதில் பத்ரகுண்டலம், தோளில் தோள்வளை, கையில் காப்பு, மார்பில் அரவப் பூணூல், மேல் வயிற்றில் உதரபந்தம், இடையில் ஆடும் அரவ (பாம்பு) அரைஞாண் (பட்டுக் கயிறு) அணிந்து பைரவர் காட்சி தருகிறார். அவரின் பக்கங்களில் இரு நாய்கள் உள்ளன.

"மாத்தூரில் இருக்கும் பைரவர் உருவம் இலுப்பைக்குடி பைரவர் உருவத்துடன் ஒப்பிடத்தக்கது. இலுப்பைக்குடி பைரவர் காலத்தால் முற்பட்டவர். மாத்தூர் பைரவர் காலத்தால் பிற்பட்டவர். இலுப்பைக்குடி பைரவரின் மேல் இடது கையில் பாசம் காட்டப்பட்டுள்ளது. மாத்தூர் பைரவர் மேல் இடக்கையில் ஆடும் அரவம் உள்ளது. அரவத்தின் வால் பகுதி பைரவரின் முழங்கையைச் சுற்றி உள்ளது. இது தவிர ஏனைய ஆயுதங்கள் ஒத்துள்ளன. இலுப்பைக்குடிப் பைரவரை விட மாத்தூர் பைரவர் உருவில் சிறியது"

என இரு கோவில் பைரவர்க்கும் ஒப்புமை காட்டுகிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

## இராச கோபுரம்

'கோபுர தரிசனம் பாப விமோசனம்', 'கோபுர தரிசனம் கோடிப்புண்ணியம்' எனக் கூறுவதை நாமறிவோம். வானளாவிய கோபுரத்தைத் தூரத்தில் பார்க்கும்போதே, நம்மை அறியாமல் நம் கைகள் வணங்கத் தொடங்கிவிடும். இது தொட்டில் பழக்கம்.

'கோ' என்றால் இறைவன். 'புரம்' என்றால் கோட்டை.

நம் முன்னோர்கள் கோவிலைச் சுற்றி மதில் எடுத்தனர். அதன் ஒருபுறம் வாயில் அமைத்தனர். அவ் வாயிலின் மேலே பெரிய கோபுரத்தைக் கட்டினர். அதுவே இராச கோபுரமாகும்.

மாத்தூர் கோவில் இராசகோபுரம் 5 நிலைகளுடன் கிழக்குப் பார்த்துள்ளது. கோபுரத்தின் 5 நிலைகளை அடைய கல் படிக்கட்டுக்கள் உள்ளன.

"இப்படிக்கட்டுக்கள் ஒரே கல்லால் செய்யப்பட்டுள்ளது கோபுரத்தின் சிறப்புகளில் ஒன்று" எனப் பாராட்டுகிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

சுண்ணாம்பையும், செங்கல்லையும் பயன்படுத்தி இக் கோபுரம் கட்டப்பட்டுள்ளது. இக் கோபுரத்தில் 7 கலசங்கள் உள்ளன. கோபுர வாயிலில் உள்ள இரு நிலைக்கால்களில் கொடிப் பெண்கள் காணப்படுகின்றனர். இரு நிலைக்கால்களில் 20 முனிவர்களும், நிலைக்காலின் மேற்பகுதியில் 7 முனிவர்களும் ஆக 27 முனிவர்கள் பல்வேறு யோகாசன நிலையில் உள்ளனர்.

இத் தலத்தில் தவம் செய்த கொங்கணச் சித்தர் வடக்குப் பகுதியில் உள்ளார். அவருடன் இராமகிருஷ்ண பரமஹம்ஸரும், விவேகானந்தரும் உள்ளனர். தெற்குப் பகுதியில் ரமண மகரிசியும் உள்ளார்.

"கோபுர நிலைக்கால்களில் தவமுனிவர்களையும், சாதுக்களையும், சித்தர்களையும், யோகிகளையும், முதிர்ந்த

சமயவாதிகளையும் சித்தரிக்கும் வழக்கம் இக் கோபுரத்தில் மட்டுமே அமைக்கப்பட்டுள்ளது. இது இக் கோவிலின் சிறப்புக்களில் ஒன்றாகும். இவ்வாறு சித்தர்களையும், பிற ஞானிகளையும் வேறு கோபுரங்களில் காண்பதரிது" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

இரண்டாவது நிலைக்காலில் பல்வேறு இசைக் கருவிகளை இசைக்கும் கந்தர்வர்கள் காணப்படுகின்றனர். இவர்களின் எண்ணிக்கையும் 27 ஆகும்.

## விழா மண்டபம்

இராச கோபுரத்தின் முன்புற'ம் விழா மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தை 42 தூண்கள் தாங்கி நிற்கின்றன. இம் மண்டபத்தை எடுத்துக்கட்டி மண்டபம் எனவும் அழைக்கின்றனர்.

இம் மண்டபத்தை 28 சிறிய தூண்களும் தாங்கி நிற்கின்றன. இத் தூண்களில் சதுரப்பட்டைகள் உள்ளன. அப் பட்டைகளில் தெய்வ உருவங்களும், அவற்றிற்குரிய வாகனங்களும் செதுக்கப்பட்டுள்ளன.

இராமாயணச் செய்திகள் இங்கு சிற்பமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன. பறவை மற்றும் விலங்குகளின் உருவங்களும் இம் மண்டபத்தில் உள்ளன. சான்றாக கருடன் ஆடும் அரவத்தைக் கையில் பிடித்து விளையாடும் காட்சியைக் கூறலாம்.

திருவிழாக் காலங்களில் பஞ்சமூர்த்திகளை அலங்கரித்து இம் மண்டபத்தில் கொண்டுவந்து வைப்பார்கள். பக்தர்கள் அமர்ந்தும், நின்றும் பஞ்சமூர்த்திகளை வணங்கும் வண்ணம் திட்டமிட்டு இம் மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

திருமதிலை ஒட்டி இம் மண்டபத்தின் இரு பக்கங்களிலும் விநாயகருக்கும், சுப்பிரமணியருக்கும் சிறிய சன்னதிகள் உள்ளன. முகப்பில் சுந்தரரின் கல்யாண மணக்கோலம் சுதை வடிவில் உள்ளது.

"ஏனைய நகரக் கோவில்களில் இத்தகைய விசாலமான விழா மண்டபத்தை இராச கோபுரங்களின் முன்பு காண்பதரிது" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

## பெரியநாயகி அம்மன் கோவில்

வடக்குத் திசையில் தெற்கு முகமாகச் சதுரக் கருவறையில் பெரியநாயகி அம்மன் உள்ளாள். இரண்டு கரங்களுடன் பத்ம பீடத்தில் நின்ற கோலத்தில் உள்ளாள்.

வலது கையில் நீலோற்பவ மலரும், இடது கையில் லோல முத்திரையும், தலையில் கரண்ட மகுடமும், காதுகளில் மகரக்குண்டலங்களும், கழுத்தில் மணிமாலை மற்றும் மங்கல அணியும் (தாலி), கைகளில் வளையல்களும், இடையில் ஆடையும், காலில் பாதரட்சையும் அணிந்து பெரியநாயகி அன்னை அருள் வழங்குகிறாள்.

அர்த்த மண்டப வாயிலில் கஜலெட்சுமியின் புடைப்புச் சிற்பமுள்ளது. அன்னையின் வாகனமான சிம்மங்கள் வாயிற்படியின் இரு பக்கங்களிலும் காத்து நிற்கின்றன.

சுவாமி கோவிலுக்கு இணையாக அம்மன் கோவிலிலும் சிற்ப வேலைப்பாடுகள் காணப்படுகின்றன.

அம்மனின் அபிசேக நீர் வெளியே செல்ல சிம்மவாய் கோமுகி உள்ளது.

அம்மன் கோவில் விமானம் தாங்கிகளாகப் பெண் உருவங்கள் உள்ளன. எட்டுத் திசைகளிலும் எட்டுப்பெண் உருவங்கள் உள்ளன. இப்பெண்களில் ஒரு பெண் குழந்தைக்குப் பால் ஊட்டுகிறாள். மற்றொரு பெண் வானைக் காட்டிக் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டுகிறாள்.

முதல் தளத்தில் அன்னையின் இருபுறமும் இரு பணிப் பெண்கள் கைகளில் சாமரை ஏந்தி பணி செய்கின்றனர். தென் திசையில் உள்ள இவர்களை மகேசுவரி என அழைக்கின்றனர்.

வட திசையில் நான்கு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் பிராமி உள்ளாள். இங்கும் இரு தாதியர் உள்ளனர்.

மேற்குத் திசையில் ஆழியும், சங்கும் ஏந்திய வைஷ்ணவி உள்ளாள்.

கிழக்குத் திசையில் கௌமாரி உள்ளாள். இவ் உருவங்கள் இரண்டாம் தளத்திலும் உள்ளன.

அம்மன் சன்னதி முகமண்டபத்தை 8 தூண்கள் தாங்கி நிற்கின்றன. இத் தூண்களின்மீது யானைகளும், கந்தர்வர்களும் உள்ளனர்.

அம்மன் கோபுரம் 3 நிலைகளை உடையது. 6 கலசங்கள் உள்ளன. துவாரசக்தி, சங்கு ஊதும் பெண், சிவகணங்கள், நந்தி எனச் சிற்பங்கள் நிறைந்து காணப்படுகிறது.

'கமலாலயம்' என அழைக்கப்பெறும் தெப்பக்குளம் செம்பராங்கல்லால் கட்டப்பட்டுள்ளது. இத் தெப்பத்தில் தெப்போற்சவம் நடைபெறும்.

## கலங்காத கண்ட விநாயகர் கோவில்

திருக்குளத்தின் வடக்கில் கலங்காத கண்ட விநாயகர் கோவில் உள்ளது. கருவறையில் நான்கு கரங்களுடன் விநாயகர் அமர்ந்த கோலத்தில் உள்ளார். மேல் கைகளில் அங்குசமும், பாசமும் உள்ளன. கீழ்க்கைகளில் தந்தமும், மோதகமும் உள்ளன. தலையில் கரண்ட மகுடமும், இடையில் கச்சும் உள்ளது.

இவர் இடப்புரி விநாயகர். நித்திய வழிபாடு உள்ளது.

லிங்கத்திற்குப் பால் சொரியும் பசு, நீண்ட துதிக்கையுடைய யானை, இராமாயணக் காட்சிகள், லிங்கத்தைக் கட்டிப்பிடித்த மார்க்கண்டன், மகேஸ்வரியை வணங்கும் அடியார், மலர் ஏந்திய அன்னை, உமாதேவி, தண்டாயுதபாணி, நர்த்தன விநாயகர் ஆகிய சிற்ப ஓவியங்கள் இக்கோவிலில் காட்சியளிக்கின்றன.

நாசிக்கூடுகளில் யோகேஸ்வரர், ஆடவல்ல பெருமான், ஆனைத்தோலை உரித்தாடும் பெருமான், ஐங்கரன், ஆறு கரங்களை உடைய ஆனைமுகத்தான், உபதேசம் பெறும் அநுமான், வீடணன், அங்கதன், சித்தி - புத்தி என இரு தேவியருடன் விநாயகர், பஞ்சமுக கணபதி, மூசிக வாகன விநாயகன், அரக்கியின் தனத்தில் பால் குடிக்கும் கண்ணன், நரசிம்மர், கண்ணப்பர், மகேஸ்வரர், கால சம்கார மூர்த்தி, நிசம்பசூதனி, ஆனந்தமுனி, கிராம தெய்வம், கால பைரவர், வேணுகோபாலன், ஊர்த்துவ இறைவன், ஆலங்காட்டுக் காளி, வீரபத்திரர், ஆறுமுகன் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

இக் கோவிலில் ஐந்து வித விநாயகர் வடிவங்கள் உள்ளன. பஞ்சமுக விநாயகர் சிம்ம வாகனத்தில் உள்ளார். சிம்ம வாகன கணபதியை 'ஹேரம்ப கணபதி' என அழைக்கின்றனர்.

இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, பத்து, பதினான்கு கரங்களுடன் இங்கு விநாயகர் உள்ளார்.

வல்லபை கணபதியும், உச்சிஷ்ட கணபதியும் இங்குள்ளனர்.

விநாயகரின் விமானத்தில் பல்வேறு தெய்வ உருவங்கள் உள்ளன.

சுற்றுப் பிரகாரத்தில் 14 சித்திர மண்டபத் தூண்கள் உள்ளன. இத் தூண்களில் சைவ, வைணவ சிற்பங்கள் உள்ளன. மூன்று தலையையும், ஓர் உடலையும் உடைய அன்னம் அழகிய சிற்பமாகும்.

இங்கு கழைக் கூத்தாடிகளின் விளையாட்டுக்கள் சித்திரமாக வடிக்கப்பட்டுள்ளன.

பெரிய யாளி ஒன்று யானையின் துதிக்கையைப் பற்றியுள்ளது.

"இத்தகைய காட்சிகள் சோழர், பாண்டியர், விசயநகர நாயக்கர் காலத்தில் காட்டப்பட்டிருப்பினும், நகரத்தார் காலச் சிற்பிகள் அக் காட்சியை அமைத்திருக்கும் முறைகளிலிருந்து தம்மை வேறுபடுத்திக் காட்டுகின்றனர்" எனக் குறிப்பிடுகிறார் மா.சந்திரமூர்த்தி.

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

மேலும் வியந்து மா. சந்திரமூர்த்தி, "இங்குள்ள சிற்ப கலைச் செல்வங்கள் எல்லாம் சிறிய அளவில் சிற்பியின் வித்தகத் திறனை நன்றாக விளக்கும் அற்புத வடிவங்களாக உள்ளன" எனக் கூறுகிறார்.

**(நன்றி : மாத்தூர் கோவில்)**

தெட்சிணாமூர்த்தித் தூணின் கால்பகுதி மலர்ந்த தாமரை வடிவுடையது. இத் தாமரை மலர் 64 இதழ்களை உடையது.

இத் தாமரை இலுப்பைக்குடிக் கோவிலில் உள்ள தாமரையை விட உருவில் பெரியது என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

சீறிப்பாயும் சிம்மங்களின் திறந்த வாயினுள் பெரிய கல் உருண்டைகளைச் சிற்பிகள் செதுக்கி உள்ளனர். சிம்மத்தின் திறந்த சிறிய வாயில் பெரிய கல் உருண்டையைச் செதுக்கி அமைத்தது நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. சிம்மத்தின் வாயினுள் இவ் உருண்டைக் கல்லைச் சுழலும்படி அமைத்துள்ளனர்.

மண்டபத்தின் மேல் உள்ள கூரைப்பகுதியில் கொடுங்கைகள் காணப்படுகின்றன. இதனை மாத்தூர் கொடுங்கை எனச் சிறப்பாகக் கூறுகின்றனர்.

அழல் பிழம்பாய்த் தோன்றும் சிவபெருமான், அவரின் முடியைத் தேடிச்செல்லும் அன்னம் (நான்முகன்), அவரின் அடியைத் தேடிச்செல்லும் வராகம் (திருமால்) ஆகிய உருவங்கள் தத்துருவமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

நான்கு முகங்கள், நான்கு கரங்கள் கொண்டு நின்ற கோலத்தில் நான்முகன் உள்ளார். பொதுவாக, நான்முகனின் சிற்பம் மூன்று தலைகளுடன் அமைந்திருக்கும். ஆனால், இக் கோவிலில் பெயருக்கேற்ப நான்கு தலைகளுடன் காணப்படுகிறார்.

"மாத்தூர் நான்முகன் நான்கு தலைகளுடன் காட்சி அளிப்பது இவ்வுருவை ஏனைய சிற்பங்களில் இருந்து வேறுபடுத்திக் காணவும், நகரத்தார் சிற்பக் கலையை அடையாளம் காணவும் உதவுகிறது" என்கிறார் மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மாத்தூர் கோவில்)

நகரத்தார் கலையைப் பிரதிபலிக்கும் மற்ற சிற்பங்கள் விநாயகரும், துர்க்கையும் ஆகும். இவை அர்த்த மண்டபத்தில் உள்ளன. இக் கோவிலில் 21 செப்புத் திருமேனிகள் உள்ளன. அதன் விபரம் வருமாறு :

விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர், சந்திரசேகரமூர்த்தி, சந்திரசேகர், அம்மன், பிரதோஷநாயகர், சோமாஸ்கந்தர், தனி அம்மன், சண்டிகேசுவரர், அஸ்தர தேவர், பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், அழகு நாச்சியம்மன் (பெரியது, சிறியது) நந்தி, பலிபீடம்.

இங்குள்ள நடராசர், முயலகன் மீது வலது காலை ஊன்றி நான்கு கரங்களுடன் ஆடும் நிலையில் உள்ளார். ஜடாமகுட விரிசடை ஐந்து பிரிவுகளாக விரிந்துள்ளது. விரிசடையின் இடப்புறம் பெரும்பாலும் காணப்படும் ஆடும் அரவம் காணப்படவில்லை.

"மாத்தூர் நடராசப் பெருமானுக்கென்று சில தனிச்சிறப்புகள் உண்டு" எனக் குறிப்பிடுகிறார் மா. சந்திரமூர்த்தி. அதன் விபரம் வருமாறு :

இடது காதில் மட்டும் பத்ரகுண்டலத்தையும், மகர குண்டலத்தையும் அணிந்து, வலது காதில் மகரத்தை மட்டும் குழையாகக் கொண்டு விளங்குகிறார். விரிசடை வனப்போடு வீழ்ந்து

*மேலேறும் எழிற்கோலம், நடராசரின் உடலில் உள்ள ஏழு அரவங்கள் ஆடும் காட்சி.*

(நன்றி : மாத்தூர் கோவில்)

*நடராசரின் திருவாட்சியில் 30 அக்னி ஜுவாலைகள் காணப்படுகின்றன. இது நகரத்தார் கால நடராசர் வடிவத்திற்குச் சான்றாகும்.*

## திருவிழாக்கள்

*இக் கோவிலில் திருவாதிரைத் திருவிழா, திருக்கார்த்திகைத் திருவிழா, தைப்பொங்கல் விழா, மகா சிவராத்திரி விழா ஆகிய விழாக்கள் நடைபெறுகின்றன.*

*70 ஆண்டுகளுக்குப் பிறகு சென்ற ஆண்டு முதல் பிரமோற்சவத் திருவிழா நடைபெறுகிறது.*

*இக் கோவிலில் மர வாகனங்களும், வெள்ளித்தகடு பொருத்தப் பெற்ற சிறிய ரிஷப வாகனமும் உள்ளது.*

*மாத்தூர் கோவில் நகரத்தார் விலாசம் மற்றும் விவரங்கள் தெரிந்து கொள்ள* 'Mathoor Koil.Com' *எனும் வலைதளத்தை* (Website) *ஏற்படுத்தி புள்ளிகளைப் பதிவு செய்ய ஆரம்பித்துள்ளார்கள்.*

*இக்கோவில் நகரத்தார்கள் கீழ்க்கண்ட 55 ஊர்களில் வசிக்கின்றனர்.*

1. அரண்மனை சிறுவயல்
2. அரிமழம்
3. அலவாக்கோட்டை
4. அளகாபுரி (கோ)
5. அளகாபுரி (பி)
6. ஆத்தங்குடி
7. ஆ.தெக்கூர்
8. ஆவினிப்பட்டி
9. இராயவரம்
10. உலகம்பட்டி
11. கடியாபட்டி
12. கண்டரமாணிக்கம்
13. கண்டவராயன்பட்டி

14. கண்டனூர்
15. கருங்குளம் (ப)
16. கல்லல்
17. கல்லுப்பட்டி
18. கானாடுகாத்தான்
19. கீழச்சிவப்பட்டி
20. கீழப்பூங்குடி
21. குருவிக்கொண்டான்பட்டி
22. குழிபிறை
23. கொத்தமங்கலம்
24. கோட்டையூர்
25. கோனாபட்டு
26. சண்முகநாதபுரம்
27. சிறுகூடல்பட்டி
28. உய்யக்கொண்டான் சிறுவயல் (2)
29. சொக்கநாதபுரம்
30. சொக்கலிங்கம்புதூர்
31. சோழபுரம்
32. தேவகோட்டை
33. நற்சாந்துப்பட்டி
34. நாட்டரசன்கோட்டை
35. நெற்குப்பை
36. நேமத்தான்பட்டி
37. பட்டமங்கலம்
38. பலவான்குடி
39. பள்ளத்தூர்
40. பனையபட்டி
41. பாகநேரி
42. புதுவயல்
43. மகிபாலன்பட்டி
44. மதகுபட்டி
45. மானகிரி
46. மிதிலைப்பட்டி
47. முத்துப்பட்டணம் (ஆ)
48. லெட்சுமிபுரம் (கொ)
49. லெட்சுமிபுரம் (வி)
50. வலையபட்டி
51. விரையாச்சிலை

52. வெற்றியூர்
53. வேகுப்பட்டி
54. வேந்தன்பட்டி
55. காரைக்குடி

மாற்றூர்கோ வில்பேர்வாழ் மாண்புமிகு செட்டிமார்கள்
ஆற்றுகின்ற அன்புநெறி ஆர்வமூட்டும் - ஏற்றமிகப்
போற்றுமை நூற்றீஸ்வரர் பேர்பெரிய நாயகியும்
போற்றியருள் பேறுபதினாறு.

(நன்றி : நல்லறக் கவிராயர் சுப.நா. நாகப்பன்)





## இலுப்பைக்குடிக் கோவில்

தான்தோன்றி வந்தானைச் சௌந்தரத்தாய்
கொண்டானை
மான்புலித்தோல் உடையானை மதகளிற்றைப்
படைத்தானைக்
கோன்பாண்டிநாட்டானைக் குலஇலுப்
பைக்குடியானை...

- கவிஞர் சித.சிதம்பரம்

(நன்றி : நகரக்கோவில் ஒன்பது திருப்பதிகம்)

நகரத்தார்களின் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் இலுப்பைக்குடிக் கோவில் ஒன்றாகும்.

இக் கோவிலின் சிறப்பைத் தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய அய்யர் இயற்றிய இலுப்பைக்குடிப் புராணம் என்ற நூல் விரிவாகக் கூறுகின்றது.

கி.பி. 714இல் பாண்டிய மன்னன் நகரத்தாருக்குக் கொடுக்க, நகரத்தார்கள் இக் கோவிலைக் கட்டினர்.

நகரத்தார் மரபில் முன்னோராகிய தனபதி என்பவரின் கனவில் சிவபெருமான் தோன்றி, சூடாமணி ஒன்றைக் கொடுத்து, இத் தலத்தில் சிவபுண்ணியங்களைச் செய்யக் கட்டளை இட்டதாக இலுப்பைக்குடிப் புராணம் தெரிவிக்கின்றது.

இலுப்பைக்குடிப் புராணத்தை எழுதிய தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய அய்யர் 'தனவைசியராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம்' என்ற நூலையும் எழுதியுள்ளார். இதன் முதற்பதிப்பு 1894லும், இரண்டாம் பதிப்பு 1904லும் வெளிவந்துள்ளது.

*தாம் வாழும் ஊர்கள் தோறும் நகரத்தார்கள் கோவிலைக் கட்டியுள்ளனர். அவற்றை முறையாகப் பராமரிக்க ஆண்டுதோறும் வரிக்கொடுத்து வருகின்றனர். எனவே நகரத்தார்கள் வாழ்வோடு பின்னிப் பிணைந்தது, இரண்டறக் கலந்தது கோவில்களாகும்.*

*சாயாவனம் என்றழைக்கப்படும் இப் பகுதியில் முன்னொரு காலத்தில் இலுப்பை மரங்கள் நிறைந்திருந்தன. அதனால் இவ்வூர் இலுப்பைக்குடி என அழைக்கப்பெற்றது.*

*பண்டைய நாளில் இலுப்பைக்குடி கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இருந்தது. பின்னர் உஞ்சனை நாட்டு 32½ கிராமங்களில் ஒன்றானது.*

*இக் கோவில் நகரத்தார் தாங்கள் எழுதும் இசைகுடிமானத்தில் "கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகலிடங் கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரமுடையார்" என்று தம்மைக் குறிப்பிடுவதிலிருந்து இவ் உண்மையை அறியலாம்.*

இலுப்பைக்குடிக்கு அதிவீரபாண்டியபுரம், இருப்பையூர், இலுப்பை நகர், சூடாமணிபுரம், நால்வேதபுரம், புகலிடம் கொடுத்த பட்டணம், பிரமபுரம், மதுகபுரம், வில்வவனம் என வேறு பெயர்களும் உண்டென இலுப்பைக்குடிப் புராணம் கூறுகிறது.

இக் கோவில் நகரத்தார்கள் தாங்கள் எழுதும் இசைகுடிமானத்தில், "பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகலிடம் கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரமுடையார்" என்ற வாசகங்களில் இருந்து, இவ் ஊரின் வேறு பெயர்களான புகலிடம் கொடுத்த பட்டணம், சூடாமணிபுரம் என்ற பெயர்கள் பேச்சு வழக்கிலிருந்து மறைந்தாலும், எழுத்து வழக்கில் மறையாதிருப்பதை அறியலாம்.

தனபதி என்ற நகரத்தாருக்குச் சிவபெருமான் சூடாமணியைக் கொடுத்துச் சிவபுண்ணியங்களைச் செய்யக் கட்டளை இட்டதை மறவாமல், இக் கோவில் நகரத்தார்கள் தாங்கள் எழுதும் (திருமண ஒப்பந்தத்தில்) இசைகுடிமானத்தில் சூடாமணிபுரமுடையார் எனக் குறிப்பிடுவதிலிருந்து இவர்களுடைய இறைப்பற்றையும், நன்றி மறவாப் பண்பையும் நன்குணரலாம்.

பெருகு நன்நதிசூழ் பிரம்பூர் நாட்டில்
அரசர்மகிழ் சூடாமணிபுரத்தில்

நாதர்தான் தோன்றி நாயகர் மருவிய
மாது வடிவுள்ள மங்கையைத் தொழுவோர்
மிகுதமிழ் வாதுவென்ற விற்பன்னர்
புகலிடம் கொடுத்த பட்டணம் உடையோர்

என 'ஏழு நகரத்தாரின் பேரில் குளுவ நாடகம்' என்ற நூலில் வரும் அடிகளும் இக் கூற்றை மெய்ப்பிக்கின்றன.

இந் நூல் இலுப்பைக்குடி ஊரின் பெருமையையும், புகழையும் விரிவாகக் கூறுகிறது.

"தொழிலில் வேறு யாரும் செய்ய முடியாத ஒரு சிறந்த பண்பை இவர்களிடம் (நகரத்தார்களிடம்) மட்டுமே காண முடிகிறது. தமது தொழிலில் நகரக்கோவில் இறைவனையும் ஒரு பங்குதாரராகச் சேர்த்துக்கொண்டு வரும் லாபத்தில் இறைவனுக்கும் ஒரு பங்கு ஒதுக்கி அதனை ஊருக்கு வரும்போது இறைவனுக்கு அளிப்பது வேறு யாரிடமும் காணமுடியாது" என நகரத்தார்கள் நகரக்கோவிலின் வளர்ச்சிக்கு எவ்வாறு பாடுபடுகிறார்கள் என்பதைக் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி தெளிவாகக் கூறுகிறார்.

(நன்றி : நகரத்தார் மரபும் பண்பாடும்)

"எத்தனை தூரத்தில் இருந்தாலும் தமது தெய்வங்களையும், முன்னோர்களையும் ஆண்டுக்கு ஒரு முறை சொந்த ஊருக்கு வந்து வழிபடும் உயர்ந்த பண்புடையவர்கள்" எனவும் நகரத்தார் பண்பாட்டை வியந்து போற்றுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மேற்படி நூல்)

## கோவிலின் அமைப்பு

இலுப்பைக்குடிக் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், அம்மன் சன்னதி, பைரவர் சன்னதி, இராசகோபுரம், திருச்சுற்று மாளிகை என்ற அமைப்பில் அமைந்துள்ளது. திருச்சுற்று மதிலின் பின்னால் நந்தவனம் உள்ளது.

கோவிலின் முன்பு செந்தாமரை, வெண்தாமரை நிறைந்த குளம் உள்ளது.

கோவிலின் கிழக்கே இராசகோபுரம் உள்ளது.

இறைவன் தான்தோன்றீசுவரர். இவர் தானே முளைத்த, உளி படாத இலிங்கம். எனவே இவர் தான்தோன்றீசர் என

அழைக்கப்படுகிறார். இறைவி வடிவுடையம்மை என்ற சௌந்தரநாயகி. இங்கு தினந்தோறும் ஐந்துகாலப் பூசை நடைபெறுகிறது.

சாயாவனம் இலுப்பை மரங்கள் நிறைந்த பகுதி என அறியப்பட்டிருந்தாலும், இக் கோவிலின் தல விருட்சம் இலுப்பைமரம் அல்ல, வில்வ மரம் ஆகும்.

பிரம்மதேவர், வேதங்கள், கிருஷ்ணர், கொங்கணச்சித்தர், திரிபுவன சக்கரவர்த்தி, அதிவீரபாண்டியர் முதலியோர் தான்தோன்றீசரை வணங்கிப் பேறு பெற்றதாகத் தலபுராணம் கூறுகிறது.

இக் கோவிலில் பிரம்மதீர்த்தம், சிவகங்கைத்தீர்த்தம், கௌரிதீர்த்தம் என மூன்று தீர்த்தங்கள் உள்ளன. இதில் நீராடுவது நற்பயனளிக்கும்.

கருவறையை மூடியிருக்கும் கூரைப்பகுதியில் பொதுவாகக் காணப்படும் பூதகணங்கள் இக் கோவில் கூரையில் இல்லை.

கருவறைக் கூரையில் வரிசையாக மதளைகள் காணப் படுகின்றன.

கூரைப்பகுதியில் வேலைப்பாடு மிக்க கொடுங்கை உள்ளது. இதற்குச் சான்றாகத் தட்சிணாமூர்த்தி சன்னதியைக் குறிப்பிடலாம்.

எல்லா நகரக்கோவில்களிலும் காணப்படுவதைப்போல, இக் கோவிலிலும் முறுக்குக்கம்பிகள், உருளைக்கம்பிகள், நீண்ட கம்பிகளை ஒத்த கல்வேலைப்பாடுகள், இது அக்காலச் சிற்பிகளின் கலைத்திறனுக்குச் சான்றாகும்.

இதனை நகரத்தாரின் கலைப்பணி என்று பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

அர்த்தமண்டபம் செவ்வக வடிவில் தூண்கள் இன்றி கெஜலெட்சுமி சிற்பங்களுடன் விளங்குகிறது.

அர்த்த மண்டபத்தின் முன்னால் மகா மண்டபம், சதுரவடிவில் உள்ளது. மண்டபத்தின் நடுவே நான்கு தூண்களும், மேடையில் இரு தூண்களும் உள்ளன. சுவாமி சன்னதிக்கு முன் மண்டபமாகவும், அம்மன் சன்னதிக்கு மகா மண்டபமாகவும் உள்ள மண்டபமே மகா மண்டபம் என அழைக்கப்படுகிறது.

கங்கை, யமுனை என்ற இரு கொடிப் பெண்கள் வாயிலை அலங்கரிக்க வடிவுடையம்மன் சன்னதி தென்திசையில் உள்ளது.

அம்மன் சன்னதியை அடுத்து பள்ளியறை உள்ளது. அதனை அடுத்து பைரவர் சன்னதி உள்ளது. திருச்சுற்றில் விநாயகர், சுப்பிரமணியர், சண்டிகேசுவரர் சன்னதிகள் கருங்கல்லில் அமைக்கப்பட்டுள்ளது.

கருவறையைச் சுற்றி விழும் நீர் வெளியேறத் தனிச் சாளரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இதனை, "இக்கோவிலின் கட்டிடக்கலைச் சிறப்புக்களில் ஒன்றாகக் கருதலாம்" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

இக் கோவிலில் உள்ள பரிவார தெய்வங்களில் பைரவர் மிக உயர்ந்தவராகக் கருதப்படுகிறார். எனவே பைரவர் வழிபாடு இங்கு பிரதானமாகும்.

இதற்குரிய காரணம் வருமாறு :

கும்பாண்டன் என்னும் அசுரன் தேவர்களுடன் போரிட்டு வென்று இந்திரலோகத்தைக் கைப்பற்றிக் கொண்டான். இந்திரனும், தேவர்களும் சிவபெருமானிடம் முறையிட்டனர். அச்சமூட்டும் வடிவில் சுயம்பு லிங்கத்திலிருந்து பைரவர் தோன்றினார். அசுரனைத் திரிசூலத்தால் வதம் செய்து அழித்தார். தேவர்களின் பயத்தைப் போக்கினார்.

தேவர்களின் வேண்டுகோளின்படி, ஈசானிய மூலையில் வீற்றிருந்து பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார்.

இச்செய்தி இக்கோவில் தல புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

இவ்வரலாற்றை,

கும்பாண்ட அசுரனுக்கு தேவர்குழாம் தாம் பயந்து
நம்பியே சரணென்று திரிசூல நடமிட்டு
வம்பர்களை அழித்தவனே, வளர் இலுப்பைக் குடியானே!
வகையறியா இந்திரர்க்காய் வயிரவராம் மூர்த்தியாகி
புகலிடம் கொடுத்தவனே! புகழ் இலுப்பைக்குடியானே!

எனக் கவி பாடுகிறார் கவிஞர் சித. சிதம்பரம்.

(நன்றி : நகரக்கோவில் ஒன்பது திருப்பதிகம்)

மாத்தூரில் உள்ளதைப் போல, இக் கோவிலிலும் பைரவர் இரண்டு வாகனங்களுடன் உள்ளார்.

நகரக் கோவிலாகிய இச் சிவன் கோவிலில் பைரவர் வழிபாடு பிரதானமாய் உள்ளதால், இக் கோவிலைப் பைரவர் ஆட்சி செய்வதாகக் கூறலாம்.

நகரத்தாரும், நாட்டாரும், ஏன் எல்லோரும் பைரவரை மிகவும் பயபக்தியுடன் வணங்குகின்றனர்.

ஆண்டுதோறும் சித்திரா பௌர்ணமியன்று காவடி எடுப்பது, முடி இறக்குவது, குழந்தைகளுக்குப் பெயர் சூட்டுவது போன்ற நிகழ்வுகள் இக் கோவிலில் நடைபெறுகின்றன.

இலுப்பைக்குடி நகரத்தார் எக் காரியத்தைத் துவக்கினாலும், கடிதம் எழுதினாலும், திருமண அழைப்பிதழ் அச்சிட்டாலும் 'வேணும் வயிரவமூர்த்தி துணை' என எழுதுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

இதிலிருந்து இவர்கள் வயிரவமூர்த்தியிடம் கொண்ட ஈடுபாடு நன்கு புலனாகிறது.

திருச்சுற்று மாளிகையைச் சுற்றி சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த 73 தூண்கள் உள்ளன.

பள்ளியறைக்குப் பின்னால் சதுரங்க மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தை முறுக்குத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. இம் மண்டபம் கொங்கணச் சித்தரின் மண்டபமாய் (சமாதியாக) இருக்கலாம் எனக் கூறுகின்றனர்.

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பாண்டிய மன்னன் சிவன் கோவில் ஒன்றை இங்கு கட்டினான். அக் கோவில் கால வெள்ளத்தால் அழிந்து போனது. அவ்விடத்திலேயே இன்றுள்ள கோவில் கட்டப் பெற்றதாகக் கூறுகின்றனர்.

பழைய கோவில் இருந்ததற்கு அடையாளமாக, இக் கோவிலின் திருச்சுற்றில் பைரவர், சண்டிகேசுவரர், திருமால் முதலிய தெய்வ உருவங்களும், அத் தெய்வங்களை வணங்கும் நிலையில் உள்ள பாண்டிய மன்னன் சிலையும் உள்ளது.

பழைய கோவிலில் இருந்த பைரவர் சிலை கிடைத்திருப்பதி லிருந்து தொடக்கக் காலம் முதலே இக் கோவிலில் பைரவர் ஆட்சி நடைபெற்று வருகிறது என அறிகிறோம்.

கி.பி. 714இல் பாண்டிய மன்னன் இக் கோவிலை நகரத்தாருக்குக் கொடுத்ததாக இக் கோவில் புராணம் கூறும் செய்தியிலிருந்து நகரத்தார்கள் இக் கோவிலை எழுப்பிய பின், வேறு ஒரு பாண்டிய மன்னன் புதிதாக ஒரு கோவிலை எழுப்பினானா, அக் கோவில் அழிந்ததா, அதனால் இன்றுள்ள கோவிலை நகரத்தார்கள் எழுப்பினார்களா என்பது ஆராயப்பட வேண்டும்.

கால வெள்ளத்தால் கோவிலும் அழிந்து, அதிலிருந்த கல்வெட்டுக்களும் அழிந்ததால் உண்மை வரலாற்றை அறிய இயலவில்லை.

ஆடவல்லான், சிவகாமி, சோமாஸ்கந்தர், சண்டிகேசுவரர், நர்த்தன ஞானசம்பந்தர், வீணாதர தட்சிணாமூர்த்தி ஆகிய செப்புத் திருமேனிகள் இக் கோவிலில் வழிபாட்டில் உள்ளன.

சிவன் கோவில் நந்தவனத்திற்குப் பக்கத்தில் பெருமாள் கோவில் இருந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன. வரதராசப் பெருமாள் என்று அழைக்கப்படும் இப் பெருமாள் சிலை தற்போது சிவன் கோவிலில் பிரதிஷ்டை செய்யப் பெற்று வழிபாட்டில் உள்ளது.

விநாயகர், மன்றய்யனார், பத்ரகாளியம்மன் முதலிய தெய்வங்களுக்குத் தனிக் கோவில்கள் உள்ளன.

## சிற்பங்கள்

சுவாமி சன்னதித் தூணில் காணப்பெறும் விநாயகர், சண்டிகேசுவரர் சன்னதி முன்பு காணப்படும் சிறிய விநாயகர், இரையைக் கவ்வ முயலும் பல்லி, தட்சிணாமூர்த்தி மண்டபத் தூண் மீதுள்ள கல்தாமரை, இரு உடலும் ஒரு முகமும் கொண்ட நந்தி, உடும்புக் குடும்பம், கோவில் கூரையிலும், கொடுங்கையிலும் துள்ளிக்குதிக்கும் குரங்குக் கூட்டம் எனப் பல சிற்பங்கள் நகரத்தார் காலச் சிற்பிகளின் கைவண்ணத்தைக் காட்டும் வண்ணம் வடிக்கப்பட்டுள்ளன.

அழகிய இக் கோவிலை உருவாக்கியவர்கள் எழுவன் கோட்டை சிற்பிகள் ஆவர்.

இக் கோவிலுக்கு 1842, 1882, 1901, 1959, 1985, 2001 ஆகிய ஆண்டுகளில் திருக்குட நன்னீராட்டு விழாவினை இக் கோவில் நகரத்தார்கள் சிறப்பாக நடத்தினார்கள்.

1985இல் புதிய ஐந்து நிலை இராச கோபுரம் இக் கோவிலில் கட்டப்பெற்று குடமுழுக்கு விழா நடத்தப்பெற்றது.

மன்னர் பின்னோர்களாகிய நகரத்தார்கள், மன்னர்களுக்குப் பின் கோவில்களைக் காத்தனர். கலைகளை வளர்த்தனர். சிற்பிகளை ஆதரித்தனர். புதிய கோவில்களைக் கட்டினர். பழைய கோவில்களைப் புதுப்பித்தனர். குடமுழுக்குச் செய்தனர். சுருங்கச் சொல்லின் 'கோவில் காவலர்களாய்' இருந்தனர். இன்றும் இருக்கின்றனர்.

வழிவழியாக சிவனையே வழிபடு கடவுளாகக் கொண்டு வாழும் சைவ மரபினரான நகரத்தார்கள் சிவன் கோவிலை மட்டுமல்லாது, பெருமாள் கோவிலையும் கட்டினர், பழுது பார்த்தனர், குடமுழுக்குச் செய்தனர். இன்றும் இப் பணியைத் தொய்வின்றிச் செய்து வருகின்றனர்.

இது இவர்களின் சமயப் பொறையைக் காட்டுகிறது. இதனால்தானே 'கோவிலில் விரிசலா? கூப்பிடு செட்டியாரை' என்ற சொலவடையே தோன்றியது.

"செட்டிநாட்டுப் பகுதியிலும், பிற பகுதியிலும் நகரத்தார் வளர்த்த கோவிற்கலையை 'நகரத்தார் கலை' எனக் கூறலாம்" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

நகரத்தார்களின் குலமரபுக் கோவில்களான ஒன்பதிலும் நகரத்தார்கள் வளர்த்த கட்டடக்கலை, சிற்பக்கலை, படிமக்கலை, ஓவியக்கலை முதலியவற்றைக் கண்டு களிக்கலாம்.

இக் கோவிலில் உறைந்துள்ள இறைவன் தான்தோன்றீசுவரர் ஆவார். மற்ற கோவில்களில் உளியால் செதுக்கப்பட்ட லிங்கங்களே உள்ளன. ஆனால், இக் கோவில் இறைவன் உளி படாத, தானே தோன்றியவர். எனவே, இவர் தான்தோன்றீசர் எனப்படுகிறார். உருவில் சிறிய லிங்கமாக உள்ளார். இருதள விமானமும், வட்ட வடிவிலான சிகரமும் கருவறையில் உள்ளன.

அஷ்டதிக்குக் கஜங்கள் என்ற எட்டுத்திசை யானைகள் கருவறையைச் சுமந்து நிற்பதுபோல அமைக்கப்பட்டுள்ளது. இவ் யானைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான உணர்ச்சிகளை வெளிக்காட்டுவதாக மிக்க கவனத்துடன் செதுக்கப்பட்டுள்ளன.

கருவறைப் புறச்சுவரில் தென்முகமாகத் தட்சிணாமூர்த்தி உள்ளார். வடக்கு முகமாக பிரமன் உள்ளார். மேற்கு முகமாக அடிமுடி காணா அண்ணலாகிய லிங்கோத்பவர் உள்ளார்.

சிறிய பல்லி ஒன்று தரையைப் பற்றிக்கொண்டு தன் முன்னுள்ள பூச்சியைக் கவனமாகப் பிடிக்கச் செல்லும் நிலையில் குமுதப்பட்டையில் செதுக்கப்பட்டுள்ளது. அக்காலச் சிற்பியின் கை வண்ணத்திற்கு இச் சிற்பம் சிறந்த சான்றாகும்.

யானைச் சிற்பங்களின் சிறப்பை, "ஆலவாய்ச் சொக்கர் சன்னதியில் உள்ள இந்திர விமானத்தைத் தாங்கும் வெள்ளை யானைகளை விட உருவில் சிறுத்தும், நுட்பமான வேலைப்பாட்டில் தனித்தும் விளங்குவது இங்குள்ள சிற்பங்களின் தனிச்சிறப்பாகும்" என மதிப்பிடுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

நின்ற கோலத்தில் உள்ள இடப்புரி விநாயகர் அங்குசப் பாசம் ஏந்தி அர்த்த மண்டபத்தில் உள்ளார்.

விநாயகரின் மேற்புற, கீழ்ப்புறச் சுவரில் பிட்சாடனார் உருவமும், ஆணவம் கொண்ட தருகனின் தலையை அறுக்கும் வீரபத்திரரின் உருவமும் உள்ளன.

இச் சுவரில் உள்ள அரைத் தூண்களில் காமதேனு, தக்கனுக்கு அறிவுரை கூறும் முனிவர், லிங்கத்திற்குப் பால் சொரியும் பசுக்கள் முதலியன புடைச்சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

விஷ்ணு துர்க்கையை வடதிசையில் காண்கிறோம். இதன் மேற்புறமும். கீழ்ப்புறமும் உள்ள சுவரில் அர்த்தநாரீசுவரர் சிற்பமும், கண்ணப்பருக்கு அருள் பாலிக்கும் சிவபெருமான் சிற்பமும் உள்ளன. அர்த்த நாரீசுவரரின் வலப்புற மேற்கை மங்கையைப் பற்றி உள்ளது. கீழ்க்கை அபயம் அளிக்கிறது. பெண் பாகத்தில் உள்ள இடப்புற மேற்கை மலரைப் பற்றியுள்ளது. கீழ்க்கை தொடை மீதுள்ளது.

வலக் காதில் மகரக்குழையும், இடக் காதில் ஓலைக்குழையும் அணிவிக்கப்பட்டுள்ளது.

வலப்புற இடையில் தோல் ஆடையும், இடப்புற இடையில் துகிலும் அணியப்பட்டுள்ளது.

இவ்வாறு அப்பனும், அன்னையும் இணைந்த அர்த்தநாரீசுவரர் வடிவம் அனைவரும் கண்டு வியக்கத்தக்க வடிவில் வடிக்கப் பட்டுள்ளது.

ஒரே சிற்பத்தில் ஆண் பெண் உருவை வேறுபடுத்திக் காட்டியிருப்பது நகரத்தார் காலச் சிற்பிகளின் கலைத்திறனுக்கும், கற்பனை ஆற்றலுக்கும் சான்றாகும்.

கல்லிலே கண்ணப்ப நாயனார் புராணம் சுவையாக வடிக்கப் பெற்றுள்ளது.

கபோதகத்தின் மேலும், கூடுகளிலும், இடை இடையேயும் பல்வேறு அழகிய சிற்பங்கள் உள்ளன. அதன் விபரம் வருமாறு :

சிவனும், பார்வதியும் கைலாயத்தில் வீற்றிருக்க, இராவணன் கீழே அமர்ந்து வீணை வாசிக்கின்றான் (சாம கானம்). குரங்குகளின் பல்வேறு தோற்றங்கள் காணப்படுகின்றன. ஐந்து தலை நாகத்தின் கீழ் அமர்ந்திருக்கும் பிரான் (திருமால்), குதிரையில் வரும் கருப்பன், பொம்மியைத் தூக்கிச் செல்லும் மதுரைவீரன், இரு நாய்களுடன் பைரவர், ஆடையில்லாமல் மோகினியாகத் தோன்றும் அரி (திருமால்), அரிமேல் மையல் கொள்ளும் முனிவர்கள், குழலூதும் கண்ணன், நாரையின் வாயைப் பிளக்கும் கண்ணன், சிவனின் பல்வேறு தோற்றங்கள், அனுமனுக்கு உபதேசம் செய்யும் இராமன், எருமைத் தலை அசுரனை (மகிசாச்சுரன்) அழிக்கும் எட்டுக்கை துர்க்கை (மகிசாசுரமர்த்தினி), மன்மதன், பதஞ்சலி வியாக்ரபாதர், வீரபத்திரரின் பல்வேறு தோற்றங்கள் எனப்பல சிற்பங்கள் சுவாமி சன்னதியைச் சுற்றிலும் உள்ளன.

இவை தவிர, சிவபுராணம், திருவிளையாடற்புராணம் முதலியவற்றில் சொல்லப்பட்ட செய்திகள் சிற்பமாக வடிக்கப் பெற்றுள்ளன.

மகா மண்டபத் தூண்கள் ஆறிலும் இத்தகைய சிற்பங்கள் உள்ளன.

அங்கயற்கண்ணி திருமணம், குருந்த மரத்தடியில் மாணிக்கவாசகருக்குச் சிவபெருமான் உபதேசிக்கும் காட்சி, நரசிம்மரின் கோபத்தைத் தணிக்கத் தோன்றிய சரபேஸ்வரர் முதலியன சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

புலிக்கால் முனிவரான வியாக்ரபாதர், பஞ்சமுகச் சிவன், காளிங்கக் கண்ணன், யாளி, பாம்பைக் கொத்தும் மயில், பிடாரி

அம்மன், வடிவுடையம்மன் எனச் சிற்பங்கள் மகா மண்டபத்தின் இரண்டாவது, மூன்றாவது தூண்களில் செதுக்கப் பெற்றுள்ளன.

மகா மண்டப வாயிலில் உள்ள இரண்டு அரைத்தூண்களிலும் பல சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

அன்னத்தின் முகம், சிங்கத்தின் கால்கள், பறவையின் சிறகுகள் கொண்ட விநோதப் படைப்பு காணத் தகுந்ததாகும்.

அசுர உருவில் வந்த யானையைக் (கஜமுகாசுரன்) கிழித்து ஆடையாகப் போர்த்திப் பத்துக் கைகளுடன் ஆடும் கஜ சம்ஹாரமூர்த்தியின் உருவமும் காணத்தகுந்தது.

இரணியன் சம்ஹாரக் காட்சிகள், சிவனின் இரு புறங்களிலும் வணங்கும் பிரமன், திருமால், அக்கமாலையும், வில்லும் ஏந்தி ஒற்றைக்காலில் தவம் செய்யும் அர்ச்சுனன், அடியார்கள் வணங்கும் காட்சிகள் எனப் பல சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

அம்மன் சன்னதியிலும் பத்துத் தூண்கள் உள்ளன.

முதல் தூணில் ஏர்க்கலப்பையையும், உலக்கையையும் ஏந்தி, நான்கு கரங்களுடன் வராக உருவம் சிம்மத்தின் மீது அமர்ந்துள்ளதாகச் செதுக்கப்பட்டுள்ளது.

எதிரில் உள்ள தூணில் அன்ன வாகனத்தின் மீது நான்கு தலைகளுடன் உள்ள பிராமி அமர்ந்துள்ளாள்.

இரண்டாவது தூணில் ஐந்து தலைப்பாம்பின் கீழ் அமர்ந்த கோலத்தில் உள்ள வைணவியின் உருவம் உள்ளது.

எதிரில் உள்ள தூணில் அமர்ந்த கோலத்தில் உள்ள மகேஸ்வரியின் உருவம் உள்ளது.

மூன்றாவது தூணில் உமையும், எதிரே குதிரையின்மீது அமர்ந்துள்ள சக்தியின் உருவமும் உள்ளன.

இத் தூண்களின் பின்னால் மதுரைவீரன், கருப்பசாமி, பஞ்சமுக தெய்வம் உள்ளனர்.

நான்காவது தூணில் ஐராவதம் என்ற யானையின்மீது அமர்ந்துள்ள இந்திரனும், எதிரே சிம்மவாகினியும் உள்ளனர்.

இத் தூணின் மறுபுறத்தில் துவாரக சக்தி உள்ளாள்.

ஐந்தாவது தூணில் நடனமிடும் ஊர்த்தவ தாண்டவமூர்த்தியும், திருவாலங்காட்டுக் காளியும், மத்தளம் கொட்டும் மகாவிஷ்ணுவும், தாளம் போடும் பிரம்மாவும் உள்ளனர்.

முன்புற வாயிலில் தத்ரூபமாக இரு யானைகள் செதுக்கப் பட்டுள்ளன. இவ் யானைகளுக்குப் பின்னால், சீறும் சிம்மத்தை அடக்கும் ஆடவனும், கூடை ஏந்தி நிற்கும் பெண்ணின் எழிற் கோலமும் செதுக்கப்பட்டுள்ளன.

பள்ளியறை மண்டபத்தையும் பத்துத் தூண்கள் தாங்கி நிற்கின்றன.

முதல் நான்கு தூண்களில் வீணை மீட்டும் பெண்களின் அழகிய வடிவைக் காண்கிறோம். பல்வேறு ஒப்பனைகளுடன் இப் பெண்கள் வடிக்கப் பெற்றுள்ளனர்.

மூன்றாவது தூணில் நடனமிடும் இரு பெண்கள் வடிக்கப்பட்டுள்ளனர். இத் தூணின் பின்பக்கம், குழலூதும் கண்ணனும், இசையில் மயங்கிய மாடுகளும் வடிக்கப்பட்டுள்ளன.

எதிரில் உள்ள தூணில் கண்ணனிடம் ஆடைகேட்டுக் கெஞ்சும் கோபியர்களின் சிற்பம் உள்ளது.

சங்கு ஊதும் பூதகி, நிர்வாணப் பெண்கள், நான்காவது தூணில் செதுக்கப்பட்டுள்ளனர்.

ஐந்தாவது தூணில் கண்ணப்பரும், மார்க்கண்டேயரும் செதுக்கப்பட்டுள்ளனர்.

பைரவர் சன்னதியிலும் பத்துத் தூண்கள் உள்ளன.

முதலிரு தூண்களில் சூரியன், சந்திரன், ஆட்டின்மீது அமர்ந்த அக்கினித் தேவன் முதலிய சிற்பங்கள் உள்ளன.

மூன்றாவது தூணில் மூன்று தலை, மூன்று கால் கொண்ட கரகேசுவரர் உள்ளார். அத் தூணின் மேலே ஈருடல், ஒரு தலையுடன் எருதும், யானையும் மோதும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது.

இத் தூணின் எதிரே நரசிம்மரின் கோபத்தைத் தணிக்கும் சிவபெருமானின் சரபை உருவமும் உள்ளது.

இச் சிற்பங்களை எல்லாம் கண்டு வியந்த திரு. மா. சந்திரமூர்த்தி, "நகரத்தார் காலச் சிற்பக்கலைக்கு இங்குள்ள சிற்பங்கள் அனைத்தும் சீரிய சான்றாக அமைந்துள்ளன" என்று குறிப்பிடுகிறார்.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

பாண்டியர் காலத்துப் பைரவருக்கு நகரத்தார்கள் கோவில் எடுத்துச் சிறப்பித்துள்ளனர்.

"இப்பைரவர் சிற்பம் இப் பகுதியில் உள்ள சாக்கோட்டை, ஆமூர் ஆகிய ஊர்களில் உள்ள பைரவர் சிற்பங்களுடன் ஒப்பு நோக்கத்தக்கது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

மேலும், "பைரவர் சன்னதி கபோதகப் பகுதியின் கூடுகளில் மட்டும் பதினைந்து வகையான பைரவரின் திருக்கோலங்கள் காட்டப்பட்டுள்ளது இச்சன்னதியின் சிறப்பு அம்சமாகும்" என்றும் குறிப்பிடுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : மேற்படி நூல்)

'பணம் தரும் பைரவர்' என்னும் குறுந்தகட்டை நல்லி குப்புசாமி செட்டியார் வெளியிட்டுள்ளார்.

(நன்றி : பூச்சரம் மே 2010)

ஏழு நாகங்களின் உருவங்கள் வழிபாட்டில் உள்ளன.

இதன் பின்னால் கல்லால் ஆன தலவிருட்சம் வில்வமரம் உள்ளது.

இவ்விடத்தில் மாத்தூரில் மாத்துரைத்த கொங்கணச் சித்தர் வழிபட்டதாகக் கூறுகின்றனர்.

தல புராணத்தின் அடிப்படையில் தல விருட்சத்தினைக் கல்லால் செதுக்கி, அதன் நடுவே கொங்கணச் சித்தர் சிவபூசை செய்வதாக அமைத்துள்ளனர்.

தட்சிணாமூர்த்திக்குத் தனி மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தின் முன்புறம் மரத்தைச் செதுக்கியது போன்று சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட தூண்கள் உள்ளன. இத் தூண்களின் சிற்ப வேலைப்பாடுகள் சிற்பிகளின் கைவண்ணத்தையும், கற்பனைத் திறனையும் கவினுற எடுத்துக் காட்டுகின்றன.

பொதிகை வளைந்த வாழைப்பூத் தாரை ஒத்துள்ளது. நான்கு தூண்களின் பலகைப் பகுதியில் ஒருதலை ஈருடல் உள்ள நந்திகள் உள்ளன.

மண்டபத்தின் முன்னுள்ள இரு தூண்களில் அருள் பாலிக்கும் அன்னை, மன்மதன், ரதி உருவங்கள் உள்ளன.

"இத் தூண்களின் மேலுள்ள குடத்திற்கும், பலகைக்கும் நடுவே உள்ள கல்லிலே விரிந்த தாமரை அக் காலத்துச் சிற்பியின் படைப்புக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. 48 பூவிதழ்களைக் கல்லிலே மிக இயற்கையாகப் படைத்து தட்டினால்கூட ஒலிக்கும் அளவில் மிக மென்மையான தாமரை இதழ்களைத் தோற்றுவித்துள்ள பாங்கு போற்றத்தக்கது" எனத் தட்சிணாமூர்த்தி மண்டபச் சிற்பங்களைப் பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

மேலும், "இங்குள்ள பெரிய தூண்களுக்கும், பிள்ளைத் தூண்களுக்கும் இடையே கொடிக் கருக்கணியைப் போன்று அமைக்கப்பட்டுள்ள அழகிய வேலைப்பாடுகள் அமைந்த சன்னல்களின் கீழே ஒருபுறம் தாடி தரித்த முனிவன் ஒருவனும், அவ் உருவத்தின் பின்புறம் அழகிய கொடிப்பெண் ஒருத்தியும் காட்டப்பட்டுள்ளனர். 20 செ.மீ. உயரமுள்ள இவ் உருவம் ஒவ்வொருவரும் தவறாது காண வேண்டிய சிற்பமாகும்" என்றும் திரு. சந்திரமூர்த்தி குறிப்பிடுகிறார்.

சீறிப்பாயும் சிம்மங்களின் திறந்த வாயினுள் குண்டுகள் உள்ளன. கபோதகங்களின் மேல் தாயின் தனம் பற்றிய குழந்தை, பாம்புப்பிடாரன், வெண்ணையைத் திருடித் தின்னும் கண்ணன், அதைப் பார்த்த யசோதையின் வியப்பு என அற்புதமாக வடிக்கப்பட்டுள்ளன.

"கூரையைப் பற்றித் தவழ்ந்து வரும் குட்டி உடும்பு கீழே விழாவண்ணம் தாய் உடும்பு தன் கால்களால் பற்றி இழுத்துக் காக்கும் பாச உணர்வோடுள்ள உடும்புக் குடும்பத்தைக் காணலாம். இவ்விதம் கல்லிலே வடித்த காவியமாக இம்மண்டபம் திகழ்கிறது" எனவும் திரு. மா. சந்திரமூர்த்தி குறிப்பிடுகிறார்.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

*நடராசப் பெருமான் சன்னதிக்கு எதிரே உள்ள தூணின் தெற்குப் பகுதியில் இரண்டு கட்டை விரல் உயரம் கொண்ட சதுரத்திற்குள் மிக நுட்பமாக ஒரு விநாயகர் உருவம் காணப்படுகிறது. வேழ முகம், மூன்று கண்கள், ஐந்து கரங்கள், அணிகலன்கள் முதலியன மிக நுட்பமாகத் தெளிவாகச் செதுக்கப்பட்டுள்ளது நம்மை வியக்க வைக்கிறது.*

*விநாயகர் சன்னதியில் விநாயகர் நின்ற கோலத்திலும், நடனமிடும் கோலத்திலும், அமர்ந்த கோலத்திலும், சித்தி, வல்லபையுடனும், நான்கு கைகளுடனும், பத்துக் கைகளுடனும், மூசிக வாகனத்துடனும், சிவகணங்கள் புடை சூழவும், தனித்தும் என 17 இடங்களில் செதுக்கியுள்ளதைக் காணலாம்.*

*அதே போல சுப்பிரமணியர் 18 வகையில் செதுக்கப்பட்டுள்ளார்.*

*புதிய இராச கோபுரத்தில் சுதை வேலைப்பாடு அமைந்த பல்வேறு சிற்பங்களைக் காணலாம்.*

## வாகனங்கள்

*இக் கோவிலில் கற்பக விருட்சம், காமதேனு, பல்லக்கு, யானை வாகனம், மயில் வாகனம், குதிரை வாகனம் என மர வாகனங்கள் உள்ளன.*

## தேர்

*கி.பி. 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மரத்தேர் இக் கோவிலில் இன்னும் உபயோகத்தில் உள்ளது.*

*இத் தேர் மேல்த்தட்டு, நடுத்தட்டு, கீழ்த்தட்டு என மூன்று பகுதிகளாக உள்ளது.*

*ஒவ்வொரு தட்டிலும் பல்வேறு தெய்வீக உருவங்களும், உலகியல் உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன.*

*ஆலயம் எழுப்பப்பட்டபோதே இத் தேர் செய்யப்பெற்றதாகக் கூறுகின்றனர்.*

## செப்புத்திருமேனிகள்

*இக் கோவிலில் 28 செப்புத் திருமேனிகள் உள்ளன. அதன் விபரம் வருமாறு :*

ஆடவல்லான் : முயலகன்மீது வலது காலை ஊன்றி, இடது காலைத் தூக்கி, நான்கு கரங்களுடன் கூத்தாடும் பெருமானான ஆடவல்லான் படிமம் அற்புத வேலைப்பாட்டுடன் உள்ளது.

ஆடவல்லான் தலையில் சடை, மகுடம், மகுடத்தின் மேலே வலப்புறத்தில் ஆடும் அரவம், இடப்புறத்தில் இளம்பிறை உள்ளது. விரிசடையின் இடை இடையே மலர்கள் காணப்படுகின்றன. சடைமுடியில் கங்கை உள்ளது.

மேல் வலக்கையில் உடுக்கையும், இடக்கையில் அனலும், கீழ் வலக்கையில் அபய முத்திரையும், இடக்கை மார்புக்கு குறுக்கே உள்ளவாறும் இத் திருமேனி வடிக்கப்பட்டுள்ளது.

ஆடும் பெருமானின் கீழே விழுந்து கிடக்கும் முயலகன், பெருமானின் ஆட்டம் காணத் தலையைச் சாய்த்து, முகத்தை மேல்நோக்கித் திருப்பிப் பார்க்கும் நிலையில் வடிக்கப் பெற்றுள்ளான்.

**சிவகாமி அம்மன் :** இக்கோவிலில் உள்ள படிமங்களில் சிறந்ததாகச் சிவகாமி அம்மன் படிவம் உள்ளது.

மெலிந்த உடல், சரிந்த இடை, குவிந்த மார்பு, நீண்ட கரங்கள், நாணத்தில் கவிழ்ந்த தலை, கனிவான பார்வை என இப்படிமம் அற்புதமாக வடிக்கப் பெற்றுள்ளது.

**சிவன் :** நான்கு திருக்கரங்களுடன் சிவன் உள்ளார். மேலிரண்டு கரங்களில் மானும், மழுவும் உள்ளன. கீழிரண்டு கரங்கள் அபய முத்திரை காட்டுகின்றன. நெற்றியில் மூன்றாவது கண் உள்ளது.

**உமை :** தாமரை இருக்கையில் ஒரு காலை மடித்து, மறுகாலைத் தொங்கவிட்டு, இரண்டு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் உமையின் படிமம் உள்ளது.

**சோமாஸ்கந்தர் :** அம்மையும், அப்பனும் ஸ்கந்தருடன் உள்ளவாறு சோமாஸ்கந்தர் படிமம் காணப்படுகிறது.

**வீணாதரமூர்த்தி :** நின்ற கோலத்தில் வீணாதரமூர்த்தி படிமம் உள்ளது.

இவ்வடிவம் "உத்தமபாளையம் சிவாலயத்தில் உள்ள வீணாதர மூர்த்தியுடன் ஒப்பிடத்தக்கது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

இவ் வடிவத்தைச் சந்திரசேகர மூர்த்தியாக இக்கோவிலில் வழிபட்டு வருகின்றனர். உற்சவக் காலங்களில் இப்படிமம் உலாவாக எடுத்துச் செல்லப்படுகிறது.

போக சக்தி : ஒடுங்கிய முகம், மெல்லிய உருவம், நீண்ட நாசி, அருள் பொழியும் கண்கள், இளநகை புரியும் இதழ்கள், சிறிய கழுத்து, நீண்ட கரங்கள், அழகான தனங்கள், ஒசிந்த இடை என எழிலாகப் போகசக்திப் படிமம் உள்ளது.

"இவ் அம்மன் இவ்வாலயத்தில் உள்ள வீணாதரமூர்த்தியின் தேவியாக இருத்தல் வேண்டும்" என அபிப்பிராயப்படுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

பிடாரி அம்மன் : நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் பிடாரி அம்மன் உள்ளாள். மேல் வலக்கையில் திரிசூலம், இடக்கையில் கபாலக்கின்னம், தலையில் விரிந்த அனல் மகுடம், மகுடத்தில் ஆடும் அரவம், வலது காதில் பிரேதக் குண்டலம், இடது காதில் வட்டக்குழை அணிந்துள்ளாள்.

வட்ட முகம், வளைந்த புருவம், விரிந்த கண்கள், எடுப்பான நாசி, தடித்த இதழ், வளைந்த கோரைப் பற்கள், நெற்றிப் பொட்டு, தட்டையான தனங்களுடன் பிடாரி அம்மன் காட்சியளிக்கிறாள்.

இவ் ஊரில் ஆண்டுதோறும் நடைபெறும் சித்திரைத் திருவிழா ஆரம்பமாவதற்கு முன்பு முதல் செவ்வாயில் கிராமத் தெய்வத்திற்குக் காப்புக்கட்டி விழா எடுக்கும்போது இப் பிடாரி அம்மனைத் தேரில் வைத்து ஊர்வலம் வருகின்றனர்.

விநாயகர் : நின்ற கோலத்தில் விநாயகர் உள்ளார். மேல் வலக்கையில் நீண்ட அங்குசத்தையும், இடக்கையில் பாசத்தையும், இடக்கையில் உள்ள மோதகத்தை வளைந்த துதிக்கை பற்றும்படியும் வடிக்கப் பெற்றுள்ளார்.

"இப் படிமத்தை வார்த்த சிற்பி படிம அளவுகளைச் சிற்ப இலக்கணத்திற்கு ஏற்ப, பொருத்தமாய்ப் படிமத்தைப் படைத்துள்ளார்" எனப் பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

சண்டிகேசுவரர் : நின்ற கோலத்தில் சண்டிகேசுவரர் வடிக்கப் பெற்றுள்ளார். இருகரங்கள் அஞ்சலித்த நிலையில் உள்ளன. வலப்புற முன் தோளில் நீண்ட மழு உள்ளது. நீண்ட முகம், உயர்ந்த புருவம், விரிந்த கண்கள், எடுப்பான மூக்கு, குவிந்த வாய், நீண்டு மெலிந்த உடல் என இப் படிமம் வடிக்கப்பட்டுள்ளது.

ஞானசம்பந்தர் : மகிழ்ச்சியில் மூழ்கிக் கூத்தாடும் ஞானசம்பந்தரின் படிமம் காண்போருக்குக் களிப்பூட்டக்கூடியது. இப் படிமம் குழந்தைப் பருவத்தை வெளிப்படுத்தும் மேனியோடும், ஆடையற்ற திருக்கோலத்துடனும், அணிகள் முதலியனவும் கவனமுடன் வார்க்கப்பட்டுள்ளது.

சுந்தரர் : இடக்கை பரவை நாச்சியாரின் தோளில் இருக்கும்படி சுந்தரமூர்த்தி படிமம் வார்க்கப்பட்டுள்ளது. இச் செப்புத் திருமேனி பொன் வண்ணத்தில் ஒளிர்கிறது.

பரவை நாச்சியார் : நின்ற கோலத்தில் பரவை நாச்சியாரின் படிமம் வடிக்கப்பட்டுள்ளது.

"தமிழம் என்ற ஒருவகைத் தலைக்கோலம் நாச்சியாரின் இயல்பான அழகிய முடியை மேன்மேலும் அழகுபடுத்துகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

ஸ்ரீபலி நாயகர் : ஸ்ரீபலிநாயகர் என்ற உமா சகித சந்திரசேகரமூர்த்திப் படிமத்தில் சிவனும், உமையும் தனித்தனியாக நின்ற கோலத்தில் உள்ளனர். குவிந்த நீண்ட முகம், தூக்கிய புருவம், விரிந்த இமை, திறந்த கண்கள், கூரிய மூக்கு, அமைதியான உருவமாக அண்ணலின் படிமம் வார்க்கப்பட்டுள்ளது.

நின்ற கோலத்தில் தனி அம்மன் வார்க்கப்பட்டுள்ளது.

பிரதோஷ நாயகர் : சிவனும், உமையும் நின்ற கோலத்தில் பிரதோஷ நாயகர் உருவம் வார்க்கப்பட்டுள்ளது.

சுப்பிரமணியர் : சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை படிமங்கள் நின்ற கோலத்தில் தனித்தனியாக வார்க்கப்பட்டுள்ளன.

கொங்கணச்சித்தர் : சிவனடியாரில் ஒருவரான கொங்கணச் சித்தர் படிமம் இத் தலத்தில் உள்ளது. தாமிரத்தைத் தங்கமாக்கும்

இரசவாதத்தைக் கற்றவர் இவர். இதனை மாத்தூரில் சோதித்துப் பார்த்தார். (இவ்வரலாறு மாத்தூர் கோவில் வரலாற்றில் கூறப்பட்டுள்ளது)

இவருடைய பொன்னாசையைத் தான்தோன்றீசர் தானே தோன்றி நீக்கிய இடம் மதுகபுரம் என்னும் இத் தலமாகும்.

இக் கோவிலில் மட்டும்தான் கொங்கணச் சித்தருக்குச் செப்புத் திருமேனி உள்ளது.

இப் படிமம் மண்ணிலிருந்து எடுக்கப்பட்டதாகச் செவிவழிச் செய்தி உள்ளது.

## பள்ளியறைப் படிமங்கள்

பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன் படிமங்கள் உள்ளன.

**பைரவர் :** நான்கு திருக்கரங்களுடனும், திருவாட்சியுடனும் நின்ற கோலத்தில் பைரவர் படிமம் உள்ளது. மேல் கைகள் இரண்டும் உடுக்கையையும், பாசத்தையும் ஏந்தியுள்ளன. கீழ்க் கைகள் இரண்டும் திரிசூலத்தையும், கபாலத்தையும் ஏந்தியுள்ளன. பல்வேறு அணிகலன்கள், ஆடையற்ற திருஉருவம், நாய்வாகனம் எனப் பைரவர் படிமம் மிகச் சிறியதாய் வார்க்கப்பட்டுள்ளது.

"நகரத்தாரின் படிமக் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் இப் படிமம் விளங்குகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)**

**வடிவுடையம்மன் :** நின்ற கோலத்தில் நுட்பமான வேலைப் பாடுகளுடன் வடிக்கப்பட்ட வடிவுடையம்மன் படிமமும் சிறியதாய் உள்ளது.

இக் கோவிலில் உள்ள 18 செப்புத் திருமேனிகள் நகரத்தார்களால் செய்யப்பெற்றவை என்றும், எஞ்சியவை பாண்டியர்கள் கால ஆட்சியில் செய்யப்பெற்றவை என்றும் கூறுகின்றனர்.

**அஸ்திரத் தேவர் :** முத்தலைச் சூலமாக அஸ்திரத்தேவர் வடிக்கப்பட்டுள்ளார். சித்திரைத் திருவிழாவில் பத்து நாட்களும் இப் படிமம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது.

ஓவியங்கள் : சிவபெருமானின் 64 திருவிளையாடல்களைக் கூறும் நூல் திருவிளையாடல் புராணம். இந்நூலைப் பரஞ்சோதி முனிவர் இயற்றினார். புராண நூல்களில் சிறந்ததாக இந்நூல் கருதப்படுகிறது.

அதனால் இந் நூலின் காட்சிகளை ஓவியமாகக் கோவிலில் தீட்டும் வழக்கத்தை மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்கள் தொடங்கி வைத்தனர்.

இவர்களைத் தொடர்ந்து தஞ்சை மராட்டியர்களும், இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களும், சிவகங்கை மன்னர்களும் தாங்கள் எழுப்பிய கோவில்களில் வரைந்து வைத்தனர்.

மன்னர்களைத் தொடர்ந்து கோவில் காப்பாளர்களாகிய நகரத்தார்கள் தாங்கள் எழுப்பிய கோவில்களில் இத் திருவிளையாடற் புராணக் காட்சிகளை ஓவியமாகவும், சிற்பமாகவும் அமைத்தனர்.

நகரக் கோவில்கள் ஒன்பதில் இலுப்பைக்குடிக் கோவிலில் மட்டும்தான் திருவிளையாடற் புராணம் ஓவியமாகத் தீட்டப் பட்டுள்ளது. இது இக் கோவிலுக்குத் தனிச் சிறப்பாகும்.

இவ் ஓவியங்கள் திருச்சுற்று மாளிகையின் கீழ்த்திசைத் தூண்களின் மேலுள்ள சுவரிலும், வட்டச்சுவரிலும் தீட்டப் பட்டுள்ளன.

இக் கோவிலின் குடமுழுக்கு விழாக்களிலும் இவ் ஓவியங்கள் அழியாமல் பாதுகாக்கப்பட்டுள்ளன. இச் செயல் பழமையைப் போற்றும் நகரத்தாரின் பண்பாட்டுக்குச் சிறந்த சான்றாகும்.

அமர்ந்த கோலத்தில் பன்னிரண்டு கரங்களுடன் உள்ள விநாயகர் காட்சிதர திருவிளையாடற்புராண ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன.

இக் கோவிலில் வரையப்பட்டுள்ள ஓவியங்களின் விவரம் வருமாறு :

இந்திரன் பழி தீர்த்தது, வெள்ளை யானையின் சாபம் தீர்த்தது, திருநகரங் கண்டது, தாடகைப் பிராட்டியார் திரு அவதாரம், மீனாட்சி திருமணம், வெள்ளி அம்பலத்தில் திருக்கூத்தாடியது, குண்டோதரனுக்கு அன்னமிட்டது, அன்னக்குழியும் வைகையையும் அழைத்தது, எழுகடலை அழைத்தது, மலயத்துவசனை அழைத்தது, உக்கிர பாண்டியன் திருஅவதாரம் செய்தது, உக்கிரபாண்டியனுக்கு

மேல்வளை செண்டு கொடுத்தது, கடல் சுபேற வேல்விட்டது, இந்திரன் முடிமேல் வளை எறிந்தது, மேருவைச் செண்டால் அடித்தது, மறைபொருள் உணர்த்தியது, மாணிக்கம் விற்றது முதலிய படலக் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

மேலும், பத்தினிப் பெண்டிர் மயங்கியது, பிட்டுக்கு மண் சுமந்தது, பிரம்படி பட்டது, பாண்டியனின் சுரம் தணித்தது, சமணரைக் கழுவில் ஏற்றியது, வன்னிக் கிணற்றைச் சிவலிங்கமாய்க் காட்டியது ஆகிய படலக் காட்சிகளும் ஓவியமாகத் தீட்டப் பட்டுள்ளன.

ஒவ்வொரு ஓவியத்திலும் அவ் ஓவியத்தைப் பற்றிய விளக்கம் எழுப்பப்பட்டுள்ளது. அவ் ஓவியத்தை நன்கு புரிந்து கொள்ள இது உதவுகிறது.

"கட்டடக் கலை, சிற்பக் கலை மற்றும் ஓவியக் கலையில் உள்ள நகரத்தார் கலைப்பாணி பிற்கால நாயக்க மரபின் தொடர்ச்சி எனலாம். நகரத்தார் கால ஓவியப்பாணி மலர்வதற்கு இலுப்பைக்குடி ஓவியங்கள் ஒரு முன்னோடியாக அமைந்து விட்டன" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

**மார்கழி மாதம் ஆருத்ரா தரிசனத்தில் இலுப்பைக்குடிக் கோவிலில் தொன்றுதொட்டுக் கூறப்படும் கட்டியம்.**

உ
சிவமயம்

ஏகத்திருலோகய திருவாண தீரருள சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாதிருருப்வ அனுக்கிரக கருணாகர கங்கிலிய நாடாகிய பிரம்பு நாட்டில் தெட்சிண கைலாசபுர வாசனாகிய இலுப்பை நகர் ஸப்த புஷ்கரணி தீரே சவ்வ வில்வராண்ய க்ஷேத்திர வாசராகிய அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயக கோடி சூர்யப்பிரகாச காளகண்ட திரு நேத்ர கெங்காதர சந்திரசேகர மான் மழுதார்ய சதுர்புஜ சனாதன சர்வ ஜீவோதாய சௌந்தர நாயகி சமேதராய் எழுந்தருளி இருக்கும் சமயம் பிரகாச ஈசுவரர் சன்னதியில் ஆதி சண்டிகேஸ்வரராகிய லோகதாபரஞ் சூழ வையகத்தில் சண்டீஸ்வரர் கரம்சை கொண்டு பண்டை ஆரம் செய்தான். கெங்காதரன் சென்னியின் மேல் வைத்து ஆதி சண்டேசுவர நாயனார் திருவாய் மலர்ந்தருளிய படி நம் நாயகரான சுயம்பிரகாசேஸ்வரர் நாயனார்

*சன்னதியில் சாலிவாகன சகாப்தம் கலியுகத்தில் ரத்தாட்சி மார்கழி 21 ஸ்தரவாசம் மிருகசீஷ நட்சத்திரம் இதுபோல் தொடர்ந்து (ஒவ்வொரு ஆண்டும் வருசம் மாறும்) இப்படி ஒத்த சுபயோக சுபதினத்தில் வாதபுரீஸ்வரர் சாமிக்கு ரஷாபந்தனம் செய்து ஸ்ரீசபாநாயகர் சன்னதியில் திருவெம்பாவை ஓதி 22 பானு வாரம் திருவாதிரை நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் மகா அபிஷேகம் கொண்டருளி, வாதபுரீஸ்வரர் சாமிக்குப் பரிவட்டம் கட்டி நற்சாந்து சாத்தி திருவெம்பாவை ஓதி சதுர்வேத பாராயணம் செய்து, தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு, திருப்புராணம், திருக்கோவையார் அருளியபடி ஸ்ரீசபாநாயகரிடத்தில் ஸ்ரீவாதபுரீஸ்வரர் ஐக்கியமாகி ஸ்ரீசபாநாயகர் ஆருத்ரா தரிசனம் கொடுத்து வீதிக்கு எழுந்தருளி வருகையில் ஸ்ரீ கிருஷ்ண கங்கை யாத்திரைக்கு எழுந்தருளினார் என்று ஸ்ரீ கௌரி அதி கோபங்கொண்டு திருக்கோவில் புகுந்து திருக்காப்பு இட்டுக்கொண்டு இருக்கையில், நம்மள் திருநாவலூர் சுந்தரமூர்த்தி சுவாமியை வரவழைத்து ஊடல் தீர்க்கும்படியாய் பரிவட்டம் கட்டி, சுவாமி சன்னிதானத்திலும், பார்வதி சன்னிதானத்திலும் சாமகான வேதபாராயணமும் செய்து தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு, திருவிசைப்பா, பெரியபுராணம் அருளி, ஊடல் தீர்த்து, பார்வதிக்கு அதிக சந்தோஷமாகி, நம் பக்கத்துக்கு அருளிய சிவகங்கை முத்து விஜய கௌரி வல்லப .பெரிய உடையணத் தேவருக்கு அஷ்ட ஐஸ்வரியமும், மண்டலாதி பத்தியமும், போக போக்கியமும், புகலிடம் கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரமான நம் பக்தராகிய நகரத்தார்க்கு அஷ்ட ஐஸ்வரியமும், புத்திர பௌத்திர சகலசம்பத்தும், வெகு தனமும், உண்டாக வேணுமென்று திருவிளையாட்டம் விட்டது.*

*கீழ் அணை உஞ்சனை நாட்டில் உஞ்சனை மாகாணத்தில் தேவதாயம் இலுப்பைக்குடி தேவஸ்தானம் சர்வ மான்ய கிராமம் 1.*

*மேற்படி மாகாணத்தில், கள்ளிவயல் கிராமத்தில் சர்வமான்யநிலமும், அமராவதி நாட்டில் அமராவதி மாகாணத்தில் இடையூர் கிராமம் 1ம் நாட்டில் மாகாணத்தில் வெட்டியூர் கிராமம் 1ம் மாகாணத்தில் குடிக்கட்டான் ஏந்தல் கிராமம் 1ம், மாகாணத்தில் குறிஞ்சியேந்தல் கிராமம் 1ம், வடபோகி நாட்டில் ஜெயங்கொண்டான் மாகாணத்தில் கண்டிரான் வயல் கிராமம் 1ம், மாகாணத்தில் பாராவயல் கிராமம் 1ம், மாகாணத்தில் பெரிய நாயனார் வயல் கிராமம் 1ம், தஞ்சாவூர் ஜில்லா அறந்தாங்கி தாலுகா*

ஆளப்பிறந்தான் கிராமம் 1ம், இடையூர் விடுதி 1ம், இன்னும் நகைகள், ரொக்கம், கோவில்கள் எல்லாம் உனக்குத் தந்து அருளும்.

(நன்றி : இலுப்பைக்குடிக் கோவில்)

## திருப்பணிகள்

அந்தணர் இல்லங்கள், பசுமடம், விடுதி, நந்தவனம், ஊருணி முதலியன ரூ. 4,00,000/- (ரூபாய் நான்கு இலட்சம்) செலவில் திருப்பணி செய்யப் பெற்று சௌமிய ஆண்டு ஆவணி மாதம் 14ஆம் நாள் குடமுழுக்கு செய்யப்பெற்றது.

தேவகோட்டை பொதுவில் அம்மன் சன்னதி திருக்குளமும், பிள்ளையார்கோவிலும் ரூ. 20,000/- செலவில் கட்டினர்.

கீழப்பூங்குடி கூராண்டான் குடும்பத்தார் ரூ. 30,000/- செலவில் ஓர் ஊருணி வெட்டித் தெப்பத் திருவிழா நடத்தி வருகின்றனர்.

ரூ. 2,50,000/- செலவில் இக் கோவில் இராச கோபுரம் புதிதாக 1985இல் எழுப்பப்பட்டது.

இக் கோவிலில் ஆண்டுதோறும் சித்திரை மாதம் பிரம்மோற்சவம் நடைபெறுகிறது.

1842, 1882, 1901, 1959, 1985, 2001ஆம் ஆண்டுகளில் இக் கோவிலில் குடமுழுக்கு விழா நடைபெற்றது.

1833ஆம் ஆண்டு முதல் தேவகோட்டை அரு.லெ. குடும்பத்தார் தொடர்ந்து அறங்காவலர்களாக இருந்து வந்தனர். 1954ஆம் ஆண்டு சென்னை உயர்நீதிமன்றத் தீர்ப்புப்படி அரு.லெ.குடும்பத்தார் ஒருவர் பரம்பரை அறங்காவலராகவும், பிற ஊர் இலுப்பைக்குடி நகரத்தார் இருவர் அரசாங்க நியமன அறங்காவலர்களாகவும் இருந்து இக் கோவிலை நிர்வாகம் செய்து வருகின்றனர்.

(நன்றி : நகரத்தார் மரபும் பண்பாடும்)

வள்ளல் அழகப்பர் வேண்டுகோளுக்கு இணங்க, காரைக்குடியில் கல்லூரி நிறுவுவதற்கு இக் கோவில் நகரத்தார்கள் 450 ஏக்கர் நிலத்தைக் கொடுத்தனர்.

1955இல் ஏறத்தாழ இரண்டு லட்ச ரூபாய் மதிப்புள்ள ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக் கட்டிடத்தைக் கட்டிக் கொடுத்தனர்.

*திருச்சி சுவாமிகள் தமது பெங்களூர் மடத்துக்குக் கிளையாக காரைக்குடியில் ஓர் ஆசிரமம் அமைக்க 17 ஏக்கர் நிலம் அளித்துள்ளனர்.*

*கல்விப் பணிக்கு உறுதுணை செய்த அறநிலையாக இலுப்பைக்குடிக் கோவில் விளங்குகிறது.*

(நன்றி : நகரத்தார் கலைக்களஞ்சியம்)

*இக்கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள் கீழ்க்கண்ட 31 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர்.*

1. அரிமழம்
2. அலவாக்கோட்டை
3. இராங்கியம்
4. வி. இலட்சுமிபுரம்
5. ஒக்கூர்
6. கடியாபட்டி
7. கண்டரமாணிக்கம்
8. கண்டனூர்
9. காரைக்குடி
10. கீழப்பூங்குடி
11. குழிபிறை
12. கொத்தமங்கலம்
13. கோனாப்பட்டு
14. சிராவயல்
15. உ.சிறுவயல்
16. தேவகோட்டை
17. நடராசபுரம்
18. நற்சாந்துபட்டி
19. நாச்சியாபுரம்
20. நேமத்தான்பட்டி
21. பட்டமங்கலம்
22. பள்ளத்தூர்
23. பனங்குடி

24. பனையபட்டி
25. புதுப்பட்டி
26. புதுவயல்
27. பூலாங்குறிச்சி
28. மானகிரி
29. வலையபட்டி
30. விரையாச்சிலை
31. வேந்தன்பட்டி

நல்லார் இலுப்பைக் குடிநகரக் கோவிலார்கள்
செல்வமிகும் செம்மைவாழ் சிந்தையோங்கும் - நல்லுளத்தார்
தான்தோன்றீசர் சுந்தரநாயகியே நன்றறிவார்
நான்கண்ட வெண்பா நயம்.

(நல்லறக் கவிராயர் சுப.நா. நாகப்பன்)





# பிள்ளையார்பட்டிக் கோவில்

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் பிள்ளையார்பட்டிக் கோவிலும் ஒன்று.

வயிரவ கோலத்தோடு அசுரரை அழிக்கச் சென்ற சிவபெருமானுடன் சென்ற விநாயகப்பெருமான் வச்சிரதமிஷ்டன் என்ற அசுரனால் எறியப்பட்ட மலையையே இருப்பிடமாகக் கொண்டு அமர்ந்தார் எனத் தலபுராணம் கூறுகிறது.

குன்றில் குடையப்பெற்ற குடைவரை கோவிலில் அமர்ந்து அருள் செய்யும் கற்பகப் பிள்ளையார் வழிபாடு இங்கு சிறப்பாய் உள்ளதால், இவ் ஊர் பிள்ளையார்பட்டி எனப் பெயர் பெற்றது.

இவ் ஊருக்கு எக்காட்டூர், எருக்காட்டூர், மருதங்குடி, திருவீங்கைக்குடி, இராச நாராயணபுரம் என வேறு பெயர்களும் உண்டு.

பிற்காலப் பாடல்களில் கணேசபுரம், கணேசபுரி, கணேச மாநகர், பிள்ளை நகர், தேன்மருதூர், மருதங்கூர் என்ற பெயர்கள் காணப்படுகின்றன.

ஆனால், அற்புதக்கீர்த்தியும், ஆனந்த வாழ்வும், நற்பொருள் குவிதலும், நலமெலாம் நிறைதலும் கற்பக மூர்த்தியின் அருளே என்றும், இது பொய்யில்லை, கண்ட உண்மை எனக் கவியரசர் கண்ணதாசன் உறுதிபடக் கூறுகின்றவாறு இவ் ஊர் பிள்ளையார்பட்டி என்றே உலகம் முழுவதும் அறியப்பட்டுள்ளது.

அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்

நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்
பொய்யில்லை கண்ட உண்மை!

- கவியரசர் கண்ணதாசன்

*கவியரசரின் இப் பாடல் பிள்ளையாரின் பெருமையை நன்கு விளக்குகிறது. இவ் ஊருக்குப் பிள்ளையாரால் பெருமை. எனவே இது காரணப் பெயராகும்.*

*பிள்ளையார்பட்டிப் படம் உலகில் உள்ள இந்துக்களின் இல்லங்கள் தோறும் காணப்படுகிறது.*

*கற்பகப்பிள்ளையார் இரண்டு கரங்களுடன் உள்ளார். இது அரிய சிற்பமும், சிறப்புமாகும்.*

*இதே போன்ற சிற்பம் குன்றக்குடிக் கீழ்க்கோவிலில் உள்ளது. ஆப்கானிஸ்தானத்தில் உள்ளதாகக் கூறுகிறார்கள். உலகில் வேறு எங்கும் கிடையாது.*

*1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மைச் சிறப்புடைய ஊர் பிள்ளையார்பட்டி. இங்கு கிடைத்துள்ள முதுமக்கள் தாழிகளும், பானை ஓடுகளும் இதனை உறுதி செய்கின்றன.*

*'இவ் ஊரைச் சார்ந்த குன்னாமலையில் காணப்படும் சமணர்கள் வாழ்ந்த உறைவிடங்கள்' இதனை உறுதி செய்வதாகத் திரு. மா. சந்திரமூர்த்தி கூறுகிறார்.*

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

*விநாயகச் சிற்பமும், குடைவரையும் உருவான சரியான காலத்தை அறிந்து கொள்ள கோவிலின் உட்புறம் பொறிக்கப் பட்டுள்ள பழமையான கல்வெட்டே மூலச்சான்றாக அமைகிறது. எக்காட்டூர் எனும் ஊரைச் சார்ந்த தலைமைச் சிற்பியால் இக் குடைவரையும், சிற்பமும் செதுக்கப்பட்டது என்பது கல்வெட்டு கூறும் செய்தியாகும்.*

(நன்றி : நகரத்தார் மரபும் பண்பாடும்)

*"பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோவிலில் உள்ள கல்வெட்டு எழுத்துக்களை கி.பி. 5ஆம் நூற்றாண்டை ஒட்டிய எழுத்துக்களாகக் கல்வெட்டு அறிஞர்கள் கருதுவதாலும் இவ் ஊரின் தொன்மைச் சிறப்பை நன்கறிய முடிகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

*இளையாத்தங்குடியைச் சார்ந்த திருவேட்பூருடையார் என்ற சகோதரர்களில் இளைய வழியினர் பிள்ளையார்பட்டிக் கோவிலைத் தங்களுக்குரிய தனிக் கோவிலாகக் கொண்டு வாழலாயினர். எனவே, ஆரம்பத்தில் ஏழு நகரக் கோவிலாய் இருந்தது எட்டாயிற்று.*

*புகழ் வாய்ந்த பிள்ளையார்பட்டிக் கோவில் ஒரு குன்றைக் குடைந்து அமைக்கப்பட்ட குடைவரைக் கோவிலாகும்.*

*தமிழகக் கோவில் கலை வரலாற்றில் இக் கோவில் இன்றியமையாத கோவிலாகும். இக் கோவில் அமைப்பிலும், அழகிலும் தனித்தன்மையுடன் விளங்குகிறது.*

*இங்கு பிள்ளையார் வடக்கு முகமாக உள்ளார்.*

*இக் குடைவரை கோவில் மூன்று பகுதிகளாக உள்ளது. தென் பகுதியில் குடையப்பட்ட ஒரு கருவறை உள்ளது. இக் கருவறையின் உட்பகுதி தூங்கானை மாட அமைப்பில் குடையப் பெற்றுள்ளது. இதனைக் 'கஜவிருஷ்ட கர்ப்பக் கிரகம்' என்பர்.*

*நடுப்பகுதி பாறையில் செதுக்கப் பெற்ற சதுர பீடத்தில் சிவலிங்கம் உள்ளது.*

*கீழ்ப்பகுதியில் இலிங்க வடிவில் திருவீசர் உள்ளார்.*

*இவ்வாறு கற்பகப் பிள்ளையாரும், திருவீசரும் எழுந்தருளியிருந்த குடைவரைக் கோவிலோடு இணைந்த கோவிலாக மருதீசர் கோவிலைக் கற்றளியாக நகரத்தார்கள் எழுப்பினர்.*

*எனவே இங்கு மூலவர்கள் மூவர்.*

*திருவீசர் - சிவகாமி*

*மருதீசர் - வாடாமலர் மங்கை*

*கற்பகப் பிள்ளையார்*

*ஆனால் இங்கு பிள்ளையாரே பிரதான தெய்வமாகக் கொண்டாடப்படுகிறார்.*

இலுப்பைக்குடிக்கோவிலில் பைரவர் பிரதான வழிபாட்டில் உள்ளதைப்போல, இங்கு பிள்ளையாரே பிரதான வழிபாட்டில் உள்ளார்.

இப் பிள்ளையார் இரண்டு கரங்களுடன் உள்ளார். வலக்கையில் சிறிய இலிங்கம் உள்ளது. இடக்கை தொந்தியைச் சுற்றியுள்ள கச்சை மீதுள்ளது. இப் பிள்ளையாரின் தும்பிக்கை வலம்புரியாக உள்ளது. தந்தம் அழகாக உள்ளது. மகுடம் தலையை அலங்கரிக்கிறது. மார்பில் முப்புரி நூல் இல்லை. வயிற்றில் முப்பட்டையால் ஆன உதர பந்தம் உள்ளது. காதுகள் பக்கங்களில் விரிந்து காணப்படுகிறது.

முற்காலப் பாண்டியர்களின் சிற்பப் படைப்புக்களில் எளிமைக்கும், எழிலுக்கும் சிகரமாக விளங்குவது இப் பிள்ளையார் சிற்பமேயாகும்.

தமிழகத்தில் பல்லவர் ஆட்சிக் காலத்தில்தான் குடைவரைக் கோவில்கள் எழுப்பப்பட்டதாக வரலாறு கூறுகிறது. ஆனால் இச் சிற்பம் பாண்டியர் காலத்தைச் சார்ந்தது. எனவே இது காலத்தால் முந்தியது.

பல்லவர்களுக்கு முன்பே பாண்டியர்கள் குடைவரைக் கோவிலை அமைத்தனர் என்பதற்கு இச் சிற்பமே சான்றாக விளங்குகிறது.

சிறுத்தொண்டர் வாதாபியிலிருந்து விநாயகரைக் கொண்டு வந்த பிறகுதான் தமிழகத்தில் விநாயகர் வழிபாடு தோன்றியதாகக் கூறுவர். ஆனால், பிள்ளையார்பட்டிக் கோவில் உட்பகுதியில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டிலிருந்து வாதாபி விநாயகர் தமிழகம் வருமுன்பே செட்டி நாட்டில் பிள்ளையாரை வழிபட்டு வந்தனர் எனத் தெரிகிறது.

கற்பகப் பிள்ளையாரின் மற்றொரு பெயர் தேசி விநாயகப் பிள்ளையார் என்பதாகும். இப் பெயரை கோனாடு வழங்கி அருளிய ஸ்ரீ சுந்தர பாண்டியன் மற்றும் எம் மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ குலசேகரப் பாண்டியன் கல்வெட்டுக்கள் உறுதி செய்கின்றன.

கற்பகப் பிள்ளையாரின் தென் சுவரில் ஓர் அழகிய உருவம் உள்ளது. இதன் இரு புறத்திலும் இரு உருவங்கள் கைகட்டி நிற்கின்றன. இது 'ஹரிஹரன்' சிலை என்கின்றனர். இச் சிற்பத்தின் தலையில் மணிமகுடமும், சடை முடியும் உள்ளன. இரண்டு கரங்கள் உள்ளன. வலக்கை மீது முப்புரி நூல் பட்டையாகக் காணப்படுகிறது.

வலக்கை வரத முத்திரையைக் காட்ட, இடக்கை இடுப்பில் உள்ளது.

சிவனது பக்கத்தில் சண்டிகேசுவரரும், திருமாலின் பக்கத்தில் கருடனும் காணப்படுவதால் இச்சிற்பத்தை ஹரி அரன் என்கின்றனர்.

இது சைவ-வைணவ ஒற்றுமையைக் காட்டும் வடிவமாகும்.

கருவறையை ஒட்டி இலிங்கோத்பவர் இரு கரங்களுடன் உள்ளார்.

"தமிழ்நாட்டின் இலிங்கோத்பவர் சிற்ப வடிவத்தின் வளர்ச்சியை அறிந்து கொள்ள பிள்ளையார்பட்டி சிற்பமே முன்னோடியாக உள்ளது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

இடுப்புக்குக் கீழே உருவம் ஏதுமில்லை. இடுப்புக்கு மேலே இரண்டு கைகளையுடைய சிவனின் தோற்றம் உள்ளது.

"பொதுவாகச் சிவன் கோயில் கருவறைக் கோட்டத்தின் மேல்திசை மாடத்தில் இச் சிற்பம் காணப்படும். இதனின்றும் மாறுபட்டுக் கருவறையை ஒட்டி உட்புறத்தில் இவ் உருவம் காணப்படுவது குறிப்பிடத்தக்கது" என்றும் திரு.மா. சந்திரமூர்த்தி கூறுகிறார்.

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

## மருதீசர் கோவில்

கருவறை மண்டபம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், நடராசர் சபை, முக மண்டபம், அம்மன் சன்னதி, மேல்சுற்றுப் பந்தி, நந்தி பீடம், பலி பீடம், கொடி மரம், திருமறை மண்டபம், திருமுறை மண்டபம், உற்சவ மண்டபம், திருச்சுற்று மாளிகை, வியஞ்சன அறை, மடைப்பள்ளி, நாகர்சுனை, மலர்பாணி மாடம், இராசகோபுரம், திருக்குளம் ஆகிய பகுதிகளைக் கொண்டு இக் கோவில் அமைக்கப்பட்டுள்ளது.

விநாயகர், மகாலெட்சுமி, சுப்பிரமணியர், சண்டேசுவரர், பைரவர், சூரியன், சந்திரன் ஆகிய பரிவாரத் தெய்வங்களுக்குச் சிறிய ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

திருச்சுற்று மாளிகையில் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய சமயக் குரவர்கள் நால்வரும் சிற்ப வடிவங்களில் உள்ளனர்.

மேற்றிசையில் அகோர மூர்த்தியின் சிற்பம் உள்ளது.

வடதிசையில் சப்த மாதர்களாகிய பிராமி, மாகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, மாகேந்திரி, சாமுண்டி ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன.

திருச்சுற்று மாளிகையின் மேற்கில் சோமாஸ்கந்தர், தனியம்மன், பிரகார விநாயகர், செஞ்சடேசுவரர், சௌந்தர நாயகி, ஆறுமுகன், வள்ளி-தெய்வானை, ஐந்து தலை நாகர், இலிங்கத்திற்குப் பால் சொரியும் பசு, தண்டாயுதபாணி, துர்க்கை, இலக்குமி, சரசுவதி ஆகிய தெய்வங்கள் உள்ளன.

திருச்சுற்று மாளிகையின் வடக்கில் வாகன அறைகள் உள்ளன. தென்திசையில் காத்யாயினி உள்ளாள். பைரவர் சன்னதியை அடுத்து நவக்கிரகங்கள், பள்ளியறை, சிவகாமி அம்மன் சன்னதி உள்ளது.

ஏழு நிலைகளை உடைய இராச கோபுரம் கிழக்கே உள்ளது. மூன்று நிலைகளை உடைய சிறிய கோபுரம் வடக்கே உள்ளது. அதன் எதிரே திருக்குளம் உள்ளது.

கருவறையின் அதிட்டான உறுப்புகள் மிகுந்த வேலைப்பாட்டுடன் காணப்படுகின்றன். இவை நகரத்தார் காலக் கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

இக் கோவில் வெள்ளைக் கல்லால் கட்டப் பெற்றுள்ளது. இரு தளங்களுடைய விமானம் உள்ளது. ஆறு பெரும் பகுதிகளைக் கொண்டு விமானம் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது.

கபோதங்களில் இடை இடையே நாசிக் கூடுகளும், மூலைகளில் இலைக் கருகுகளுடன் கூடிய கொடுங்கைகளும் அமைந்துள்ளன.

இவ் அமைப்பைப் பிற்காலப் பாண்டியர்கள் ஏற்படுத்தினர். நாயக்க மன்னர்கள் அதனைத் தொடர்ந்தனர். நகரத்தார்கள் தொடர்ந்து பின்பற்றினர்.

அபிஷேக நீர் வெளியேற 'கோமுகி' என்னும் நீர்த்தாரை அமைக்கப்பட்டுள்ளது.

*"இவ் அமைப்பு நகரத்தாரின் திட்டமிட்ட கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இவ் அமைப்பை இங்குள்ள அம்மன் கோவில் மற்றும் சிற்றாலயங்களிலும் காணலாம்" எனக் குறிப்பிடுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

*பிரஸ்தரம் என்னும் கூரைப்பகுதி உத்திரம், கம்பு, எழுதகம், கபோதகம், விமானம் என்ற உறுப்புகளைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. நாசிக் கூடுகளில் தெய்வ உருவங்கள் இல்லை. பல வகையான விமானச் சிகரங்கள் உள்ளன.*

*ஆறு சிம்மத் தூண்கள் தட்சிணாமூர்த்தி மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. மேடை மீது இரு தூண்கள் அலங்கரிக்க வேலைப்பாடு நிறைந்த வெள்ளைக் கல் மண்டபம் உள்ளது. இக் கல் மண்டபத்தைச் சிம்மங்கள் தாங்கி நிற்கின்றன.*

*இத் தூண்களின் கால் பகுதியில் ஏட்டுச் சுவடியும், அக்க மாலையும் கைகளில் ஏந்திய சனகாதி முனிவர்கள் மூவரும், வீணையை மீட்டும் முனிவரும், நந்தி தேவரும், சிவனை வழிபடும் மூன்று பெண்களும் காணப்படுகின்றனர்.*

*எல்லா நகரக் கோவில்களிலும் காணப்படுவதைப் போல மர வேலைப்பாட்டை ஒத்த கல் வேலைப்பாடு இங்கும் காணப்படுகிறது.*

*"பிள்ளையார்பட்டி தட்சிணாமூர்த்தி கல் மண்டபக் கூரை அழகிலும், அமைப்பிலும் இலுப்பைக்குடி, மாத்தூர், இரணியூர், நேமம் போன்ற ஏனைய நகரக் கோயில்களின் கட்டடக் கலையுடன் ஒத்து விளங்குகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

*கருவறையின் முன்புறம் அர்த்த மண்டபம் உள்ளது. நிலைக் கால்களின் பக்கங்களை விரிந்த தாமரை இதழ்கள் அலங்கரிக்கின்றன. நிலை வாயிலின் முகப்பில் கஜலெட்சுமி அருள் செய்யும் சிற்பம் உள்ளது.*

*இம் மண்டபப் புறச்சுவரின் வடக்கே விநாயகரும், தெற்கே துர்க்கையும் உள்ளனர். இத் தெய்வங்களை அமைக்க வேதிகைப் படையை வெட்டிக் கபோதக வரியில் இணைத்துள்ளனர்.*

இம் முறையை இக் கோவிலின் தேவகோட்ட அமைப்பிலும் அமைத்துள்ளனர்.

"இவ் அமைப்பு நகரக் கோவிலான நேமம் கோவிலுடன் ஒப்பிடத்தக்கது. நகரத்தார் காலத்திய கட்டடக் கலைப் பாணியில் இதனை ஒரு புது அம்சமாகக் கருத வேண்டும். இது நகரத்தார் கட்டடக் கலையின் வளர்ச்சி நிலையை அடையாளம் காணத் துணை செய்கிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

அர்த்த மண்டபத்தின் முன்பு மகா மண்டபம் உள்ளது. நான்கு அணியாடித் தூண்கள் இம் மண்டபத்தை அலங்கரிக்கின்றன. மண்டபத்தின் வடதிசையில் நடராசர் சபை உள்ளது. அதன் முகப்பு வாயிலில் கஜலெட்சுமி சிற்பம் உள்ளது. மேசை மீது கூத்தபிரான் (சிவன்), சிவகாமி அம்மன், மாணிக்கவாசகர் உற்சவ விக்கிரகங்கள் உள்ளன.

மகா மண்டப வாயிலின் இரு பக்கங்களிலும் நர்த்தன கணபதியும், வில்லேந்திய வேலவரும் உள்ளனர். இத் தெய்வ உருவங்களுக்குக் கீழே எலும்பும் தோலுமாய் மூன்று கால்களோடு தள்ளாடிய நிலையில் வணங்கி நிற்கும் பிருங்கி முனிவர் உருவம் உள்ளது. அதன் எதிரே அர்த்தநாரீஸ்வர வடிவில் சிவன் அருள் பாலிக்கிறார்.

வாயிலின் வட திசையில் அங்குசம், பாசம், மழு, மலர், தந்தம், மோதகம் என ஆறு ஆயுதங்களை ஏந்திய இடம்புரி விநாயகர் உள்ளார்.

தென்திசையில் வஜ்ஜிரப் படையும், சக்திப் படையும் ஏந்தி வள்ளி-தெய்வானை உடனாய மயில் வாகனன் (சுப்பிரமணியர்) உள்ளார்.

கம்பீரமான துவாரக பாலர்கள் இருவர் வாயிலின் இரு புறமும் உள்ளனர்.

மேல் பிரகாரத்தின் வடதிசையில் சண்டிகேசுவரருக்குத் தனி சன்னதி உள்ளது.

"இச்சன்னதியிலிருந்து வெளியேறும் அபிஷேக நீரை வெளியேற்றுவதற்கு அமைக்கப்பட்ட சாளரங்கள் கட்டடக்

கலையின் சிறப்பு அம்சமாக விளங்குகிறது. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நடந்த முதல் திருப்பணியின்போது இச் சன்னதி அமைக்கப்பட்டது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

திருச்சுற்று மாளிகையின் பிரகாரத்தில் திருமறை மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தில் வேத பாராயணம் நடைபெறும். எனவே இம் மண்டபம் வேத பாராயண மண்டபம் எனவும் அழைக்கப்படுகிறது.

"இம் மண்டபத்தை அலங்கரிக்கும் கர்ணக்கால் தூண்கள் உருவில் பெரியவை. ஏனைய தூண்களை விட நுணுக்கமான வேலைப்பாடுகள் மிக்கவை. கட்டடக் கலையின் மாட்சியை விளக்குபவை. சிற்பக் கலையின் செறிவை உணர்த்துபவை. நகரத்தாரின் கட்டடக் கலையின் சிகரமாகத் திகழ்பவை" எனப் புகழ்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

திருமறை மண்டபம், திருமுறை மண்டபம், அலங்கார மண்டபம் முதலியவற்றில் முகப்புச் சிற்பங்களும், அர்த்த சித்திரங்களும் பல்வேறு தெய்வ உருவங்களை வெளிப்படுத்தும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன.

"இவை உருவில் சிறியவை. சீரிய கலைத்திறன் மிக்கவை. நகரத்தார் கலையை வெளிப்படுத்தும் சிறிய சிற்பங்களுக்குச் சான்றாகத் திகழ்பவை" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

கோபுரம் - கோ என்றால் இறைவன், அரசன் எனப்பொருள். உயிர்களை ஆள்பவன் இறைவன். குடிமக்களை ஆள்பவன் அரசன். எனவே ஆளுதல் என்பது பொதுப் பொருள்.

புரம் என்றால் கோட்டை, மதில் எனப் பொருள்.

கோவில் என்றவுடன் நம் நினைவுக்கு வருவது கோபுரம்தான். வெகு தொலைவில் இருந்து கோபுரத்தைக் கண்டு வணங்குவதற்கு ஏதுவாக உயரமாக எழுப்பினர். கோவிலின் நுழைவாயிலில் எழுப்பப்பட்ட கோபுரம் இராச கோபுரம் எனப்பட்டது. இது தூல லிங்கம் என்றும் அழைக்கப்படும்.

இக் கோவிலின் கிழக்கு வாசலில் இராச கோபுரம் எழுப்பப்பட்டுள்ளது. ஏழு நிலைகளுடனும், மேலே போகப் போகக் குறுகியும், நீண்ட சதுர வடிவாயும் எழுப்பப்பட்டுள்ளது. வெள்ளைக் கல்லும், செங்கல்லும் கொண்டு கட்டப்பட்டுள்ளது. தெய்வங்கள், திசைக் காவலர்கள், கின்னரர்கள் முதலியோர் சுதையால் செய்யப்பட்டுள்ளன.

கற்பக விநாயகரின் கோபுரம் வடதிசையில் உள்ளது. மூன்று நிலைகள் உள்ளன. தண்டாயுதபாணி, பத்துக் கரங்களையுடைய வடுக பைரவர், ஐந்து தலைகளும், பத்துக் கரங்களும் உடைய பஞ்சமுக விநாயகர் ஆகிய சுதைச் சிற்பங்கள் உள்ளன. இராவணன் பத்துத் தலைகளுடனும், இருபது கரங்களுடனும் கயிலை மலையைத் தலையில் தாங்கி வீணையை மீட்டும் காட்சி அற்புதமாக வடிக்கப்பட்டுள்ளது. இக் கோபுரமும் வெள்ளைக் கல்லும், செங்கல்லும் கொண்டு எழுப்பப்பட்டுள்ளது.

"இக் கோபுரம் இராச கோபுரத்தை விடக் காலத்தால் முற்பட்டது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

## வாடாமலர் மங்கை

வாடாமலர் மங்கை கோவில் தென் திசையில் அமைந்துள்ளது. கருவறை, அர்த்த மண்டபம், முக மண்டபம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது.

கருவறையின் நடுவே அம்மனின் திருஉருவம் பத்ம பீடத்தின்மீது இரண்டு கைகளுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகிறது. வலது கையில் நீலோற்பவ மலர் உள்ளது. இடது கை லோப முத்திரை காட்டுகிறது. தலையில் சடா மகுடம், காதுகளில் மகர குண்டலங்கள், கழுத்தில் மங்கல அணி மற்றும் முத்தாரம், சரப்பளி, கச்சையில்லா மார்பு, கைகளில் வளையல்கள், இடையில் ஆடை, கால்களில் காப்பு மற்றும் தண்டை ஆகியவற்றோடு அம்மன் காட்சி தருகிறாள். அருள் பாலிக்கும் முகமும், இளம் புன்னகையும் பக்தர்களை ஈர்க்கின்றன.

"நகரத்தாரின் முதல் திருப்பணியின்போது இச் சன்னதி அமைக்கப்பட்டு அம்மன் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. காலம் கி.பி. 19ஆம் நூற்றாண்டின் பின் பகுதியாகும்" எனக் குறிப்பிடுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

அம்மன் கருவறையின் மேல் ஏகதளம் உள்ளது. விமானத்தில் சுதைச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. நான்கு திசைகளிலும் அம்மனின் அமர்ந்த கோலச் சிற்பங்கள் உள்ளன.

## சிற்பங்கள்

### தேவகோட்டச் சிற்பங்கள்

கருவறைப்புறச் சுவரில் உள்ள தேவகோட்ட மாடங்களின் தெற்கே தட்சிணாமூர்த்தி உள்ளார். சனகாதி முனிவர்களுக்குத் தத்துவம் சொல்லும் வியாக்யான தட்சிணாமூர்த்தியின் உருவம் சிற்பமாக இங்குள்ளது. அவரின் மேல் வலக்கையில் அரவமும், இடக்கையில் அனலும் (நெருப்பு) உள்ளது. கீழ் வலக்கை அக்க மாலையை ஏந்தி சின்முத்திரை காட்டுகிறது. இடக்கையில் ஏடு உள்ளது. இவரது திருவடிக்கீழ் அபஸ்மாரன் உள்ளான்.

மேற்குத் திசையில் அடிமுடி காணா அண்ணல் உள்ளார். அனல் பிழம்பாகத் தோன்றும் இலிங்கத்தின் நடுவே சிவன் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். மேல் இரு கரங்களில் மானும், மழுவும் உள்ளது. கீழ் வலக்கரம் அபய முத்திரை காட்டுகிறது. இலிங்கத்தின் முன்னே அன்னமும், கீழே வராகமும் உள்ளன.

வடக்குத் திசையில் நின்ற கோலத்தில் நான்முகன் உள்ளார். மேல்வலக்கையில் அக்க மாலையும், இடக் கையில் கெண்டியும் உள்ளது. கீழ் வலக்கை அபய முத்திரையைக் காட்ட, இடக்கை வரத முத்திரையைக் காட்டுகிறது.

"பொதுவாகப் பாண்டியர், விஜயநகரர் மற்றும் நாயக்கர் கால நான்முகனின் சிற்பங்கள் மூன்று தலைகளுடன் மட்டும் அமைந்திருக்க, பிள்ளையார்ப்பட்டி நான்முகன் நான்கு தலைகளுடன் காட்டப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது. இவ் உருவம் மாத்தூர் கோவில் நான்முகனுடன் ஒப்பிடத்தக்கது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

### அர்த்த மண்டபச் சிற்பங்கள்

அர்த்த மண்டபத்தில் சதுரமான இருக்கையில் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் விநாயகர் காட்சி தருகிறார். மேல்

வலக்கையில் அங்குசம், இடக்கையில் பாசம், கீழ் வலக்கையில் தந்தம், இடக்கையில் மோதகம் உள்ளது. இடப்புரி தும்பிக்கை, ஒடுங்கிய வேழமுகம், விரிந்த காதுகள், சரிந்து பெருத்த வயிறு முதலியவற்றுடன் இச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது.

"இவ் உருவத்தின் நிற்கும் நிலை, அங்கங்களின் அமைப்பு, ஆடை அணிகளின் தன்மை யாவும் கொண்டு இச் சிற்பம் நகரத்தார் காலக் கலையாகக் கருதப்படுகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் காட்சி தரும் விஷ்ணு துர்க்கையின் மேல் இரு கைகளில் ஆழியும், சங்கும் உள்ளன. கீழ் வலக் கை அபயமளிக்க, இடக் கை ஊரு முத்திரை காட்ட அமைக்கப்பட்டுள்ளது.

சதுரமான பரந்த முகம், விரிந்த நெற்றி, கோடிட்ட புருவம், மலர்ந்த கண்கள், அருள் சுரக்கும் பார்வை, எடுப்பான மூக்கு, பிரிந்த இதழ் இவற்றோடு அழகாகத் தோற்றமளிக்கிறாள்.

"கரிய நிறக் கல்லில் செதுக்கப்பட்டுள்ள துர்க்கையின் உருவ அமைப்பு, முகப்பொலிவு, ஆடை அணிகளின் தன்மை, ஆயுதங்களின் அமைப்பு யாவும் கொண்டு இதனை நகரத்தார் காலக் கலையாகக் கருதலாம். துர்க்கையின் இடையில் சிம்ம முகப்புடைய கச்சையும், இடையிலிருந்து முழங்காலுக்குக் கீழ்வரை மடிப்புடைய ஆடையும், இடையில் பக்கங்களிலிருந்து பீடம்வரை சரிந்து நிற்கும் ஆடைக்கட்டும் நகரத்தார் காலக் கலையினை அடையாளங் காணச் செய்கிறது. துர்க்கையின் மேல் வலக்கரத்தில் உள்ள சக்கரத்தில் குறுக்காக இடைக்கட்டு காணலாம். இது நகரத்தார் கால வழக்கினைக் காட்டுகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

வடக்குச் சுற்றுப் பிரகாரத்தில் தென்திசை நோக்கிச் சண்டிகேசுவரர் உள்ளார். இரண்டு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் உள்ள இவரின் வலது கையில் நீண்ட மழு உள்ளது. இடது கை சிம்ம கரண முத்திரையைக் காட்டுகிறது. அமைதி தவழும் பொலிவான முகமும், பல்வேறு அணிகலன்களும் இச் சிற்பத்திற்கு அழகூட்டுகின்றன. இவர் சிறிய தனிக்கோவிலில் உள்ளார்.

சிவபூசை வழிபாட்டின் முடிவில் இவரை வணங்கினால்தான் சிவபூசை முற்றுப் பெற்றதாகக் கூறுவர். சிவபூசையின் பலனைச் சண்டிகேசுவரரை வணங்குவதன் மூலம் பெறலாம் என்பது சிவ பக்தர்களின் நம்பிக்கை.

"இச் சிற்பம் காலத்தால் பழமை வாய்ந்தது. இதன் உருவ அமைப்பும், ஆடையும், அணிகளும், ஆயுதங்களும், இவற்றின் தன்மை கொண்டு இதனைக் கடைப் பாண்டியர் காலச் சிற்பமாகக் கருதலாம். பண்டைய பாண்டியரது கோவிலில் எஞ்சி நின்ற சிற்பங்களில் ஒன்றாக இதனையும் கருதலாம். பழமை வாய்ந்த இவ் உருவத்திற்கு நகரத்தார்கள் கோவில் எடுத்துத் திருப்பணி செய்துள்ளனர்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

## மகா மண்டபச் சிற்பங்கள்

இலிங்கிலிருந்து வெளிப்படும் சிவன், நான்கு கரங்களுடன் தோன்றி மார்க்கண்டேயனின் உயிரைக் காக்க, எமனைக் காலால் உதைத்துச் சம்ஹாரம் செய்யும் கால சம்ஹாரமூர்த்தி மகா மண்டபத்தின் தென்புறச் சுவரில் காட்சி தருகிறார். சிவனின் வலப்புறம் இலிங்கத்திற்கு மலர் தூவி சிவனைப் பூசிக்கும் மார்க்கண்டேயனின் இளமையான உருவம் காணப்படுகிறது. சிவனின் இடப்புறம் நீண்ட பாசக் கயிற்றை இலிங்கத்தில் வீசியபடி மண்டியிட்ட நிலையில் எமனின் உருவம் காணப்படுகிறது.

"நகரக் கோவில்களில் ஒன்றான நேமங்கோவிலில் காலசம்ஹார மூர்த்தியின் சிற்பக் காவியத்தைப் பெரிய அளவில் தோற்றுவித்த செட்டி நாட்டுச் சிற்பிகள், இங்கு சிறிய அளவில் அழகும், அளவும் குன்றாமல் சிற்பக் காப்பியமாகத் தோற்றுவித்துள்ள பாங்கு நேரில் கண்டு பாராட்டத்தக்கது" எனப் பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

சிவனும், உமையும் காளை வாகனத்தின் மீது அமர்ந்து விடைப்பாகராகத் தோன்றி இடபாரூட மூர்த்தியாகக் காட்சி தரும் நிலையில் இச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. பல்வேறு அணிகலன்களைச் சிவனும் உமையும் அணிந்துள்ளனர். சிவனின் வலப்புறம் சிவனடியார் ஒருவர் வணங்கி நிற்கிறார். ரிஷப வாகனத்தில் தம் தேவியுடன் சிவனடியார்க்குக் காட்சி தருகிறார்.

*மகா மண்டபத்தின் இரு வாயில்களிலும் இரு துவார பாலகர்கள் உள்ளனர். வலுவான உடற்கட்டுடன், நாகம் சுற்றிய நீண்ட கதாயுதமும், நான்கு கரங்களும் கொண்டு வாயிலைக் காத்து நிற்கிறார்கள். கறுப்புக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளார்கள்.*

*"நகரத்தார்களின் பெரிய சிற்பத் திருப்பணிகளுக்கு எடுத்துக்காட்டாக இவ் இரு துவார பாலகர்களின் உருவங்கள் திகழ்கின்றன. எழுவன் கோட்டைச் சிற்பிகளின் சிற்றுளியின் ஆற்றலை இம் மாபெரும் உருவங்களில் காண முடிகிறது" என வியந்து கூறுகிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.*

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

## முக மண்டபச் சிற்பங்கள்

*சிவனும், திருமாலும் சரி பாதியாக இணைந்து நிற்கும் திருக்கோலம் ஹரிஹரனாகும். இச்சிற்பம் அணியொட்டித் தூணின் முன்புறம் வடதிசையில் உள்ளது.*

தாழ்சடையும் நீள்முடியும் ஒன்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால் சூழும்
திரண்டு அருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து

- பேயாழ்வார்

*மூன்றாம் திருவந்தாதியில் பேயாழ்வார் பாடிய இப் பாடலுக்குக் கல்லிலே வடிவம் கண்டுள்ளனர்.*

*அம்மன் சன்னதியின் எதிரே உள்ள தூணின் முன்புறம் வடக்கில் நான்கு கரங்களுடன் சிவன் உள்ளார். அவரின் கீழ் இடக்கையில் கரிக்குருவி உள்ளது. இது மிகக் கவனமாகப் படைக்கப்பட்டுள்ளது. குருவியின் கூர்மையான அலகு, சிறிய கண்கள், நீண்ட கழுத்து, மென்மையான சிறகு, நீண்ட வால் முதலியன தத்ரூபமாக வடிக்கப்பட்டுள்ளது. சிவனின் உபதேசத்தை மிகக் கவனமாகக் கரிக்குருவி கேட்பதைப் போல இச் சிற்பத்தைச் சிற்பி வடித்துள்ளார். இச் சிற்பம் சிற்பியின் ஆற்றலைப் பறை சாற்றுகிறது.*

*இவை தவிர சிறிய சிற்பங்கள் 16 உள்ளன. அவை : பிட்சாடனர், பெண், முனிவர், சந்திரசேகரமூர்த்தி, பிருங்கி முனிவர், அன்னை, முனிவர், நாரதர், ஆளுடைய பிள்ளை, இடப்புரி விநாயகர், அனுமன், பைரவர், யசோதை, தும்புரு, கோதண்டராமர், சீதாப்பிராட்டி.*

மேற்சுற்றுப் பிரகாரத்திலும் தூண் சிற்பங்கள் பல உள்ளன.

சிவபெருமானின் 25 மூர்த்தங்களில் பைரவமூர்த்தி, சந்திரசேகரமூர்த்தி, உமாமகேஸ்வரமூர்த்தி, இடபாரூடமூர்த்தி, பிட்சாடனமூர்த்தி, காலசம்ஹாரமூர்த்தி, சங்கரநாராயணமூர்த்தி, ஸ்ரீஅரிபோத்தமூர்த்தி, கங்காலமூர்த்தி, சுஹாசனமூர்த்தி, தட்சிணா மூர்த்தி, இலிங்கோற்பவமூர்த்தி ஆகிய மூர்த்தங்கள் தூண்களில் காணப்படுகின்றன.

வேணுகோபாலன், நர்த்தனக் கண்ணன், காளிங்க நர்த்தனன், திருமால், இராமபிரான், இலக்குவன், சீதாப்பிராட்டி, அனுமன், கஜேந்திர மோட்சம், யசோதை, கிருஷ்ணன், இரணியன், இரணியசம்ஹாரம், இலட்சுமி நரசிம்மர், உக்ரநரசிம்மர் முதலிய வைணவச் சிற்பங்களையும் இச் சிவன் கோவிலில் காணலாம்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரரார் (சுந்தரர்), மாணிக்கவாசகர், பிருங்கி முனிவர், நந்தி, நாரதர், தும்புரு, சனகாதி முனிவர்கள் மற்றும் சிவனடியார்களின் சிற்பங்களும் செதுக்கப்பட்டுள்ளன.

அன்னம், மயில், கரிக்குருவி முதலிய பறவைகளும், சிம்மம், யாளி, நாய், நாகர், பசு, யானை, குதிரை, குரங்கு, மான் முதலிய விலங்குகளும் செதுக்கப்பட்டுள்ளன.

"இச் சிற்பங்களில் நகரத்தார் காலச் சமயம் மற்றும் சமூக வளம் காண முடிகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

திருச்சுற்று மாளிகைத் தூண்களிலும், மாளிகைப் பத்திகளிலும் ஏராளமான சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

நட்சத்திர மண்டலங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இராச கோபுரத்தின் முன்புறம் அட்ட இலக்குமி மண்டபம் உள்ளது. இங்குள்ள எட்டுத் தூண்களின் முன்புறம் எட்டு இலட்சுமியின் சிற்ப வடிவைக் காணலாம். இவர்கள் நின்ற கோலத்தில் நான்கு கரங்களுடன் காட்சி தருகின்றனர். எண்மரும் பல்வேறு ஆயுதங்களை வைத்துள்ளனர். பல்வேறு முத்திரைகளைக் காட்டுகின்றனர். இவர்களது தலைகளில் பல்வேறு தலை மாலைகளும், மகுடங்களும் உள்ளன. அணிகலன்கள் பலவற்றை அணிந்துள்ளனர்.

"இவ்விதம் அணிகலன்களை மிகவும் கவனமாகவும், மிகுதியாகவும் காட்டும் வழக்கம் விஜயநகரக் காலத்தைத் தொடர்ந்து செட்டிநாட்டுக் கலைகளிலும் அவை நீடிப்பதைக் காண முடிகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

சிவாலய வழிபாட்டில் அருள்மிகு நந்தி தேவருக்குச் சிறப்பான இடமுண்டு. சிவன் சன்னதியில் அமர்ந்து காவல் புரிபவர் நந்தி தேவராவார்.

இங்கு பெரிய நந்தியின் உருவம் உள்ளது. காளை வடிவமே நந்தியாகும். கருங்கல்லில் நந்தியின் உடல் மிக்க கவனத்தோடும், வனப்போடும் செதுக்கப்பட்டுள்ளது. நகரத்தாரின் முதல் திருப்பணியின் போது இந் நந்தி பிரதிஷ்டை செய்யப் பெற்றது.

ஊர்த்தவ தாண்டவம், காளி நடனம் முதலிய சிற்பங்களும் உள்ளன.

விமானத்திலும் ஏராளமான சிற்பங்கள் உள்ளன.

## செப்புத் திருமேனிகள்

இங்கு 30 செப்புத் திருமேனிகள் உள்ளன.

ஆடும் பெருமான், சிவகாமி, சந்திரசேகரமூர்த்தி, சந்திரசேகர அம்மன், சோமாஸ்கந்தர், தனி அம்மன், உமையாள், பெரிய சிவகாமி, நர்த்தன ஞானசம்பந்தர், திருஞானசம்பந்தர், அஸ்திரதேவர், உமா சகித சந்திரசேகரமூர்த்தி, திரிபுராந்தகர், பெரிய தனி அம்மன் ஆகிய 14 செப்புத் திருமேனிகளும் பாண்டியர் காலத்தவை.

"பாண்டியர்களால் எழுப்பப்பட்ட சிவாலயம் கால வெள்ளத்தால் அழிந்து போனது. அதே இடத்தில் நகரத்தார்கள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இக் கோவிலை எழுப்பியுள்ளனர். இதனை இங்குள்ள கல்வெட்டுக்களும் உறுதி செய்கின்றன" என்கிறார் திரு. மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)

விநாயகர், தெய்வானை, சண்டீசுவரர், பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், பலி பீடம், பிரதோஷ நாயகர், சுப்பிரமணியர், வள்ளி-தெய்வானை, அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்,

அஸ்திரதேவர், அங்குசத்தேவர் முதலிய செப்புத் திருமேனிகள் நகரத்தார்களால் செய்யப்பட்டனவாகும்.

## ஓவியங்கள்

இக் கோவில் இராச கோபுரத்தை ஒட்டியுள்ள அலங்கார மண்டபத்தின் விதானங்களிலும், சுவரிலும் அழகிய ஓவியங்கள் பல தீட்டப்பட்டுள்ளன.

வடக்குச் சுவரில் பெரிய வலம்புரி விநாயகர் வண்ண ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளார். இவ் ஓவியத்தை எத்திசையில் நின்று பார்த்தாலும், விநாயகர் நம்மைப் பார்ப்பது போன்று வரையப்பட்டுள்ளது.

நீண்ட பீடத்தின்மீது இடக்காலை மடித்து, வலக்காலைத் தொங்கவிட்டு நான்கு கரங்களுடன் இவ் விநாயகர் வரையப் பட்டுள்ளார். மேல்வலக் கையில் அங்குசமும், இடக்கையில் பாசமும் உள்ளது. கீழ் வலக்கையில் ஒடிந்த தந்தத்தைத் தலைகீழாகப் பிடித்துள்ளார். இடக்கையில் மோதகம் உள்ளது. சரிந்த தொந்தி, வளைந்த வலம்புரி துதிக்கை, தலையில் சிகப்பு, பச்சைக் கற்கள் பதித்த கரண்ட மகுடம், நெற்றிப் பட்டம், நெற்றியில் திருநீறு, கழுத்தில் பச்சை, நீலம் மணிகள், உருத்திராட்ச மாலை, பூணூல், இடையில் கச்சை, காலில் பாதரசம் முதலியன அழகாகவும், கவனமாகவும் தீட்டப்பட்டுள்ளன.

இவ் விநாயகரைச் சுற்றிலும் உலோக வண்ணத்தில் திருவாட்சி தீட்டப்பட்டுள்ளது.

விநாயகரின் இரு பக்கங்களில் மீசையுள்ள இரு கணங்கள் காட்டப்பட்டுள்ளனர். வலப்புற சிவகணம் பெரிய பலாப்பழத்தைத் தலையில் ஏந்தி நிற்க, இடப்புற சிவகணம் வாழை, மாதுளை, திராட்சை, ஆரஞ்சு, மாம்பழம் முதலிய பழங்களைத் தட்டில் வைத்துச் சுமந்து நிற்கும் நிலையில் தீட்டப்பட்டுள்ளது.

பழம் தின்னும் நிலையில் மூஷிக வாகனம் காட்டப்பட்டுள்ளது.

அலங்கார மண்டபத்தின் மேல் விதானத்தில் நான்கு பக்கங்களிலும் அறுபத்து மூன்று சிவனடியார்களின் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. சைவ சமயக் குரவர்கள் நால்வரும், ஓவியமாகத் தீட்டப்பட்டு. அவர்களின் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன.

அறுபத்து மூன்று நாயன்மார்களை ஓவியமாகத் தீட்டியுள்ளதைப் போலவே, அப்பாலும் அடிசார்ந்தார், பூசலார், மங்கையர்க்கரசியார், நேச நாயனார், கோச்செங்கட் சோழ நாயனார், யாழ்ப்பாண நாயனார், சடைய நாயனார், இசை ஞானியார் என்ற ஒன்பது தொகை அடியார்களும் ஓவியமாகத் தீட்டப்பட்டு அவர்களின் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன.

மீனாட்சித் திருக்கல்யாணம் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. நான்முகன், நந்தி, சிவகணம், மூன்று ஹரிகரர்கள், திருமகள், நாரதர், தும்புரு, மேளகாரர்கள் முதலியோர் இவ் ஓவியத்தில் தீட்டப்பட்டுள்ளனர். இதன் முன்புறம் கயிலை மலையின் கீழ் விநாயகரும், முருகனும் நின்ற கோலத்தில் தீட்டப்பட்டுள்ளனர்.

## கல்வெட்டுக்கள்

இங்கு 10 கல்வெட்டுக்கள் உள்ளன. இவை அனைத்தும் பிற்காலப் பாண்டியர்கள் காலத்தவை. கோனாடு கொண்டருளிய சுந்தர பாண்டியன் கல்வெட்டு 4, விக்கிரம பாண்டியன் கல்வெட்டு 1, எம்மண்டலமும் கொண்டருளிய மாறவர்ம குலசேகர பாண்டியன் கல்வெட்டு 2 ஆகியன கிடைத்துள்ளன.

பிள்ளையார்பட்டிக் கோவிலுக்கு இம் மன்னர்கள் காலத்தில் அளிக்கப்பட்ட கொடைகளையும், சிறப்புகளையும் இக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

பாண்டியர்கள் காலத்தில் இவ் ஊர் 'திருவீங்கைக்குடி' என வழங்கப்பட்டது. இவ் ஊர் கேரள சிங்கவள நாடு பிரிவில் உள்ளது. கல்வெட்டுக்கள் இவ் ஊரைக் "கேரள சிங்க வளநாட்டுக் கீழ்க்குண்டாற்று திருவீங்கைக்குடி" என்றும், "கேரள சிங்கவளநாட்டுக் கீழ்க்குண்டாற்று மருதங்குடி" என்றும், "மருதங்குடியான இராசநாராயணபுரம்" என்றும் குறிக்கின்றன.

இக் கோவில் நகரத்தார்கள் தாங்கள் எழுதும் இசைகுடிமானத்தில் "மருதங்குடியான இராசநாராயணபுரத்தில் பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்" என எழுதுவதிலிருந்து கல்வெட்டுச் செய்தி உண்மை என்பதை அறிகிறோம்.

"இவ் ஊர் கல்வெட்டுக்களில் ஐந்நூற்றுவர் பெருந்தெரு வியாபாரிகள் குறிக்கப்படுவதாலும், இவ் ஊர்ப் பிள்ளையார் தேசிவிநாயகர் என வழங்கப்படுவதாலும், கார்குடி என்ற ஊர்ப்பெயரும் இக் கல்வெட்டில் காணப்படுவதாலும், காரி என்ற

பெயருள்ள பைரவக் கடவுளை முழுமுதற் கடவுளாகக் கொண்ட நானாதேசி திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர் என்ற பிரிவைச்சார்ந்த வணிகர்கள் வாழ்ந்த பகுதியே பிள்ளையார்பட்டி எனத் தெரிகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

## குடமுழுக்கு

விளம்பி வருடம் தை மாதம் 10-ஆம் தேதி (22.1.1899) ஞாயிற்றுக்கிழமை, புதுக்கோவில் கட்டி மூர்த்திகளை அங்கு எழுந்தருளச் செய்து அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இதுவே முதல் குடமுழுக்காகும்.

பிரபவ வருடம் தை மாதம் 28-ஆம் தேதி (10.2.1928) வெள்ளிக்கிழமை இரண்டாவது குடமுழுக்கு நடைபெற்றது.

ஸ்ரீ முக வருடம் வைகாசி மாதம் 30-ஆம் தேதி (12.6.1933) திங்கட்கிழமை இராசகோபுரம், அலங்கார மண்டபம் கட்டி மூன்றாவது குடமுழுக்கு நடைபெற்றது.

விக்ருதி வருடம் தை மாதம் 28-ஆம் தேதி (10.2.1951) சனிக்கிழமை நான்காவது குடமுழுக்கு நடைபெற்றது.

நள வருடம் ஆவணி மாதம் 25-ஆம் தேதி (10.9.1976) வெள்ளிக்கிழமை ஐந்தாவது குடமுழுக்கு விழா நடைபெற்றது.

ஆங்கிரச வருடம் ஐப்பசி மாதம் 23-ஆம் தேதி (8.11.1992) ஞாயிற்றுக்கிழமை ஆறாவது குடமுழுக்கு நடைபெற்றது.

## திருப்பணிகள்

கற்பக விநாயகர், திருவீசர், சிவகாமவள்ளி, மருதீசர், வாடாமலர் மங்கை முதலிய கடவுள்களின் திருப்பணிகள் ரூபாய் ஒன்பது லட்சம் செலவில் செம்மையாகச் செய்யப்பெற்று, முப்பதினாயிரம் செலவில் முதல் குடமுழுக்கு விழா செய்யப்பெற்றது.

இராச கோபுரத் திருப்பணி ரூபாய் இரண்டு இலட்சத்து அம்பதினாயிரம் செலவில் செய்யப்பெற்றது.

கீழச்சிவல்பட்டி ராம. மு. சோம. சோமசுந்தரம் செட்டியார் ரூபாய் எட்டாயிரம் செலவில் வெள்ளிப் பெருச்சாளி (மூஷிகம்)

வாகனம் செய்து வைத்தார். மேலும், ரூபாய் பன்னிரண்டாயிரம் செலவில் பசுமடமும், ரூபாய் எட்டாயிரம் செலவில் கற்பக விநாயக வித்யா சாலையும் நிறுவினார்.

நகரத்தார்களால் ரூபாய் அறுபதினாயிரம் செலவில் பெரிய கருப்பர், மருதங்குடி அய்யனார் கோவில்களும், கோவில் அலுவலர் இல்லங்களும், ரூபாய் பதினைந்தாயிரம் செலவில் பெண்கள் விடுதியும் கட்டப்பட்டன.

ஆ. முத்துப்பட்டணம் சித.மு.நாரா.நாச்சியப்பச் செட்டியார் ரூபாய் ஏழாயிரம் செலவில் தண்ணீர்ப்பந்தலை நிறுவி நடத்தி வருகிறார்.

ஆண்களுக்கெனத் தனி நகர விடுதி கட்டப்பட்டுள்ளது.

இக் கோவிலைச் சார்ந்த பெண்களின் திருமணத்திற்குக் கோவில் நிதியிலிருந்து நிதி வழங்கப்படுகிறது. இங்கு வந்து திருமணம் செய்தால், அத் திருமணத்தைக் கோவில் நிர்வாகமே நடத்தி வைக்கிறது.

திருச்சி நகரத்தார் சங்கத்தினர் கூட்டுத் திருமணங்களைக் கோவில் நிர்வாகத்தினர் உதவியோடு ஆண்டுதோறும் சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

நகரத்தார் ஆதரவோடு டாக்டர் பிச்சைக்குருக்கள் வேதஆகமப் பாடசாலையை நடத்தி, வேதத்தைக் கற்பிக்கிறார்.

## நிர்வாகம்

இக் கோவில் நிர்வாகம் கீழ்க்கண்டவாறு அமைந்துள்ளது.

காரைக்குடியில் 8 குடும்பத்தினர், வலையப்பட்டியில் 2 குடும்பத்தினர், அமராவதிபுதூர், அரிமழம், கண்டனூர், கண்டவராயன்பட்டி, குருவிக்கொண்டான்பட்டி, கோனாபட்டு, தேவகோட்டை, நற்சாந்துபட்டி, பூலாங்குறிச்சி, ஆ.முத்துப்பட்டணம் ஆகிய 10 ஊர்களில் ஊருக்கு ஒரு குடும்பத்தினர் என 10 குடும்பத்தினர், ஆக மொத்தம் 20 குடும்பத்தினர் 10 குழுவாக அமைக்கப்பட்டு, ஆண்டுக்கு இரு குழுவினர் வீதம் நடப்புக் காரியக்காரர்களாய் இருந்து திருக்கோவில் நிர்வாகத்தைக் கவனித்து வருகின்றனர்.

## ஊடல் நீக்கியமைக்கு உவந்தளித்த உரிமை

*மார்கழி திருவாதிரையன்று படிக்கப் பெறுவது :*

*ஸ்ரீமது அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகனாய் ஆதி-மத்திய அந்தரஹிதனாய், சிருஷ்டி, ஸ்திதி,ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்று சொல்லப்பெற்ற பஞ்சகிருத்தியகாரகனாய் விளங்கா நின்ற கைலாசபதியாகிய யாம், பூமியின் கண்ணே எமது சிருஷ்டிக்குட்பட்ட சமஸ்த ஜீவகோடிகளின் ரக்ஷணார்த்தமாயும், பக்தானுக்கிரஹத்தின் பொருட்டும், எழுந்தருளியிருக்கிற திவ்விய க்ஷேத்திரங்களில் விசேஷமான கன்னி நாடென்ற பாண்டி மாநிலத்தில் நமது ஜேஷ்ட குமாரனான கணபதி, கற்பக விருட்சம் சூழ்ந்த திருமலையில் ஸ்வயம்புவாய்த் திருக்கோலம் கொண்டு எழுந்தருளி இருப்பதை முன்னிட்டு யாம், கேசவன், நான்முகன், முதலாய முப்பத்து முக்கோடி தேவர்களுடனும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷி புங்கவர்களுடனும், கின்னார், கிம்புருடர், சித்தர், வித்யாதரர் முதலிய ஆகாசவாசிகளுடனும் எழுந்தருளி, தீர்த்தம், ஸ்தலம் முதலான மகத்துவங்களைக் கண்டு மகிழ்ந்து, இந்தப் பவித்திரமான க்ஷேத்திரத்தைப் பிரிய மனமின்றி மருதங்குடியான இராசநாராயணபுரம் என்றும், கணேசபுரம் என்றும் சொல்லப்பெறும் இப் பிள்ளையார்பட்டியிலே சிவகாமியம்மாள் சமேத திருவீங்கைச்வரன் என்றும், அசோக குஸீமாம்பாள் சமேத அர்ஜீனவனேச்வரன் என்றும், சிவகாம சுந்தரி சமேத ஸ்ரீசபாநாயகன் என்றும், திருநாமங்கள் கொண்டு வீற்றிருக்கின்றோம்.*

*இப்பொழுது நமது அடியார்களுக்கு அருள் புரியக் கருதி நாம் தனித்து எழுந்தருளிய காரணத்தால், நமது உமாதேவியார்க்கு மனவருத்தம் உண்டாகி நம்பால் ஊடி, திருக் கோயில் திருவாயில் கபாட பந்தனம் இட்டிருந்தபடியால், நமது பக்தசிரோமணியான சண்டிகேசுவரன், மணிவாசகன், சுந்தரன் இவர்களை முன்னிட்டு ஊடல் நீக்கியமைக்கு அகமகிழ்ந்து நமது பிதுரார்ஜிதமாயினும் நமது ஆளுகையில் இருக்கின்ற அடியிற்கண்ட க்ஷேத்திரங்களைத் தமக்குச் சுவாமியமாய் விட்டிருப்பதற்கு விவரமாவது :*

*நமது அருள் விளங்கா நின்ற பாரத கண்டத்தில் 56 தேசங்களில் உத்கிருஷ்டமான குணகடலுக்கு மேற்கு, குமரிமால் வரைக்கு வடக்கு, குடதிசைப் பெருவெளிக்கு கிழக்கு, வெள்ளாற்றுக்குத் தெற்கு, இதற்குட்பட்ட பாண்டிய மண்டலம் எனும் கன்னி வளநாட்டில் நீர்வளம், குடிவளம், பயிர் வளம் நிரம்பியதும், மாதம்*

மும்மாரி பொழிவதுமான பட்டமுடையான் ஊருணிக் கீழ்க்கரைக் கல்லுக்கும், உலகடி ஊருணி வடகரை கல்லுக்கும் மேற்கு, மருதங்குடிக் கண்மாய் தென்கடை ஒற்றைப் பனைத்திரி சூலக் கல்லுக்கும், வணிகன் ஆண்டான் ஏந்தல் உள்வாய்க் கல்லுக்கும் வடக்கு, ஈங்கைக்குடிக் கண்மாய் கல்வாய் நாவல் மரத்துக் கல்லுக்கும், பறந்திட்வல் புன்செய் வடவேலிக் கல்லுக்கும், பார்பான் புளிப்புன்செய் மேல் வேலிக்கல்லுக்கும், வயிரவன்பட்டிப் புதுக் கண்மாய் உள்வாய் சுடலைக் கல்லுக்கும் கிழக்கு, காடமுத்தான் கண்மாய்த் தென்கடைப் புளியடிக்கல்லுக்கும், நீலமுத்தான் தென்கடை விரையடிக் கல்லுக்கும் தெற்கு, இப்பெரு நான்கு எல்லைக்குள் அடங்கிய பிள்ளையார்பட்டிக் கிராமம் ஒன்றுக்கு வரையடி (1098) கலனே ஏழு மரக்கால் ஐந்து படிக்கு நிலம் (79) மா காணியே அரைக்காணி முந்திரி, புன்செய் குறுக்கம் 931. இவ்வளவு பூமியின் சகல சுவாதந்தர்யத்தையும் தமக்கு விட்டுக் கொடுத்தோம். இதில் உள்ள நிதி, நிட்சேப, ஜல, தரு, பாஷாண, ஆட்சினி, ஆகாம்ய, வர்த்தமானம் என்று சொல்லப் பெற்ற அஷ்டபோக தேச சுவாம்யங்களுடன் ஆசந்தரார்க்க ஸ்தாயியாய் ஆண்டு வரும்படி கட்டளையிட்டோம்.

இந்தப் பிரகாரம் ஆண்டார் அருளியபடி சண்டிகேச்வரன்.

**(நன்றி : பிள்ளையார்பட்டிக் கோவில்)**

இக் கோவிலில் ஆவணி மாதம் விநாயகர் சதுர்த்தி விழா மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. அதற்குச் செய்யப்படும் முக்குருணி மோதகம் சிறப்பானது.

தமிழக அரசு இக்கோவிலைச் சுற்றுலாத் தலமாக்கியுள்ளது.

முக்குருணி மோதகம் தயாரிக்கும் விதம் : குருணி என்பது 6 படி. முக்குருணி என்பது 3 ஆறுபடிகள். அதாவது 18 படி.

18 படி அரிசி, 4 படி கடலைப்பருப்பு, 2 படி எள்ளு, 50 தேங்காய், 24 வீசை வெல்லம் மற்றும் சில பொருட்களைக் கொண்டு மோதகம் தயார் செய்யப்படுகிறது. இவைகளை எல்லாம் பக்குவப்படி ஒன்று சேர்த்து 8ஆம் திருவிழாவன்று அடுப்பில் ஏற்றி, 10ஆம் திருவிழாவன்று பகல் 12 மணி அளவில் அடுப்பிலிருந்து இறக்குவார்கள்.

- தகவல் : திரு. எல்.சுந்தரம்

**(நன்றி : நகரத்தார்குரல், டிச.1985)**

இக் கோவிலைச் சார்ந்தவர்கள் 42 ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள். அது வருமாறு :

1. அமராவதிபுதூர்
2. அரிமழம்
3. அலவாக்கோட்டை
4. க. அழகாபுரி
5. பி. அழகாபுரி
6. ஆவினிப்பட்டி
7. ஆ. முத்துப்பட்டணம்
8. ஆத்தங்குடி
9. இராயவரம்
10. கொ. லெட்சுமிபுரம்
11. உலகம்பட்டி
12. கடியாபட்டி
13. கண்டரமாணிக்கம்
14. கண்டவராயன்பட்டி
15. கண்டனூர்
16. கல்லல்
17. கல்லுப்பட்டி
18. காரைக்குடி
19. கீழச்சீவல்பட்டி
20. குருவிக்கொண்டான்பட்டி
21. குழிபிறை
22. கொத்தமங்கலம்
23. கோட்டையூர்
24. கோனாபட்டு
25. சண்முகநாதபுரம்
26. சிராவயல்
27. சிறுகூடல்பட்டி
28. சொக்கநாதபுரம்
29. சோழபுரம்
30. தேவகோட்டை
31. நற்சாந்துபட்டி
32. நாச்சியாபுரம்
33. நாட்டரசன்கோட்டை
34. நெற்குப்பை
35. பட்டமங்கலம்
36. பாகநேரி

37. பூலாங்குறிச்சி
38. மிதிலைப்பட்டி
39. மேலச்சிவபுரி
40. வலையபட்டி
41. வெற்றியூர்
42. வேகுப்பட்டி

(நன்றி : நகரத்தார் கலைக்களஞ்சியம்)

ஊர்பிள்ளை யார்பட்டி ஊரோங்கு வேள்வணிகர்
பேர்புகழ்சேர் ஆனைமுகன் பேர்வள்ளல் - பேராம்
மருதீசர் வாடா மலர் மங்கை கல்ப
தருவாகிக் காக்கின்றார் தான்.

(நன்றி : நல்லறக் கவிராயர் சுப.நா.நாகப்பன்)





## வயிரவன் கோவில்

நகரத்தார்களின் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் வயிரவன் கோவிலும் ஒன்று. இக் கோவில் நகர வயிரவன் பட்டியில் அமைந்துள்ளது. இது பாண்டி நாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று.

பழமையும், பெருமையும் மிக்க இவ் ஊர் ஏழகப் பெருந்திருவான வீர பாண்டியபுரம் என அழைக்கப்பெற்றது.

இவ் ஊருக்கு 'வடுகநாதபுரி, வடுகநாதபுரம், வடுகமூதூர், வயிரவநகர், வயிரவமாபுரம்' எனப் பல பெயர்கள் இருந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

சோழர்கள் காலத்தில் வயிரவர் வழிபாடு சிறப்புற்று விளங்கியது. இவ் வழிபாடு பாண்டிய நாட்டிலும் பரவத் தொடங்கியதன் அடையாளமாக இவ் ஊர் விளங்குகிறது. அதனால் இவ் ஊரின் பெயரும் வயிரவன்பட்டி என வழங்கப்படுகிறது. நகரத்தாரின் குலமரபுக் கோவில் இங்குள்ளதால் இவ் ஊர் 'நகர வயிரவன்பட்டி' என அழைக்கப்படுகிறது.

இங்குறையும் இறைவன் வளரொளிநாதர். இறைவி வடிவுடையம்மன் என்ற செளந்தர நாயகி. இங்கு வயிரவருக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளதால், இக் கோவில் வயிரவன் கோவில் என வழங்கப்படுகிறது.

சிவபெருமான் வயிரவர் கோலம் கொண்டு சம்பாசுரனை அழித்த தலம் இது. எனவே வயிரவன் கோவில் என இக் கோவிலும், வயிரவன்பட்டி என இவ் ஊரும் வழங்கப்பட்டு வருகிறது.

இதனைக் கவிஞர் சித. சிதம்பரம்,

இந்திரன் வந்தனன் தன்தலை சூடினன்
சரணென வந்ததாலே
தந்திரத் தெவ்வரை சம்பகா சூரனை
வயிரவர் கோலமிட்டு
வெந்திறல் சூலமும் கண்டிகை சரப்பளி
மழுவுடன் உடுக்கை ஏந்தி
கொந்திய கோலமே நின்றிடும் கோயிலே
வளரொளி நாதராமே!

எனப் பாடிப் பதிவு செய்துள்ளார்.

(நன்றி : நகரக் கோவில் ஒன்பது திருப்பதிகம்)

அம்மன் சன்னதி அமைய வேண்டிய இடத்தில், இக் கோவிலில் வயிரவர் சன்னதி உள்ளது. அதனை அடுத்து அம்மன் சன்னதி உள்ளது.

வயிரவன்பட்டி 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மைச் சிறப்புடையது. வயிரவன்பட்டிக் கண்மாய்க் கரையில் உள்ள 'மாளிகைக்காடு' என்னும் பகுதியில் சங்க காலத்தைச் சேர்ந்த முதுமக்கள் தாழிகள், மட்பாண்டங்கள் கிடைத்துள்ளன. இவை இவ் ஊரின் பழமையைப் பறை சாற்றுகின்றன.

பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில் எழுப்பப்பட்ட கோவில் ஒன்று வயிரவன்பட்டிக் கண்மாய்க் கரையில் உள்ள மாளிகைக்காட்டுப் பகுதியில் இருந்துள்ளது. கால வெள்ளத்தில் இக் கோவில் சிதைந்து விட்டது. தற்போது இலிங்கத்தின் ஆவுடையாரும், சிதைந்த கட்டடச் சுவடுகளுமே உள்ளன. இன்றும் இக் கோவிலை 'மாளிகைக் காட்டு முத்தையா கோவில்' என்று மக்கள் அழைக்கின்றனர்.

இக் கோவில் வயிரவன்பட்டி எல்லையில் அமைந்துள்ளது.

பாண்டியர் காலத்தில் எழுப்பப்பட்ட சிவாலயம் ஒன்று வயிரவன்பட்டியில் கி.பி. 17ஆம் நூற்றாண்டு வரை வழிபாட்டில் இருந்ததாகக் கல்வெட்டுக்கள் மூலமும் அறிய முடிகிறது.

தற்போது வழிபாட்டில் உள்ள மூல வயிரவர், திருச்சுற்று மாளிகையில் உள்ள பழைய வடிவுடையம்மன், ஞான தட்சிணாமூர்த்தி ஆகியன பாண்டியர் காலச் சிற்பங்களுக்குச் சான்றாக உள்ளன.

## வயிரவர் வரலாறு

*சிவமூர்த்தங்களுள் ஒருவர் வயிரவர். கைகளில் சூலமும், கபாலமும், பாசமும், உடுக்கையும் ஏந்தியவர். கோரைப் பற்களும், செஞ்சடையும் உடையவர். இவருடைய வரலாற்றைச் சிவபுராணமும், ஸ்கந்த புராணமும் பிரம்மாண்ட புராணமும் கூறுகின்றன.*

*அசுரர்களை அழிக்கப் பிரகதாரணன் என்ற முனிவர் காசியில். உருத்திர யாகம் செய்தார். அதில் வயிரவர் தோன்றினார் எனத் திருப்பத்தூர் புராணம் கூறுகிறது.*

**கரம் இரண்டினும் தண்டமும் கபாலமும் கவின்**
**தாளமாலை, மஞ்சீரம், அங்கதம் முதல் தயங்க**
**பொருவில் மந்திரப் பூடணனாய் வடுவாகிப்**
**பரம யோகியாய் நின்றனன் ஆண்டு எழு பகவன்**

*என்பது திருப்பத்தூர் புராணப் பாடல்.*

*அசுரர்களை வயிரவர் அழித்தார். நான்கு வேதங்களையும் நாய் வாகனமாக்கினார். யாவரும் அச்சமடைய நடனமாடினார்.*

*இங்குள்ள வயிரவர் ஆடை அணியவில்லை. உடுக்கை, நாகபாசம், திரிசூலம், கபாலம் ஏந்தி நாய் வாகனத்துடன் உள்ளார். இவரை வடுக வயிரவர் எனப் புராணம் கூறுகிறது. கல்வெட்டுக்கள் கபால வயிரவர் எனக் குறிப்பிடுகின்றன.*

*அசுரர்களின் கொடுமை தாங்க முடியாத தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர்.*

*"அழிஞ்சில் வனம் சென்றால் உங்கள் துன்பம் தீரும்" என்று சிவபெருமான் சொன்னார்.*

*இந்திரன் தலைமையில் தேவர்கள் அழிஞ்சில் வனம் சென்றனர். அங்கு வளரொளி நாதரும், வடிவுடையம்மனும் கோயில் கொண்டு எழுந்தருளி இருப்பதைக் கண்டு வணங்கினர். தேவர்களின் துன்பம் தீர்க்க வளரொளிநாதர் வயிரவர் கோலம் கொண்டார் என வயிரவன் கோவில் புராணம் கூறுகிறது.*

**களர்முடி அண்ட கோளம் கெழும**
**நாற்புயமும் எண்திக்கு**

அளவினைக் காட்ட மேனி
அனந்த சூரியரிற் சிறப்ப
தளர்உறு சுரர்பால் வைத்த
தண்ணிய கருணையாலே
வளர்ஒளி நாமத்து ஈசன்
வயிரவக் கோலம் கொண்டான்.

- வயிரவன் கோவில் புராணம்.

*இக் கோவிலின் திருச்சுற்றில் ஏறழிஞ்சில் மரம் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. இந்த மரத்திலிருந்து பழம் உதிர்ந்தால், அப் பழம் மீண்டும் கிளையில் ஒட்டிக் கொள்ளும் எனக் கூறுவர். இம் மரமே கோவில் தல விருட்சமாகும். இப்போது இம் மரம் அழிந்து விட்டதால் கல்லிலே செதுக்கி வைத்துள்ளனர்.*

*இங்குள்ள இலிங்கம் சுயம்பல்ல.*

*வயிரவன் கோவிலில் பிறந்த மங்கையர்க்கரசி ஆச்சி மாத்தூர் கண்ணுருடையார் பிரிவில், வாழ்க்கைப்பட்டார். அவர்களுக்குப் பிள்ளை இல்லை. வருந்திய அவர்களுக்குத் துறவி ஒருவர் அழிஞ்சில் கொம்பு ஒன்றைக் கொடுத்தார். அக் கொம்பைச் சிவபெருமான் அருகில் நட்டு வணங்கச் சொன்னார். வளரொளிநாதர் கோவிலில் நட்டு அவர்கள் வணங்கினர். பிள்ளைப்பேறு உண்டாயிற்று. இன்று அவர்கள் பிள்ளைகள் சிறுகூடல்பட்டியில் 'நாராயணசுவாமி கோவில் படைப்பு வீடு' கட்டிப் படைத்து வருகின்றனர்.*

*இவ்வாறு வயிரவன்பட்டிக்கு அழிஞ்சில் மரம் வந்தது என ஒரு கதை கூறுகின்றனர்.*

*இக் கோவில் நகரத்தார் மூன்று பிரிவுகளாக உள்ளனர். 1. சிறுசேத்தூருடையார். இதில் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. அவை: பெரிய வகுப்பு, பிள்ளையார் வகுப்பு, தெய்யனார் வகுப்பு. 2. கழனிவாசல் உடையார், 3. மருதேந்திரபுரமுடையார்.*

*பிள்ளைக்கூட்டிக் (சுவீகாரம்) கொள்வதில், இக் கோவில் நகரத்தார்கள் பிரிவு பார்ப்பதில்லை. அதாவது, எப்பிரிவாய் இருந்தாலும், அவர்கள் வயிரவன் கோவிலாய் இருந்தால் போதுமானது.*

*ஆனால், திருமணம் செய்யும்போது பிரிவு மாற்றிப் பெண் கொடுப்பதோ, பெண் எடுப்பதோ இல்லை. அதாவது*

இளையாத்தங்குடி மற்றும் மாத்தூர் கோவில் போல, பிரிவு மாற்றி மணம் செய்வதில்லை. அதற்குப் பதிலாக வேறு கோவிலைச் சார்ந்த பெண்ணையே மணமுடிக்கின்றனர். மணமகனையும் அவ்வாறே. தேர்ந்தெடுக்கின்றனர். இம் முறையைத் தவறாமல் கடைப்பிடிப்பது இக் கோவில் நகரத்தாரின் சிறப்பாகும்.

## வயிரவன் கோவில் புகழ் பாடும் நூல்கள்

இக் கோவிலின் சிறப்பைக் கூற இரண்டு நூல்கள் உள்ளன.

ஒன்று சேந்தன்குடி வி. நடராசக் கவிராயர் இயற்றிய 'வயிரவன்கோயிற் புராணம்.'

இரண்டு இதே ஆசிரியர் இயற்றிய 'வடிவுடையம்மை பிள்ளைத் தமிழ்.'

வயிரவன் கோவில் புராணத்தை தேவகோட்டை வித்வசிகாமணி வீர.லெ. சின்னையா செட்டியார் திருத்தமாக வெளியிட்டுள்ளார்கள்.

வயிரவன் கோவில் புராணத்தில் 17 படலங்கள் உள்ளன. அவை: பாயிரம், நாட்டுப்படலம், நகரப்படலம், நைமிசப்படலம், புராணவரலாற்றுப் படலம், தலவிசேடப் படலம், மூர்த்தி விசேடப் படலம், தீர்த்த விசேடப் படலம், தேவர் சரண்புகு படலம், வயிரவப் படலம், அசுர சம்ஹாரப் படலம், தேவர் பூசித்தபடலம், ததிசி முனிவர் பூசித்த படலம், சந்திரன் பூசித்த படலம், சுக்கிரன் பூசித்த படலம், கிரிகரப் படலம் முதலியனவாகும்.

படைக்கும் பரிசும் படியளிக்கும் பண்பும்
பதுமப் பண்ணவர்க்கும்
தொடைப் பைந்துளவத் திருமாற்கும் சுதந்தரத்த
தொழில் அண்மை
முடைப்புன்தலை வெண்கலன் கரிய முழுக்கஞ்சுகம்
என்று இவ்உரைத்த
மடைத்தண்புனல் போல அருள்வழங்கும்
வடுகநாதன் வழித்துணையே!

என்பது வயிரவன் கோயிற் புராணத்தில் பாயிரப் பாடலாகும்.

வடிவுடையம்மன் பிள்ளைத் தமிழில் சப்பாணிப் பருவத்தில்,

...பட்டினத்தடிகளின்
நிவப்பறு குலத்தோர் வணி கன்பொதி எருத்திற

நிலன் நட்ட பட்ட முளையை
நிலை பெயர்ப்(பு) அரிதாத் தளிர்ப்பித்த வளரொளியுள்
நீங்காது நிலவும் ஒளியே! (பாடல்-4)

என்ற வரிகள் காணப்படுகின்றது.

இதன் பொருள் : நாட்டுக்கோட்டை வணிகன் ஒருவனுடைய எருதுக்காக நிலத்தில் நட்டுப் பட்டுப் போன முளையைத் தளிரச் செய்தாள் என்பதாகும்.

## வளரொளிநாதர்

இக் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், நடராசர் சபை, முன் மண்டபம், வயிரவர் சன்னதி, பள்ளியறை, அம்மன் சன்னதி, நந்தி மண்டபம், பலி பீடம், கொடி மரம், மேற்சுற்றுப் பிரகாரம், திருச்சுற்று மாளிகை, பரிவார ஆலயங்கள், யாக சாலை, வெஞ்சன அறை, கிணறு, மடப்பள்ளி, மாலைகட்டும் மேடை, சந்தனம் அரைக்கும் மேடை, இராச கோபுரம், திருச்சுற்று மதில், வயிரவர் பீடம், வாகன அறை, அலங்கார மண்டபம், வெளிப்பிள்ளையார் சன்னதி, முப்பலிக் கருப்பர் சன்னதி, ஊரணி, வயிரவர் தீர்த்தம் முதலிய பகுதிகளைக் கொண்டுள்ளது.

வளரொளிநாதர் கோவில் கிழக்கு நோக்கிய சன்னதியாகும். கருவறையின் நடுவே லிங்கம் உள்ளது. இதன் நெற்றியில் பிரம்ம சூத்திரக் கோடுகள் உள்ளன. நிலைக் கால்களைத் தாமரை மலர்களும், கல் மணிகளும் அழகு செய்கின்றன. கருவறை வாயிலின் முகப்பைக் கஜலெட்சுமியின் சிற்ப வடிவம் அலங்கரிக்கிறது.

இக் கோவில் வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது.

இக் கோவில் விமானம் உபபீடம், அதிட்டானம், சுவர், பிரஸ்தரம், க்ரீவம், சிகரம், ஸ்தூபி என ஏழு உறுப்புக்களைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது.

தட்சிணாமூர்த்தி கல் மண்டபத்தின் கீழ் உள்ள உப பீடத்தின் கண்டப் பகுதியில் லிங்கத்திற்குப் பால் சொரியும் பசுவும், காமதேனுவும் அழகிய சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. கீழுள்ள உபான வரியில் கபோதகத்தின் இடையே சீற்றமுடன் தோன்றும் இரு சிங்கச் சிற்பங்கள் உள்ளன. உப பீடத்தின் மூன்று உறுப்புக்களையும் ஒரே கல்லில் செய்து இணைத்துள்ளனர்.

இங்குள்ள அதிட்டானத்தை நுட்பமாக அமைத்துத் தனித் தனியாகப் பெரும் கற்களைக் கொண்டு மயிரிழை இணைப்பில் பொருத்தி உள்ளனர். இவ் வகை அதிட்டானத்தை 'அம்போஜசேகரம்' என்றும், 'புஷ்ப புஷ்கலம்' என்றும் சிற்ப நூல்கள் கூறுகின்றன. இவ் அதிட்டானம் 'பாத பந்த அதிட்டான' வகையைச் சேர்ந்ததாகும்.

"இதை நகரத்தார் காலக் கட்டடக் கலைப்பாணியில் குறிப்பிடத்தக்க அம்சமாகக் கருதலாம்" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

இத் தகைய நேர்த்தியான அதிட்டான அமைப்பு நேமம் கோவிலில் உள்ளது. இது எழுவன் கோட்டைச் சிற்பிகளின் கை வண்ணமாகும்.

பருத்த விழி, நெளிந்த புருவம், புடைத்த மூக்கு, கூரிய பற்கள் கொண்ட சிம்மத்தின் வாயிலிருந்து அபிஷேக நீர் வெளியேற கோமுகி அமைக்கப்பட்டுள்ளது. இதேபோன்ற கோமுகி அம்மன் சன்னதி மற்றும் வயிரவர் சன்னதியிலும் உள்ளது.

சுவரில் உள்ள தூண்களின் பாதங்களில் வாலை முறுக்கி, முகத்தைத் திருப்பி, இலைக் கருக்குகளைப் பற்றி நிற்கும் பாயும் சிம்மங்களைக் காணலாம்.

பொதிகையின் உத்தரப் பட்டைகளில் சங்கூதும் சிவகணங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

தேவகோட்ட மாடத்தின் தெற்கே தட்சிணாமூர்த்தியும், மேற்கே அண்ணாமலையாரும், வடக்கே நான்முகனும் உள்ளனர்.

தேவகோட்ட மாடங்கள் அமைந்துள்ள முகபத்திரத்தின் இரு கோடிகளிலும் உள்ள தூண் கால்களில் கொடிக்கருக்குகளுடன் வாலைச் சுருட்டி நிற்கும் சிம்மம் சிற்பமாய்ச் செதுக்கப்பட்டுள்ளது.

மகர முகமும், பறவை உடலும் கொண்டுள்ள இரு மகரங்களைக் கும்ப பஞ்சரத்தில் காணலாம்.

கூரையின் மூலைப்பகுதியில் சிவகணங்கள் உள்ளன. முகப்பில் சங்கூதும் சிவகணங்கள், வாளேந்தும் சிவகணங்கள் உள்ளன. பூத கணங்கள் இல்லாத எழுதகம் உள்ளது.

கபோதகத்தின் நாசிக் கூடுகளில் அல்லி மலர் ஏந்தி நிற்கும் அன்னை, காளத்திநாதர், மயில்வாகனர், அகோர வீரபத்திரர், அக்னி வீரபத்திரர், எண்தோள் பைரவர், விநாயகர், மாமுனிவர், நடனமாடும் ஆண், நரசிம்மர், வளரொளீசுவரர், வடிவுடையம்மை, திருமகள், நிலமகளுடன் திருமால், மீனாட்சித் திருமணம், பிச்சாடனார், வீணாதர தட்சிணாமூர்த்தி, இரகுராமன், இலக்குவன், அர்த்தநாரீசுவரர், பிருங்க முனிவர், வீரபாகு, அனுமான், குகாம்பிகை, ஆடற்பெண், யானைக்கு மோட்சம் கொடுக்கும் பெருமான், கரிக்குருவிக்கு உபதேசம் செய்யும் சிவன், சுந்தரர், அப்பர், காளி முதலிய பல அழகிய சிற்பங்கள் உள்ளன.

"கற்பனை வளமும், கலைத்திறனும் மிகுந்த பெரும் சிற்பக் காவியங்களை வயிரவன் கோவில் முக மண்டபத்தில் தோற்றுவித்த எழுவன்கோட்டை சிற்பிகள் அதே உணர்வோடும், ஊக்கத்தோடும், சிற்றிலக்கியங்களை ஒத்த இச் சிற்பங்களை மிக நுட்பமாகப் படைத்துள்ள பாங்கு அவர்களது ஆற்றலை வெளிப்படுத்தி நிற்கிறது. இன்று நகரத்தார் கலைப்பாணியை அளவிடச் சிறந்த கருவியாக அமைகின்றன" எனப் பாராட்டுகிறார் திரு. மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

வயிரவன் கோவில் கருவறைக்கு மேலுள்ள விமானம் இரண்டு தளங்களை உடையது. ஒவ்வொரு தளத்திலும் சாலைகளின் நடுவே திசைக்கேற்ப தெய்வ உருவங்களைச் சிற்ப நூல்களைத் தழுவி அமைத்துள்ளனர்.

கிழக்கே உமையோடு விடை ஏறும் பெருமான், தெற்கே சனகாதி முனிவர்க்கு அறம் உரைக்கும் அண்ணல், மேற்கே நிலமகள் திருமகளுடன் திருமால், வடக்கே சாவித்திரி, சரசுவதியுடன் நான்முகன் ஆகியோரின் சுதைச் சிற்பங்கள் உள்ளன. இந்த திசைத் தெய்வங்களைச் சுற்றி ஏராளமான தெய்வ சுதைச் சிற்பங்கள் உள்ளன.

வட்ட வடிவமான கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் வேதிப்படையில் பூத கணங்களும், இரட்டை நந்திகளும் சுதைச் சிற்பங்களாக உள்ளன.

விமானத்தின் அடி முதல் கூரை வரை கல் திருப்பணி. அதன் மேலுள்ள எட்டுத் தளங்களும் செங்கல் சுதை கொண்டு கட்டப்பட்டுள்ளன.

அர்த்த மண்டபத்தின் உட்புறம் தூண்களின்றி எளிமையான அமைப்பில் உள்ளது. வாயிலின் வடக்கே வயிரவர் பீடமும், தெற்கே துவார கணபதியும் உள்ளனர்

அர்த்த மண்டபப் புறச்சுவரில் விநாயகர், விஷ்ணு, துர்க்கை முதலிய தெய்வ உருவங்கள் உள்ளன. இவற்றை அமைக்கப் பீடத்தைக் கட்டிக் கபோதக வரியிலே இணைத்துள்ளனர்.

"பல்லவர், சோழர், பாண்டியர், விசய நகர மன்னர்கள் காலத்தில் கோவில்களில் காண முடியாத இத்தகைய அமைப்பினை வயிரவன் கோவிலிலும், நேமம் கோவிலிலும் காண முடிகிறது. நகரத்தார் காலத்திய கட்டிடக் கலைப்பாணியில் இதனை ஒரு புது அம்சமாகவே காண வேண்டும். இது அக் கால கட்டட வளர்ச்சியினை அடையாளம் காண உதவுகிறது" எனக் கூறுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

அர்த்த மண்டபத்தின் முன்புறம் மகா மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தின் வடக்கே நடராசர் சபை உள்ளது. நடுவே பலி பீடமும், நந்தியும், கண்ணாடியும் உள்ளன. இம் மண்டபத்தை நான்கு சித்திரத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. இத் தூண்களில் நர்த்தன கணபதி, ஆறுமுகன், ஆடவல்லான், மார்க்கண்டேயன், சம்ஹாரமூர்த்தி, நரசிம்மப்பெருமான், ரிஷப வாகனர், திருமால், ஆலமர்ச்செல்வன், சங்கர நாராயணன், மீனாட்சித் திருமணம், மோகினி, முனிவர், பிச்சாடனர், கந்தர்வர், வீணை இசைக்கும் பெண், அன்னப் பறவை ஆகிய புடைச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

மகா மண்டபத்தின் வடக்கே உள்ள நடராசர் சபையில், நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர் ஆகியோரின் உலோகச் சிற்பங்கள் உள்ளன.

ஆடும் ஞானசம்பந்தரும், பொற்றாளம் இசைக்கும் ஞானசம்பந்தரும் தேவகோட்ட மாடங்களில் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளனர்.

இச் சபையின் அரைத்தூணின் முன்புறம் புலி, சீறும் சிம்மம், ஈட்டியால் குத்தும் இரு குதிரை வீரர்கள் உள்ளனர். வணங்கிய நிலையில் உள்ள அடியார், நான்முகன், ஈருடல் ஒருதலை உள்ள ஆயர் மகள், ஊர்த்துவ தாண்டவர், காளி நடனம் முதலிய சிற்பங்கள் உள்ளன.

பிள்ளைத் தூண்களின் பலகைமீது சீறிப் பாயும் சிம்மத்தை மிக இயற்கையாகப் படைத்துள்ளனர். சிம்மத்தின் தலைமீது ஆலாங்குப் பட்டறை உள்ளது. அதன்மீது நாடகச் சட்டத்தை அமைத்து இவ் அணியொட்டித் தூணை அமைத்துள்ளனர். ஒரே கல்லில் இத் தூணைப் பிள்ளைக் கால்களோடு கவனமாகச் செதுக்கி அமைத்துள்ளனர்.

"இத்தகைய தூண் வடிவினைப் பிற நகரக் கோவில்களில் காண்பதரிது. இத்தகைய கட்டடக் கலைப்பாணி நகரத்தார் காலக் கலையினை அளவிடவும், அடையாளம் காணவும் துணை புரிகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

விசாலமான முக மண்டபம் உள்ளது. இம் மண்டபத்தை பதினான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. இத் தூண்களில் தெய்வ உருவங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

மேற்சுற்றுப் பிரகாரத்தில் பரிவார தெய்வங்கள் உள்ளன. மேற் பிரகாரத்தையும், சுவாமி சன்னதி கூரைகளையும் இணைத்த நிலையில் காற்றும், வெளிச்சமும் வருமாறு கல் சாளரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

"இங்குள்ள தூண்களின் அமைப்பு முறையும், பத்திகளின் பகுப்பு முறையும், சாளரங்களின் அமைப்பும் நாட்டுக்கோட்டை நகரத்தாரின் கட்டடக் கலையை அடையாளம் காட்டுவதாய் உள்ளது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

விநாயகருக்குத் தனி சன்னதி உள்ளது. இவர் இடப்புரி விநாயகர். இச் சன்னதியில் பல தெய்வ உருவச் சிற்பங்கள் உள்ளன.

சுப்பிரமணியருக்கும் தனிச் சன்னதி உள்ளது. இது விநாயகர் சன்னதியை ஒத்த அமைப்புடையது. இச் சன்னதியிலும் பல தெய்வ உருவச் சிற்பங்கள் உள்ளன.

சண்டிகேசருக்கும் தனிச் சன்னதி உள்ளது. தமிழகத்தில் உள்ள சண்டிகேசுவரர் சன்னதிகளில் இச் சன்னதி சிறப்பானது. இச் சன்னதி ஒரே கல்லினால் தனிக் கோவிலாக எழுப்பப்பட்டுள்ளது.

"வயிரவன்பட்டி மலையில் எடுத்த பெரிய கல்லைக் குடைந்து அதில் சண்டிகேசுவரரை எழுந்தருளச் செய்துள்ளார்கள். அந்தக் கல் எடுக்கப்பட்ட இடத்தில் ஏற்பட்ட பள்ளத்திற்கு 'சண்டிகேசுவரர் பள்ளம்' என்ற பெயர் இன்றும் வழக்கில் உள்ளது. இவ்வாறு ஒரே ஊரில் இருந்து வெட்டி எடுத்த கல்லைக் கொண்டு அதே ஊர்க் கோவிலில் சன்னதியாகத் தோற்றுவித்துள்ள பெருமை நாட்டுக்கோட்டை நகரத்தார்க்கே உரியது" என்று பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வயிரவன் கோவில்)**

இங்குள்ள சண்டிகேசுவரர் நான்கு கரங்களுடன் உள்ளார். மேல் வலக்கையில் மழு, இடக்கையில் பாசம் உள்ளது. கீழ்க்கரங்கள் இரண்டும் அபயவரத கரமாக உள்ளன. தலையில் சடை மகுடம் உள்ளது.

"இச் சிற்பம் நாச்சியாபுரம் அருகே உள்ள கம்பனூர் மலையிலிருந்து கொண்டு வரப்பட்ட கரிய நிறக்கல்லில் வடிவமைக்கப்பட்டுள்ளது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வயிரவன் கோவில்)**

ஒரு தள விமானம் உடையது இச் சன்னதி.

இந்த அரிய சன்னதி வயிரவன் கோவில் நகரத்தாரின் முதல் திருப்பணியின்போது எழுப்பப்பட்டது.

வயிரவர் சிவமூர்த்தங்களுள் ஒருவர், இவர் காவல் தெய்வம்.

**விரிந்த பல்கதிர் கொள்சூலம்**
**வெடிபடு தமரு கங்கை**
**தரித்த தோர் கோலத்தால்**
**பைரவ னாகி வேழம்**
**உரித்து உமைஅஞ்சக் கண்டு**
**ஒண்திரு மணிவாய் விள்ளச்**
**சிரித்து அருள் செய்தார்**
**சேனறச் செந்நெறிச் செல்வனாரே**

என்று வயிரவரை அப்பர் துதிக்கிறார்.

"திருப்பத்தூரில் உள்ள வயிரவர் கோவில் வயிரவரின் சிரசாகவும், வயிரவன்பட்டியில் உள்ள வயிரவன் கோவில் வயிரவரின்

இதயமாகவும், இலுப்பைக்குடிக் கோவிலில் உள்ள வயிரவர் பாதமாகவும் விளங்குவதாக"க் குறிப்பிடுகிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

இங்குள்ள வயிரவர் மார்த்தாண்ட பைரவர் என்று அழைக்கப் படுகிறார். விசேட நாட்களில் இவருக்கு வைர மகுடமும், சொர்ண அங்கியும் சாத்தப்படுகின்றன. வெள்ளி அங்கியும் உள்ளது.

இச்சன்னதியின் முகப்பில் அமர்ந்த கோலத்தில் இலக்குமி உள்ளாள். வைரவரின் மேல் கைகளில் உடுக்கையும், ஆடும் நாகமும் உள்ளன. கீழ்க் கைகளில் நீண்ட சூலமும், கபாலமும் உள்ளன. நாய் வாகனத்துடன் பல்வேறு அணிகலன்கள் அணிந்து, ஆடை இன்றி பைரவர் உள்ளார்.

இக் கருவறை இரு தள விமானத்தை உடையது. இங்குள்ள கபோதகக் கூடுகளில் பல்வேறு தெய்வச் சிற்பங்கள் உள்ளன.

## வடிவுடையம்மன்

வடகிழக்குத் திசையில் அம்மன் சன்னதி அமைந்துள்ளது. தென் திசையை நோக்கியுள்ள இவ் அன்னையின் மற்றொரு பெயர் சௌந்தரநாயகி என்பதாகும். அன்னைக்கு இரு கரங்கள் உள்ளன. வலக்கையில் நீலோற்பவ மலர் உள்ளது. இடக்கை லோப முத்திரை காட்டுகிறது. முடி முதல் பாதம் வரை அணிகலன்களை அணிந்துள்ளாள்.

அர்த்த மண்டபக் கர்ணக்கூடு பத்திகளில் பல்வேறு தெய்வ வடிவங்களைப் படைத்துள்ளனர்.

"இம்முறை நகரத்தார் கலைப்பணியை அடையாளம் காட்டுபவை" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

அருள் சுரக்கும் உமையாள், தியானத்தில் வீற்றிருக்கும் யோகேஸ்வரி, கோபத்தைக் காட்டும் காளி ஆகிய வடிவங்கள் புடைச் சிற்பங்களாக உள்ளன.

இரு தளமுடைய விமானம் உள்ளது. இரு தளங்களிலும் சுதையால் செய்யப்பட்ட தெய்வ வடிவங்கள் உள்ளன.

**பள்ளியறை**

வெள்ளைக்கல்லும், செங்கல்லும் கொண்டு எழுப்பப்பட்ட பள்ளியறை உள்ளது.

திருவனந்தல், காலை சந்தி, அர்த்தசாமப் பூசையின் போது பள்ளியறை திறக்கப்பட்டு பூசை செய்யப்படுகிறது.

இக் கோவிலை வலம் வருவதற்கு நீண்ட அகன்ற திருச்சுற்றுப் பாதை உள்ளது.

இக் கோவில் அணியொட்டித் தூண்பத்திகளில் யானையின் துதிக்கையைப் பற்றி நிற்கும் துதி யாளியின் சிற்பங்கள் உள்ளன.

திருச்சுற்று மாளிகையைச் சுற்றிப் பரிவாரத் தெய்வங்கள் உள்ளன.

இராசகோபுரம் : கிழக்கு வாயிலில் வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் எழுப்பப்பட்ட ஐந்து நிலை இராசகோபுரம் உள்ளது. கம்பீரமாகக் காட்சியளிக்கும் இக் கோபுரம் எழுவன் கோட்டை சிற்பிகளால் எழுப்பப்பட்டது.

வெளிப்பிள்ளையார் : இராசகோபுரத்தின் தென்கிழக்குப் பகுதியில் வெளிப்பிள்ளையார் சன்னதி உள்ளது. இவர் கோவிலுக்கு வெளியே உள்ளதால் வெளிப்பிள்ளையார் என அழைக்கப்படுகிறார். இக் கோவிலில் உள்ள நான்கு விநாயகர்களில் இவர் உருவில் பெரியவர்.

முப்பலிக் கருப்பர் : இராச கோபுரத்தின் வடகிழக்குப் பகுதியில் இலுப்பை மரம் ஒன்றுள்ளது. இம் மரத்தில் முப்பலிக் கருப்பர் ஐக்கியமாகி உள்ளார். இக் கருப்பருக்குத் தனி சன்னதி இல்லை. இலுப்பை மரத்தின் முன்புறம் சிறு பீடம் உள்ளது. அதனை மக்கள் வணங்கி வருகின்றனர். அருகில் சங்கூதிக் கருப்பர், சோணையன் முதலிய பரிவார தெய்வங்கள் உள்ளன.

கருப்பருக்குக் கருங்கிடா, செங்கிடா, பலநிறக்கிடா ஆகிய மூன்று வகைக் கிடாக்களைப் பலி கொடுப்பதால், இவருக்கு "முப்பலிக் கருப்பர்" என்று பெயர்.

வயிரவன் கோவிலை நகரத்தார்கள் எழுப்புவதற்கு முன்பாகவே இக் கருப்பர் இங்கிருந்ததாகக் கூறுகின்றனர்.

சிவன் ராத்திரி பூசையன்று இவருக்குச் சிறப்புப் பூசை செய்யப்படுகிறது. வைராவிகள் இவருக்குப் பூசை செய்கின்றனர்.

விசேட காலங்களில் கருப்பரின் அரிவாளை இங்கிருந்து மகிபாலன்பட்டிக் கோவில் வீட்டிற்கு மேளதாளத்துடன் எடுத்துச் சென்று, மூன்று நாள் படைத்துவிட்டு மீண்டும் இங்கு வந்து வைப்பார்கள்.

இரவு 12 மணியளவில் கிடா வெட்டிப் பூசையிட்டுப் பள்ளயம் போட்டுப் படைத்து வைராவி சாப்பிடுவார். எஞ்சியவற்றை மண்ணில் போட்டுச் சேமம் செய்து விடுவர். உபயதாரர்களுக்குச் சர்க்கரைப் பொங்கல் வழங்குவர்.

## சிற்பங்கள்

இக் கோவில் உள்ள தேவகோட்டம், அர்த்த மண்டபம், மேற்சுற்றுப் பிரகாரம், திருச்சுற்று மாளிகை, பரிவாரத் தெய்வங்களின் சன்னதிகள், கோபுரம் ஆகிய பகுதிகளில் அழகிய சிற்பங்கள் பல உள்ளன.

இங்குள்ள சிற்பங்கள் வருமாறு :

தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், நான்முகன், நர்த்தன விநாயகர், விஷ்ணு துர்க்கை, துவார கணபதி, ஆகாச வயிரவர், ஆதிமூலர், அர்த்த நாரீஸ்வரர், மாணிக்கவாசகர், நர்த்தன வயிரவர், வடுக வயிரவர், பிச்சாடனர், தண்டாயுதபாணி, குழலூதும் கோபாலன், கரிக்குருவிக்கு உபதேசிக்கும் சிவன், உமையவள், இராமர், வீர ஆஞ்சநேயர், நர்த்தன ஞானசம்பந்தர், ஆடும் ஆளுடைய பிள்ளை, ஞானசம்பந்தர், வேட்டுவச்சி, வேட்டுவன், காளைவாகனத் தேவர், துவார பாலகர்கள், துவார பாலகிகள், ஊர்த்துவத் தாண்டவர், எண்தோள்காளி, வயிரவமூர்த்தி, அகோர வீரபத்திரர், அக்கினி வீரபத்திரர், நடராசர், பார்வதி, திரிபுரசுந்தரி, மலைமகள், வீணை மீட்டும் வனிதை, மன்மதன், ரதி தேவி, கோதண்டராமர், இலக்குவன், சீதை, பரதன், மீனாட்சி கல்யாணம், கண்ணப்பரைத் தடுத்தாட் கொள்ளும் சிவன், குதிரைச் சிற்பம், கொடிப் பெண்கள், தெய்வனாஞ் செட்டியார் முதலிய சிற்பங்கள் உள்ளன.

## செப்புத் திருமேனிகள்

இக் கோவிலில் 23 செப்புத் திருமேனிகள் உள்ளன. முதல் திருப்பணியின் போது வயிரவன் கோவில் நகரத்தார்களால் இவை செய்து வைக்கப்பட்டவையாகும்.

"தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகளில் ஒரு கணிசமான எண்ணிக்கை செட்டிநாட்டுக் கோவில்களில் காணப்படுகின்றன. ஒன்பது நகரக் கோவில்களிலும் இத் திருமேனிகள் உள்ளன.

நகரத்தார் காலத்துச் செப்புத் திருமேனிகள் தமிழ்நாட்டின் படிமக் கலை வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியை நிரப்புவதாக உள்ளது. இக் கலைச் செல்வங்கள் தமிழர் சமயத்தையும், மாண்பையும் வெளிப்படுத்துவன. உலா வருவதற்கு எனத் தியான சூத்திரங்களோடு முறையாக வடிக்கப்பட்டவை" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வயிரவன் கோவில்)**

இங்குள்ள செப்புத் திருமேனிகள் வருமாறு :

விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, அழகு நாச்சியம்மன், வயிரவமூர்த்தி, சண்டீசர், அஸ்திர தேவர், சந்திரசேகரமூர்த்தி, சந்திரசேகர அம்மன், உமா சகிதச் சந்திரசேகர மூர்த்தி, சிவன், உமையவள், சோமாஸ்கந்தர், ஸ்கந்தர், தனி அம்மன், பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், நந்தி முதலிய செப்புத் திருமேனிகள் உள்ளன.

## வாகனங்கள்

பெரியதும், சிறியதுமாக அழகிய சிற்ப வேலைப்பாடுகளும், சித்திர நுணுக்கங்களும் நிறைந்து, மரத்தால் செய்யப் பெற்ற 11 (பதினொன்று) வாகனங்கள் இங்குள்ளன. அவை வண்ணம் தீட்டப்பட்டும், அணி மணிகளால் அலங்கரிக்கப்பட்டும் உள்ளன.

இக்கோவிலில் உள்ள வாகனங்கள் : பெரிய காளை வாகனங்கள் இரண்டு, சிறிய காளை வாகனம் ஒன்று, கயிலங்கிரி வாகனம், கற்பக விருட்ச வாகனம், காமதேனு வாகனம், குதிரை வாகனம், சிம்ம வாகனம், மூஷிக வாகனம், அன்ன வாகனம், மயில் வாகனம் முதலியனவாகும். இவை யாவும் வயிரவன் கோவில் நகரத்தாரால் செய்யப்பட்டன.

"சீறிப்பாயும் சிம்ம வாகனமும், செம்மாந்திருக்கும் காளை வாகனமும், கம்பீரமான யானை வாகனமும், காண்போர் வியக்கும் கயிலங்கிரியைத் தூக்கும் இராவணேஸ்வரன் வாகனமும் (கைலாச

வாகனம்), காண்பதற்கரிய கற்பக விருட்ச வாகனமும், கவின்மிகு காமதேனு வாகனமும், அழகு நடை பயிலும் அன்ன வாகனமும், தோகை விரித்த மயில் வாகனமும், உருவில் சிறிய மூஷிக வாகனமும், பாங்குற அமைந்து காண்போரைக் களிப்பில் ஆழ்த்துகின்றன. சூரசம்ஹாரத்தில் பங்கு கொள்ளும் அசுரனது கம்பீர உருவமும், அசுரனைச் சம்ஹாரம் செய்யும் நந்தீஸ்வரரும், பள்ளியறையில் உள்ள கேடக ஊஞ்சலும், பல்லக்கும், மர வேலைப்பாடும், சித்திர வேலைப்பாடும் மிக்கதாகத் திகழ்கின்றன. இவை நகரத்தார் காலத்து மரச்சிற்ப மரபினை அடையாளம் காணும் கருவியாக அமைந்து விளங்குகின்றன" எனப் பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வயிரவன் கோவில்)

## கோவில் நிர்வாகம்

இக் கோவிலும், விடுதிகளும், கோவில் சொத்துக்களும் வயிரவன் கோவில் நகரத்தார் சங்க செயற்குழு மற்றும் உப குழு உறுப்பினர்களைக் கொண்டு மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்டு நிர்வாகம் செய்து வருகின்றனர்.

## நகர விடுதி

எல்லா நகரக் கோவிலிலும் உள்ளது போல, இக் கோவிலிலும் நகர விடுதி உள்ளது. இது கோவிலின் தென்புறத்தில் கட்டப் பட்டுள்ளது.

விடுதியின் முகப்பு வாயிலில் கஜலெட்சுமியின் சுதைச்சிற்பம் உள்ளது. மர வேலைப்பாடு அமைந்த முகப்புள்ளது. முன் மண்டபத்தை அடுத்துக் கல்மண்டபம் உள்ளது. மண்டபத்தின் நடுவே விரிந்த மூன்று தாமரை மலர்கள் உள்ளன. அதன் பக்கங்களில் இறக்கைகளுடன் கூடிய பறக்கும் கந்தர்வப் பெண்கள் பன்னிருவர் பூக் குடலையிலிருந்து பூவைச் சொரிகின்றனர். கதவுகளில் உலோக மலர்க் குமிழ்கள் உள்ளன. கோவில் அலுவலகம் இங்கு செயல்படுகிறது.

மேற்கூரையில் உள்ள சன்னலின் அரைவட்ட மாடத்தில் தசாவதாரம், பஞ்ச பாண்டவர்கள், வளரொளீசுவரர், வடிவுடையம்மன் ஓவியங்கள் உள்ளன. ஓவியத்தின் மேலே பெயர் எழுதப்பட்டுள்ளது.

புதிதாக ஒரு விடுதிக் கட்டப்பட்டுள்ளது.

## ஊருணி

கோவிலின் எதிரே ஊருணி உள்ளது. அதன் மையத்தில் சதுரக் கேணி உள்ளது. ஊருணியைச் சுற்றிச் செம்பூராக் கற்களைக் கொண்டு உள்மதிற் சுவர் கட்டப்பட்டுள்ளது. இதனால் தண்ணீரின் தன்மை மாறாது. தண்ணீரில் பாசி பிடிக்காது. இதனைத் தெப்பக்குளம் என்றழைப்பர். பெரும்பாலான நகரத்தார் ஊர்களில் உள்ள தெப்பக் குளங்கள் செம்பூராக் கற்களைக் கொண்டே கட்டப்பட்டுள்ளன. பெரும்பாலும் தெப்பக்குளத்துத் தண்ணீரே அவ் ஊரின் குடிநீராகும். தெப்பக்குளத்தின் வெளிச்சுற்று மதில் வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. இம் மதிலில் விளக்கு வைக்க 212 மாடங்கள் உள்ளன. திருக்கார்த்திகையின் போது இம் மாடங்களில் விளக்கேற்றி வைக்க நகரத்தார்கள் இவ்வாறு அமைத்தனர்.

நாட்டரசன் கோட்டைக் கண்ணாத்தாள் கோவில் தெப்பக்குளத்தில் (சேங்கை என்றும் இதனை அழைப்பர்) திருக்கார்த்திகை அன்று மாடங்களில் விளக்கேற்றி வைப்பதை இன்றும் காணலாம்.

ஊருணிக்கு நீர்வர நந்திமுக உள்வாய் உள்ளது. நீரை வெளியேற்ற உள்மதிலின் வடபுறம் சாளரம் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு இவ் ஊருணி நீரே குடிநீராகும்.

## வயிரவர் தீர்த்தம்

இத் தலத்திற்குரிய தீர்த்தம் வயிரவர் தீர்த்தம் என அழைக்கப்படுகிறது. இது கோவிலுக்குத் தென்புறமும், நகர விடுதிக்குப் பின்புறமும் உள்ளது.

சித்திரை நட்சத்திரத்தில் இதில் நீராடுபவர்கள் பிள்ளைச் செல்வம் பெறுவர். கார்த்திகை மாதம் ஞாயிறு மற்றும் திங்கட் கிழமைகளில் நீராடினால் பாவம் தீரும்.

மார்கழி திருவாதிரையில் நீராடினால் நோயும் பகையும் நீங்கும்.

தைப்பூச நாளில் நீராடினால் நிறைந்த செல்வம் பெருகும்.

பங்குனிப் பௌர்ணமியில் நீராடினால் சிவகதி பெறுவர் என்று நம்புகின்றனர்.

## ஓவியங்கள்

இக் கோவில் கொடி மரத்திற்கு எதிரே உள்ள முதல் திருச்சுற்றின் வடமேற் கூரையில் வயிரவன் கோவில் புராண ஓவியங்கள் 37 உள்ளன. தென்மேற் கூரையில் இராமன் பிறப்பு முதல் அனுமன் சீதையைக் காண்பது வரையுள்ள இராமாயணக் காட்சிகள் 43 ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

## விழாக்கள்

சம்பா சஷ்டி விழா திருக்கார்த்திகையன்று தொடங்கி 21 நாட்கள் நடைபெறுகிறது. விழா நிறைவு நாளன்று நகரத்தார்களுக்கே உரிய 'பிள்ளையார் நோன்பு' விழா நடைபெறுகிறது. நகரத்தார்களுக்கு இழை எடுத்துக் கொடுத்து விருந்தளிக்கின்றனர்.

நகரக் கோவில்களில் இங்கு மட்டுமே பிள்ளையார் நோன்பு விழா சிறப்பாக நடைபெறுகிறது.

இவ் வாண்டு புதிதாகத் தேர் செய்யப்பெற்றுத் திருவிழா நடைபெறுகிறது. கீழச்சிவல்பட்டி திரு. சி.டி.எஸ். சிதம்பரம் செட்டியார் இத் தேரினைச் செய்து வழங்கியுள்ளார்கள்.

## கல்வி அறப்பணி

இக் கோவிலைச் சார்ந்த நகரத்தார் மாணவர்களுக்குப் பள்ளி மற்றும் கல்லூரிகளுக்குக் கட்டணம் கட்டியும், பாடநூல்கள் வாங்க உதவி செய்தும், பஸ்ஸுக்குக் கட்டணம் அளித்தும், இலவச உணவு வழங்கியும் கல்வி அறப்பணி செய்கின்றனர்.

## குடமுழுக்கு விழாக்கள்

இக் கோவிலின் கருங்கல் திருப்பணி இரத்தாச்சி ஆண்டு ஆவணி மாதம் 6ஆம் நாள் சனிக்கிழமை 1864ஆம் ஆண்டு தொடங்கப் பெற்று 1894ஆம் ஆண்டு பூர்த்தியானது. கண்டனூர் அ.நா.குடும்பத்தைச் சேர்ந்த நா.அ.ராம. இராமசாமி செட்டியார் இக் கோவிலைக் கட்ட வயிரவன்பட்டியிலேயே தங்கி உறுதுணையாய் இருந்து கட்டினார்கள்.

27-4-1894இல் முதல் குடமுழுக்கு விழா நடைபெற்றது.

1919, 1928, 1959, 1982, 1996 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்றன.

கண்டனூர் அ.நா.குடும்பத்தைச் சேர்ந்த நா.அ.ராம. இராமசாமி செட்டியார் பேரனும், காசிச் செட்டியார் மகனுமாகிய நா.அ.ராம.ராம.கா. இராமநாதன் செட்டியார் 12-2-1959இல் நான்காவது குடமுழுக்கு விழாவை நடத்தினார்கள்.

எழுவன் கோட்டைக் கணபதி ஸ்தபதியால் இக்கோயில் புதுப்பிக்கப்பட்டது.

இக் கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள் கீழ்க்கண்ட 57 ஊர்களில் வசித்து வருகின்றனர்.

1. அரண்மனை சிறுவயல்
2. அரிமழம்
3. அரியக்குடி
4. அலவாக்கோட்டை
5. க. அழகாபுரி
6. பி. அழகாபுரி
7. ஆத்தங்குடி
8. ஆ.தெக்கூர்
9. ஆவினிப்பட்டி
10. இராயவரம்
11. வி. லெட்சுமிபுரம்
12. உலகம்பட்டி
13. ஒக்கூர்
14. கடியாபட்டி
15. கண்டரமாணிக்கம்
16. கண்டவராயன்பட்டி
17. கண்டனூர்
18. கருங்குளம்
19. கல்லல்
20. காரைக்குடி
21. காளையார்மங்கலம்
22. கானாடுகாத்தான்
23. கீழச்சிவல்பட்டி
24. குருவிக்கொண்டான்பட்டி
25. குழிபிறை
26. கொத்தமங்கலம்
27. கோனாபட்டு
28. சிராவயல்

29. சிறுகூடல்பட்டி
30. உ.சிறுவயல்
31. சொக்கலிங்கம்புதூர்
32. தேவகோட்டை
33. தேனிப்பட்டி
34. நடராசபுரம்
35. நற்சாந்துபட்டி
36. நாச்சியாபுரம்
37. நாட்டரசன்கோட்டை
38. நெற்குப்பை
39. நேமத்தான்பட்டி
40. பலவான்குடி
41. பள்ளத்தூர்
42. பனங்குடி
43. பனையபட்டி
44. பாகநேரி
45. புதுப்பட்டி
46. புதுவயல்
47. பூலாங்குறிச்சி
48. மகிபாலன்பட்டி
49. மதகுபட்டி
50. மானகிரி
51. ஆ.முத்துப்பட்டணம்
52. மேலைச்சிவபுரி
53. வலையபட்டி
54. விராமதி
55. விரையாச்சிலை
56. வெற்றியூர்
57. வேந்தன்பட்டி

(நன்றி : நகரத்தார் கலைக்களஞ்சியம்)

ஊர்வைரவன் கோவிலார் ஊரோங்கு செட்டிமார்கள்
பேர்விளங்கும் பேர்புகழ்சேர் பேரோங்கும் - ஊரார்
வளரொளி நாதர் வடிவுடை அம்பாள்
வளமிகப் பெற்றுயர்வார் வாழ்வு

(நல்லறக் கவிராயர் சுப.நா. நாகப்பன்)

ஃஃஃ



# நேமம் கோவில்

நகரக் கோவில்கள் ஒன்பதில் நேமம் கோவிலும் ஒன்று.

'நியமம்' என்ற சொல்லே 'நேமம்' என மருவியது என்பர். நியமம் என்ற சொல்லுக்கு ஒழுங்கு, வழக்கம், முறை, வணிகக் குழு எனப் பல பொருளுண்டு. நேமத்தில் நகரத்தார்க்குரிய குலமரபுக் கோவில் இருப்பதால், நகரத்தாரைக் குறிக்கும் வணிகக்குழு என்ற பொருளே பொருத்தமுடையதாய்த் தோன்றுகிறது.

'திசை ஐந்நூற்றுவர்கள்' என நகரத்தார்கள் குறிக்கப்பட்டதாக மாத்தூர் கோவில் வரலாறு தெரிவிக்கிறது. பாண்டிய அரசன் வணிகக் குழுவாகிய நகரத்தார்களுக்கு இக் கோவிலைக் கொடுத்தான். எனவே இக் கோவில் 'நியமக் கோவில்'எனப் பெயர் பெற்றது. பின்னர் மருவி 'நேமம் கோவில்' ஆயிற்று.

நகரத்தாரின் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் நேமம் கோவில் மிகவும் பெரிய கோவிலாகும். இக் கோவில் சிற்பங்களும் பெரியவை. செட்டி நாட்டுச் சிற்பக் களஞ்சியமான இரணியூர் கோவில் சிற்பங்களைப் போல, இக் கோவில் சிற்பங்களும் சிறந்தவை.

பெரும் புலவர் பாடுவார் முத்தப்பர் இக் கோவிலைச் சார்ந்தவர். அவர் 'செயங்கொண்ட சோழீசர் சதகம்' என்ற நூலைப் பாடி இக் கோவிலின் சிறப்பை வெளிப்படுத்தியுள்ளார்.

இக் கோவில் இறைவனைச் 'சிரித்துச் செயங்கொண்டார்' எனப் போற்றியுள்ளார். இதன் வரலாறு வருமாறு :

தாரகாட்சன், வித்யுன்மால், கமலாட்சன் என்ற மூன்று அரக்கர்கள் பொன், வெள்ளி, இரும்பால் கோட்டை கட்டி வாழ்ந்து வந்தார்கள். தங்கள் கோட்டைகளுடன் அவர்கள் பறந்து சென்று, தேவர்களுக்குத் துன்பம் செய்தனர்.

சிவபெருமானிடம் தேவர்கள் தங்கள் துன்பத்தைத் தெரிவித்தனர். தங்களை அவ் அசுரர்களிடமிருந்து காக்குமாறு வேண்டினர்.

அசுரர்களைக் கொல்ல மேரு மலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், திருமாலை அம்பாகவும், அக்னியை அம்பின் கூராகவும் கொண்டு சிவபெருமான் அசுரர்களுடன் போர் புரிய இந்த இடத்திற்கு வந்தார்.

ஆனால் போர் புரியவில்லை

புன்னகை புரிந்தார்.

அதனால் அத் திரிபுரம் (மூன்று கோட்டைகளும்) எரிந்தது.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளான சிவபெருமானுக்கு அகத்தியரும், முனிவர்களும், தேவர்களும், மக்களும் இங்கு கோவில் கட்டி வழிபட்டனர் எனத் தலபுராணம் கூறுகிறது.

இதனையே 'சிரித்தே செயங்கொண்டார்' எனப் புகழ்ந்து பாடுவார் முத்தப்பர் பாடுகிறார்.

**ஓங்கு பத்மாசுரனைக் கண்(டு) ஓடி**
**ஒளிந்தார் விசயன்**
**வாங்கு தனுவால் பூசை வாங்கினான்**
**ஈங்(கு) இருக்கும்**
**தன்நியமச் சோழீசனார் செயங்கொண்டார்**
**என்றால்**
**என்ன செயங்கொண்டார் இவர்?**

என ஊனையூர் பாரதியார் பாடுவார் முத்தப்பரிடம் கேட்டார்.

அதற்கு முத்தப்பர்,

**என்ன செயங்கொண்டார் இவர்?**
**என்றான் முப்புரத்தைச்**
**சொ(ர்)ன்ன மயமாய்ச் சமைத்த**
**சோழீசர் - பின்னும்**
**சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக்**
**கண்ணால்**
**எரித்துச் செயங்கொண்டார் இவர்**

எனப் பதில் கூறினார்.

*இந் நிகழ்வை நிகழ்காலக் கவிஞராகிய திரு.சித. சிதம்பரம்,*

சடையை விரித்துச் சூலமும் ஏந்தி நடமாடிப்
படையை எதிர்த்துப் பத்மாசூரன் தலைமீது
விடையை முறித்து விதியை அளித்த சோழீச
படையாய் சிரித்துத் திரிபுரம்
எரித்துச் செயங்கொண்டான்!

*என்று பாடுகிறார்.*

(நன்றி : நகரக் கோவில் ஒன்பது திருப்பதிகம்.)

*பாடுவார் முத்தப்பரின் சிறப்பை,*

அயன் கண்டறியா மால்கண்டறியா
அடிமுடிகள்
நயங் கண்டறிவார் பாடுவார்
அய்யா முத்தப்பர்
மயன் கண்டபோலே மாளிகை கண்டார்
விலாசத்தில்
செயங்கொண்டார் மேல் சதகம் பாடிச்
செயங்கொண்டார்!

*எனக் கவிஞர் சித.சிதம்பரம் பாடுகிறார்.*

(நன்றி : நகரக் கோவில் ஒன்பது திருப்பதிகம்.)

*நேமத்தில் செயங்கொண்டார் ஏன் அமர்ந்தார் என்ற வினாவிற்கு மேற்படிக் கவிஞர் இவ்வாறு விடை கூறுகிறார்.*

காமனை எரித்த கண்ணுதலானைக்
கைமழுவேந்தி
எமனை உதைத்தே எண்ணிரண்டாண்
டாய் இளமைகொடுத்து
மாமணி மாடக்கோயில் விளங்கி
மல்கிவளர்
நேமம் அமர்ந்தான் நீறு புனைந்தான்
செயங்கொண்டான்!

(நன்றி : நகரக் கோவில் ஒன்பது திருப்பதிகம்.)

*இத் தல இறைவன் மிகச் சக்தி வாய்ந்தவர் என்பதை, "இங்கு களவு போன சிலைகள் எவ்வித விக்கிணமும் இன்றி 21 நாளில் திரும்பி*

வந்ததே போதிய சான்றாகும்" எனக் கூறுகிறார் தேவகோட்டை சேவுகன் அண்ணாமலை கல்லூரி நிறுவனர் திரு.உ.ராம.மெ.சுப.சேவு. அண்ணாமலை செட்டியார்.

(நன்றி : நேமம் கோவில்)

இத் தலத்திற்கு நந்திபுரம், மதுநதிபுரம், செயங்கொண்ட சோழபுரம், குலசேகரபுரம் என வேறு பெயர்களும் உண்டு.

நியமம் என்ற சொல் நகரம் என்ற பொருளில் ஓவு கண்டன்ன இரு பெரு நியமம் என மதுரைக் காஞ்சியில் குறிக்கப்படுகின்றது. கல்வெட்டிலும் நியமம் என்ற சொல் காணப்படுகிறது.

"தமிழ் பிராமிக் கல்வெட்டிலும் இச் சொல் காணப்படுகிறது. சான்றாக, 'வெள்ளறை நிகமது', எனவும், 'வெள்ளறை நிகமத்தாரை' எனவும் குறிக்கக் காண்கிறோம். இது வெள்ளறையைச் சார்ந்த வணிகக் குழுவை (நகரத்தாரை)க் குறிக்கின்றது. எனவே, மாங்குளம் கல்வெட்டில் நிகமம் என்ற சொல் வணிகக் குழு என்ற பொருளில் எடுத்தாளப்பட்டுள்ளதை அறிகிறோம்" என விளக்குகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

நியமம் என்ற பெயரில் தஞ்சைப் பகுதியிலும், கொங்குப் பகுதியிலும் ஊர்கள் உள்ளன.

நியமம் என்ற சொல்லுக்கு 'வழிபாடு என்ற விதிமுறைகளில் வழுவாது ஒழுகல்' எனத் திவாகர நிகண்டு பொருள் தருகிறது.

நியமம் என்ற சொல் கோவில் என்ற பொருளையும் தரும். 'உவணச் சேவல் உயர்ந்தோன் நியமும்' எனச் சிலப்பதிகாரத்திலும், 'சித்தா விளக்கின் செழுங்கலை நியமம்' என மணிமேகலையிலும் கோவில் என்ற பொருளில் நியமம் என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

"இவ் விதம் பல்வேறு பொருள்களில் நியமம் என்ற சொல் எழுத்தாளப்பட்டிருந்தாலும், வணிக நகரைக் குறிக்கவே பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளது" என ஆய்ந்து முடிவு கூறுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

சோழ மன்னன் முதலாம் இராசராசனின் விருதுப் பெயர்களில் 'செயங்கொண்டான்' என்பதும் ஒன்றாகும். அவ் அரசன் இங்கு சிவாலயத்தை எழுப்பியதால், இத் தல இறைவன் 'செயங்கொண்ட சோழீசர்' என்றும், இவ் ஊருக்குச் 'செயங்கொண்ட சோழபுரம்' எனவும் பெயர் விளங்கியது. ஆனால், இன்று ஊரின் பெயர் மாறி விட்டது.

பின்னர் குலசேகர பாண்டியன் காலத்தில் இவ் ஊர், 'குலசேகரபுரம்' என அழைக்கப்பட்டது. பாண்டியர்கள் கல்வெட்டில் 'கேரள சிங்கவளநாட்டு தேனாற்றுப் போக்கு நேமம்' என்றும், 'கேரள சிங்கவளநாட்டு நேமம் ஆகிய குலசேகரபுரம்' என்றும், குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து, இவ் ஊர் குலசேகரபுரம் என அழைக்கப்பட்டதை அறிகிறோம். இப் பெயரும் இன்றில்லை.

தேனாற்றுப் போக்கில் இவ் ஊர் அமைந்துள்ளதால், 'மதுநதிபுரம்' என்ற பெயராலும் இவ் ஊர் அழைக்கப்பட்டது. இப் பெயரும் இன்றில்லை.

நேமம் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமை உடையது. இதனை இப் பகுதியில் கிடைத்துள்ள முதுமக்கள் தாழிகளும், மட்பாண்டங்களும் உறுதி செய்கின்றன. இடிந்த மதிற்சுவர்களும், உயர்ந்த மேடுகளும் இங்கே சிதைந்து காணப்படுகின்றன. அதனால் இப் பகுதி 'கோட்டைமேடு' என வழங்கப்படுகிறது.

இப் பகுதியில் நேமராசன், கண்டன் உதயஞ்செய்தான் என்ற அரசர்கள் கோட்டை கட்டி வாழ்ந்து அரசாண்டதாகவும், சௌந்திர பாண்டியன் என்ற பாண்டிய அரசனால் இவர்கள் கொல்லப்பட்டதாகவும் செவிவழிச் செய்தி வழங்கி வருகிறது.

நேமத்திற்கு அருகில் உள்ள பழைய ஆத்தங்குடியில் 'மேலேசுவரர்' என்ற சிவாலயம் இருந்ததற்கான தடயங்கள் கிடைத்துள்ளன. அதேபோல் பெருமாள் கோவில் ஒன்று இருந்ததற்கான தடயங்களும் கிடைத்துள்ளன.

மேலேசுவரர் என்ற லிங்கமும், சக்கரத்தாழ்வார், திருமகள் முதலிய செப்புத் திருமேனிகளும் நேமம் கோவிலில் வைக்கப்பட்டு இன்றும் வழிபாட்டில் உள்ளதிலிருந்து இதனை அறிகிறோம்.

விக்கிரம பாண்டியன், சுந்தர பாண்டியன், குலசேகர பாண்டியன் காலத்துக் கல்வெட்டுக்கள் நேமத்தில் கிடைத்துள்ளன. ஆனால், சிவாலயத் திருப்பணியின்போது அவை சிதைந்து விட்டது.

அழகு நாச்சியம்மன் கோவிலிலிலும், சேவுகப் பெருமாள் அய்யனார் கோவிலிலும் சில கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

'கேரளசிங்க வளநாட்டு அதளையூர் நாட்டு தேனாற்று உடையார் செயங்கொண்ட சோழீசுவரர்' என ஒரு கல்வெட்டில் இறைவன் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.

மற்றொரு கல்வெட்டில் 'கேரளசிங்க வளநாட்டு நியமத்து உடையார்' எனக் குறிக்கப்பட்டுள்ளது.

'திரு காம கோட்ட நாச்சியார்' என இறைவி பெயர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

இக் கோவில் 'செயங்கொண்டசோழீசுவர நாயனார் கோவில்' எனக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

வரலாற்றுச் சிறப்புடைய செப்பேடு ஒன்று நேமத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இச் செப்பேடு நேமம் நாட்டுச் சேர்வையான ஆற்காடு குழ. சுப்பையா சேர்வையிடம் உள்ளது. அது தெரிவிக்கும் செய்தி வருமாறு :

"இதற்கு அடியழும்பு செய்கிறவர்கள், இராமேசுவரத்திலே ஏழு காராம்பசுவைக் கொன்ற பாவத்திலே போகக்கடவது." எனச் செப்பேட்டில் உள்ளது.

கி.பி. 1758இல் மூவேந்திரராயர், விருப்பாச்சிராயர், பவுத்திரராயர் ஆகிய மூவரும், சலியாத கண்டன், தளவாய் முத்துச்சாமி சேர்வை ஆகியோரைத் தம்மோடு கூட்டி வந்து அதளை நாட்டில் ஆற்காடு, நேமம், ஆத்தங்குடி, தளவான்குடி, வெளுவூர், குன்றக்குடி, சிறுவயல், பாதரக்குடி, சூரக்குடி முதலிய கிராமங்களில் உள்ள கோவில், குளங்களில் முதல் மரியாதை, திருவிழாக்களில் முள்துப்பட்டி போட்டு மரியாதை செய்வித்தல்.

"இவ் வகையினர் நேமம், குன்றக்குடி கோவில்களில் இம் மரியாதையை இன்றும் பெற்று வருகின்றனர்" தகவல் திரு. மா. சந்திரமூர்த்தி.

நன்றி : நேமம் கோவில்

## நேமம் புகழ்பாடும் நூல்கள்

பாடுவார் முத்தப்பர் பாடிய 'செயங்கொண்டார் பிள்ளைத்தமிழ்', 'செயங்கொண்டார் சதகம்', 'செயங்கொண்டார்

பதிற்றுப்பத்தந்தாதி, ஊசல் மற்றும் பல பிரபந்தங்கள்' முதலிய நூல்களாகும்.

நாராயண நடராசன் செட்டியார் எழுதிய 'நேமம் கோவில் வரலாறு' இவை தவிர 'வணிகமண்டல சதகம்', 'தன வணிகர் தாலாட்டு', 'வணிக தசாங்கம்', 'இளசைப் புராணம்', 'வைரவன் கோவில் புராணம்', 'இலுப்பைக்குடிப் புராணம்' போன்ற சிற்றிலக்கியங்களிலும் இவ் ஊரைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

சுப்பிரமணியப் பண்டாரத்தின் வேண்டுகோளை ஏற்று, நியமத்தைச் சேர்ந்த அழகப்ப செட்டியார் மகன் முத்தப்ப செட்டியார் பழமொழிகளைக் கொண்டு நூறு பாடல்களைச் 'செயங்கொண்டார் வழக்கம்' என்ற பெயரில் பாடியுள்ளார்.

இந் நூலில் உள்ள விநாயகர் வணக்கப் பாடல் வருமாறு :

சீர்பொருத்துத் தென்நியமச்
செயங்கொண்ட சோழீசர்
திருப்பேர் வாழ்த்தி

பார்பொருந்தும் குருவிருத்தப்
பாமாலை தனில் உகப்
பழமைச் சொல்லை

ஏர்பொருந்தும் செந்தமிழால்
யான்பாடப் புவியில் உள்ளோர்
இசைந்து கேட்கக்

கார்பொருந்தும் துதிக்கரத்தான்
வெயில் உகந்த கணபதிதாள்
காப்புத் தானே.

இது அந் நூலின் காப்புச் செய்யுளாகும்.

## கோவில் அமைப்பு

வடமேற்குத் திசையில் நேமம் கோவில் கிழக்கு முகமாய் அமைந்துள்ளது. இக் கோவில் கருவறை, இடைநாழி, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம், திருச்சுற்று, திருச்சுற்று மேல்பத்தி, திருச்சுற்று மாளிகைப்பத்தி, நடராசர் சன்னதி, பள்ளியறை, அம்மன் சன்னதி, நந்தி, பீடம், கொடிமரம், வெஞ்சன

அறை, வாகன அறை, சுவாமி கோபுரம், அம்மன் கோபுரம், இராச கோபுரம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது.

விநாயகர், சுப்பிரமணியர், கஜலெட்சுமி, சண்டிகேசுவரர், பைரவர், சூரியன், சந்திரன் ஆகிய தெய்வங்களுக்குத் தனித்தனி சிறு கோவில்களும் உள்ளன.

நவக்கிரகங்கள், கன்னிமூல கணபதி, சோமாஸ்கந்தர், மேலேஸ்வரர், அம்மன், செயங்கொண்ட விநாயகர், விசுவநாதர், துர்க்கை, நேமம் காளி முதலிய சன்னதிகள் உள்ளன.

நால்வர் சிலைகளும், அய்யனார், பூரணி, புஷ்கலை ஆகிய கிராம தெய்வங்களின் கற்சிலைகளும் உள்ளன.

சிறிய, பெரிய அம்மன் கோபுரங்கள், மூன்று நிலை கொண்ட சுவாமி கோபுரம், ஐந்து நிலை கொண்ட இராசகோபுரம், நேமம் காளி பீடம், சோழா ஊருணி, ஊருணி விநாயகர் ஆலயம், பழைய நகர விடுதி, விரிவுபடுத்தப்பட்ட புதிய நகர விடுதி, செட்டி ஊருணி முதலியன உள்ளன.

இக் கோவில் கிழக்கு நோக்கிய சன்னதியை உடையது. இறைவன் செயங்கொண்ட சோழீசர். இறைவி சௌந்தர நாயகி.

கோவில் கருவறையை அரைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. கருவறையைச் சுற்றியுள்ள புறச்சுவர்கள் கட்டட வேலைப்பாடு மிக்கவை. சிற்ப இலக்கணத்தைப் பின்பற்றி அமைக்கப்பட்டவை.

கருவறையின் மேல்மட்டமும், அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன்மண்டபம் முதலியனவும் வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளன.

உப பீடம், அதிட்டானம், சுவர், பிரஸ்தரம், கிரிவலம், சிகரம், ஸ்தூபி என ஏழு அமைப்புகளைக் கொண்டு இக் கோவில் விமானம் கம்பீரமாக உள்ளது.

உப பீடத்தில் யாளியின் உருவம் சித்தரிக்கப்படவில்லை. சிம்ம முகம் சித்தரிக்கப்பட்டுள்ளது. உப பீடத்தில் மூன்று உறுப்புகளையும் ஒரே கல்லில் செதுக்கி ஆங்காங்கே இணைத்துள்ளனர்.

அதிட்டானத்தை இரு பகுதிகளாகப் பிரித்து (உபானம் முதல் பத்மம் வரை ஒரு பகுதி, குமுதம் முதல் மகா பட்டிகை வரை

மற்றொரு பகுதி) இரு பகுதிகளையும் தனித்தனிப் பெரும் கற்களைக் கொண்டு மயிரிழை இழைப்பில் பொருத்தியுள்ளனர். இது வியப்பாய் உள்ளது.

"இதை நகரத்தார் காலக் கட்டடக் கலைப்பாணியின் குறிப்பிடத்தக்க அம்சமாகக் கருதலாம். இவ் வகையை 'அம்போஜ சேகரம்' என்றும், 'புஷ்ப புஷ்கலம்' என்றும் சிற்ப நூல்கள் குறிப்பிடுகின்றன. நேமம் கோவில் அதிட்டானம் ஏனைய நகரக் கோவில்களான இலுப்பைக்குடி, மாத்தூர், பிள்ளையார்பட்டி ஆகிய கோவில் அதிட்டானத்தைப் போன்ற அமைப்புடையது.

இவ் விதம் அதிட்டானத்தை வர்க்க பேதத்துடனும், அதிட்டானத்தின் முகப்பத்திரத்தை நுட்பமான வேலைப்பாடு களுடனும் சீரிய முறையில் சித்தரித்துள்ள எழுவன்கோட்டை சிற்பியின் கைவினையும், நகரத்தாரின் கட்டடக் கலை வளமும் இங்கு கண்டு இன்புறத்தக்கவை" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

**(நன்றி : நேமம் கோவில்)**

கருவறையின் தெற்குப் பகுதியில் சடை மகுடமுடைய முனிவர்கள், சின் முத்திரை காட்டி நிற்கும் இளந்துறவிகள், மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், சீறும் சிம்மத்தைக் குறுவாளால் குத்தி அடக்கும் மறவன், ஆடல் மகள், தாருகாவனத்து முனிவர்களின் ஆணவத்தை அடக்கிய மோகினி முதலிய சிறிய சிற்பங்கள் உள்ளன. இவை கற்பனையும், கலைத்திறனும் மிகுந்து காணப்படுகின்றன.

"கற்பனையும், கலைத்திறனும் மிகுந்த பெரும் சிற்பக் காவியங்களை நேமத்தில் தோற்றுவித்த எழுவன்கோட்டைச் சிற்பிகள், அதே உணர்வோடும், ஊக்கத்தோடும் 20 செ.மீ. உயரமுள்ள சிற்றிலக்கியங்களை ஒத்த இச் சிற்பங்களைப் படைத்துள்ள பாங்கு அவர்களது ஆற்றல்களை வெளிப்படுத்தி நிற்கிறது. இவை நகரத்தார் கலைப்பாணியை அளவிட சிறந்த கருவிகளாக அமைகின்றன" என வியந்து பாராட்டுகிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : நேமம் கோவில்)**

கருவறையின் தெற்கு, வடக்கு, மேற்கு ஆகிய மூன்று திசைகளிலும் தேவகோட்ட மாடங்கள் உள்ளன. இதில் தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், பிரமன் முதலிய தெய்வ உருவங்கள் காணப்படுகின்றன.

தேவகோட்ட மாடங்களின் இரு கோடிகளிலும் உள்ள தூண்களில் கொடிக்கருக்குகள், அடைப்புக் கருக்குகள், வாலைச் சுருட்டி நிற்கும் சிம்மம், பாய்ந்து நிற்கும் யாளி, மகரம், கஜேந்திரமோட்சம், வில்லேந்திய இராமன் ஆகிய புடைச்சிற்பங்கள் உள்ளன.

கருவறையை மூடும் கூரைப்பகுதியின் உத்தரப் பகுதியில் சிவ கணங்கள் உள்ளன. கூரையின் முகப்பில் வாளேந்திய நிலையிலும், சங்கூதும் நிலையிலும், வில்லும், அம்பும் பற்றிய நிலையிலும் சிறிய சிவ கணங்கள் உள்ளன.

கபோதக் கூடுகளில் பல்வேறு அழகிய சிற்பங்கள் உள்ளன. அவை வருமாறு :

இடம்புரி விநாயகர், ஆறுமுகன், முனிவர், துறவி, சம்ஹாரமூர்த்தி, மானுக்கு உணவு கொடுக்கும் அண்ணல், உமையின் ஊடல் தணிக்கும் சிவன், பைரவர், யானையின் தோல் உரித்தாடும் பெருமான், பகீரதன், அய்யனார், திருமால், வேணுகோபாலன், மோகினி, சிவகாமி, அக்கினி வீரபத்திரர், நடராசர், கங்காதரமூர்த்தி, சந்திரசேகரமூர்த்தி, பிச்சாடனர், அண்ணாமலையார், அர்த்தநாரீசுவரர், திருமகள், நிலமகளுடன் திருமால், சங்கரநாராயணன், இராமபிரான், இலக்குவன், சீதை, சரசுவதி, சாவித்திரியுடன் நான்முகன், திரிபுரசம்ஹாரமூர்த்தி, ஏகபாதமூர்த்தி, கங்காளிமூர்த்தி, காளி, விஷ்ணு, துர்க்கை, ஊர்த்தவதாண்டவர், கண்ணன், சண்டேசுவரர், சிங்கபிரான், நரசிம்மர், நந்தி, காரைக்கால் அம்மையார், மாணிக்கவாசகர், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மன்மதன், அடியார், திரிபுரசுந்தரி, மீனாட்சி திருமணம், கெஜலட்சுமி முதலியனவாகும்.

கருவறைக்குமேல் உள்ள விமானம் மூன்று தளங்களை உடையது. ஒவ்வொரு தளத்திலும் தெய்வ உருவங்கள் பல உள்ளன. உலோக ஸ்தூபி உள்ளது.

கருவறையின் முன்புறம் அர்த்த மண்டபம் உள்ளது. வடக்கே துர்க்கையும், தெற்கே விநாயகரும் முக பத்திரக் கோட்டத்தில் உள்ளனர்.

இவற்றை அமைப்பதற்காக அடிபீடத்தைத் திட்டமிட்டு ஆங்காங்கே கபோதக வரியிலேயே அமைத்துள்ளனர்.

"பல்லவர், சோழர், பாண்டியர், விஜயநகர மன்னர்கள் காலத்தில் கோவில்களில் காண முடியாத இத்தகைய அமைப்பினை நேமம் கோவிலில் காண முடிகிறது. நகரத்தார் காலத்திய கட்டடக் கலைப்பாணியில் இதனை ஒரு புதிய அம்சமாகவே கருத வேண்டும். இது அக் காலக் கட்டடக்கலை வளர்ச்சியினை அடையாளம் காண உதவுகிறது" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

அர்த்த மண்டபத்திற்கு முன்பு மகா மண்டபம் உள்ளது. இதன் தெற்கிலும், கிழக்கிலும் படிகளுடன் கூடிய இரு வாயில்கள் உள்ளன.

இம் மண்டப விதானத்தை நான்கு அணியொட்டித் தூண்கள் தாங்கி நிற்கின்றன.

இம் மண்டபத்தின் வடக்கே நடராசர் சன்னதி உள்ளது.

இம் மண்டபத்தின் வடக்கிலும், தெற்கிலும் உற்சவமூர்த்திகளை வைக்கும் மேடை உள்ளது. மேடையின் கீழ்ப்பகுதி கருவூலமாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

"நேமம் கோவில் முழுவதும் வெள்ளைக் கல்லால் செதுக்கப்பட்டுள்ள இச் சிற்பக் காவியம் எழுவன்கோட்டை சிற்பிகளின் சிற்றுளியின் ஆற்றலைக் காட்டுவனவாக அமைகின்றன. வயிரவன்பட்டி மலைப்பகுதியில் இருந்து கொண்டு வரப்பட்ட இக் கற்களைக் கொண்டு மகத்தான முறையில் இக் கோவில் கருவறையையும், அர்த்த மண்டபத்தையும், மகா மண்டபத்தையும் எழுப்பியுள்ள நகரத்தார்களின் சாதனையை எவ்வளவு போற்றினாலும் தகும். நகரத்தார் கலைப்பாணி தோன்றுவதற்கு இத்தகைய மாபெரும் சாதனைகள் அடித்தளமாக அமைந்து விளங்கக் காண்கிறோம்" என மகிழ்ந்து பாராட்டுகிறார் திரு.மா.சந்திரமூர்த்தி,

(நன்றி : நேமம் கோவில்)

நடராசர் சன்னதியில் நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர் உலோகச் சிலைகள் வழிபாட்டில் வைக்கப்பட்டுள்ளன.

மகா மண்டபத்தின் முன்புறம் முக மண்டபம் உள்ளது. இங்கிருந்து சுவாமியையும், அம்பாளையும், பள்ளியறையையும் வணங்கும்படி நன்கு திட்டமிட்டுக் கட்டப்பட்டுள்ளது. இம் மண்டபத்தை பன்னிரண்டு கால்கள் தாங்கி நிற்கின்றன.

தெய்வங்களைச் சுற்றிவரும் வகையில் இக் கோவில் பிரகாரம் உள்ளது. இரு பத்திகளாகப் பிரிந்து விளங்கும் இப் பிரகாரத்தைச் சித்திரக்கால் தூண்கள் அலங்கரிக்கின்றன.

அம்மன் சன்னதிக்கு எதிரே உள்ள வாயிலின் இரு பக்கங்களிலும் உருட்டுக் கட்டைகளைத் துதிக்கையில் தூக்கிய நிலையில் இரு களிறுகள் கம்பீரமாக உள்ளன. யானைகள் இயற்கையாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

சுவாமி சன்னதியிலும் இத்தகைய யானைகள் வடிக்கப் பட்டுள்ளன.

திருச்சுற்றுப் பத்தித் தூண்களில் பல்வேறு தெய்வச் சிற்பங்களைக் காணலாம். அவை வருமாறு :

சிவன், பிச்சாடனர், அனுமன், அப்பர், தண்டாயுதபாணி, யாளி, புருஷாமிருகம், இராமன், அக்னி வீரபத்திரர், வணங்கிய நிலையில் நகரத்தார், பூதகணம், சிம்மம், வீரன், லிங்கத்திற்குப் பால் சொரியும் பசு, பெருமாள், நரசிம்மர், மயில்வாகனன், முனிவர், இரட்டைக்கிளி, உமையொருபாகன், பிருங்கி முனிவர், லிங்கம், குறமகள், கருடாழ்வார், அன்னப்பறவை, துவாரபாலகர், யானை, மாணிக்கவாசகர், சம்பந்தர், கும்பக்கலசம், அம்மன், இடும்பன், சனகாதி முனிவர், சந்திரசேகரமூர்த்தி, தெய்வானை, கோமாளி, கலைக்கோட்டு மாமுனிவர், கலைமான், கழுவேறும் இரு சமண முனிவர்கள், வாமனன், வேணுகோபாலன், பண்டாரம் முதலியனவாகும்.

சைவ-வைணவ பேதமின்றி இவை அமைக்கப்பட்டுள்ளன.

வாலி-சுக்ரீவன் போரிடும் சிற்பமும், ரதி-மன்மதன் சிற்பமும், நின்ற சீர் நெடுமாறன் என்ற கூன் பாண்டியனால் கழுவேற்றப்பட்ட இரு சமண முனிவர்களின் சிற்பமும், பறவைகள், விலங்குகள் முதலிய சிற்பங்களும் கண்டு மகிழத்தக்க வகையில் வடிக்கப் பட்டுள்ளன.

இக் கோவிலை வலம்வர நீளமான அகலப்பாதை உள்ளது. இதனையொட்டித் திருச்சுற்று மாளிகைப் பந்தி உள்ளது. இதில் 65 தூண்கள் உள்ளன. இந்த 65இல் 6 தூண்கள் கர்ணக்கால் தூண்களாகும். 48 அணியொட்டிக் கால்களும் உள்ளன. இதன் தாய்க்கால் பிள்ளைக் காலோடு இணைந்துள்ளது. தாய்காலின் சதுரப்பட்டையின் மீது அழகிய தெய்வச் சிற்பங்கள் பல அர்த்த சித்திரமாக அமைக்கப்பட்டுள்ளன.

"இங்குள்ள கம்பீரமான கர்ணக்கால் தூண்களும், சிற்பங்கள் நிறைந்த சித்திரக்கால் தூண்களும், நகரத்தாரால் போற்றி வளர்க்கப்பட்ட கட்டடக்கலையை அடையாளம் காட்டும் வகையில் தனித்தன்மையுடன் விளங்கக் காண்கிறோம். திருக்கோவில்களை முழுமையாகத் திருப்பணி செய்ய, பெருமளவில் திட்டமிட்டு, அத் திட்டத்தை உரிய கலைஞர்களையும், அறிஞர்களையும் கொண்டு ஊக்குவித்து முறையாகச் செயல்படுத்தும் நாட்டுக்கோட்டை நகரத்தாரின் ஆற்றலை இவை தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன" என்று பாராட்டுகிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

**(நன்றி : நேமம் கோவில்)**

லிங்க வடிவில் தனிச் சன்னதியில் மேலேசுவரர் உருவம் உள்ளது. இதன் வலப்புறம் மேலேசுவரியின் நின்ற கோலம் உள்ளது. 1907இல் நடந்த முதல் திருப்பணியின்போது இத் தேவியை நகரத்தார்கள் பிரதிஷ்டை செய்தனர். வலப்புறத்தில் தண்டாயுதபாணியும், இடப்புறத்தில் விநாயகரும் உள்ளனர்.

லிங்க வடிவ விசுவநாதர் முன் நந்தி உள்ளது. இடப்புறத்தில் சிறிய விநாயகரும், வலப்புறத்தில் விஷ்ணு துர்க்கையும் உள்ளனர். துர்க்கையின் சிலை பழமையானது. துர்க்கையின் வலக்கையில் ஆழியும், சங்கும் உள்ளன. இடக்கை முத்திரை காட்டுகிறது. பல்வேறு அணிகலன்களை துர்க்கை அணிந்துள்ளாள்.

இக் கோவிலின் பழமையை உறுதிப்படுத்த இச் சிலை சான்றாக உள்ளது.

நல்ல நிலையில் இருந்த இச் சிலையை நகரத்தார்கள் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வருகின்றனர்.

"இச் சிலை சோழ மன்னர்களால் தோற்றுவிக்கப்பட்ட நேமம் பழைய சிவாலயத்தில் வடதிசை அர்த்தமண்டப தேவகோட்டத்தை அலங்கரித்த சிலையாக இருக்கலாம் எனத் துணியலாம்" என ஆராய்ந்து கூறுகிறார். திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : நேமம் கோவில்)**

நான்கு கைகளுடன் வில்லேந்திய வேலர் உள்ளார். ஆயுதங்களைச் சிலையில் காட்டாமல், கைகள் காட்டும் முத்திரையிலேயே பாவனையை வெளிப்படுத்தும் விதமாகச் சிலை வடிக்கப்பட்டுள்ளது.,

"காவிரிப்பூம்பட்டினத்துச் சாயக்காட்டு சிவன் கோவில் வேலவரின் உலோகத் திருமேனியுடன் ஒப்பிடத்தக்கது. நேமம் பழைய சிவாலயத்தை அலங்கரித்த சிற்பங்களின் இதுவும் ஒன்று. சோழர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட இக் கோவில், பிந்தைய பாண்டியர்களின் திருப்பணியைப் பெற்றுத் திகழ்ந்தது என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குவது இக் கற்சிலை ஒன்றே ஆகும். நகரத்தாரின் திருப்பணியின்போது வில்லேந்திய வேலரின் இரு தேவியரையும் செய்து வைத்துள்ளனர்" எனத் தெரிவிக்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

மதிலை வட்டமாகத் துளைத்து, அதன்கீழ் பீடம் வைத்து, திரிசூலம், வேல், வெட்டரிவாள் முதலியன சாத்திக் காளியை வழிபடுகின்றனர்.

நின்ற கோலத்தில் நான்கு கைகளுடன் பைரவர் உள்ளார். அவரின் இடப்புறம் நாய் வாகனம் உள்ளது.

"இப் பைரவரின் உருவ அமைப்பும், பழமையான தோற்றமும், உச்சப் பார்வையும், அணிகளின் தன்மையும், ஆயுதங்களின் அமைப்பும் கொண்டு, இதனைப் பிற்காலப் பாண்டியர் சிற்பமாகக் கருதலாம். குன்றக்குடி குடவரையில் காணப்படும் பைரவர் உருவத்துடன் நேமம் பைரவர் உருவம் ஒப்பிடத்தக்கது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

வழவழப்பான கருங்கல்லில் பள்ளியறை கட்டப்பட்டுள்ளது. சிற்பங்கள் இல்லை. கூரை முகப்பில் கஜலட்சுமி உள்ளது. மரவேலைப்பாட்டில் கண்ணாடித் துண்டுகள் பதிக்கப்பட்ட பள்ளியறைக் கட்டில் உள்ளது. பள்ளியறை அம்மனின் உருவச்சிலை அமர்ந்த நிலையில் பள்ளியறை ஊஞ்சலில் உள்ளது. திருவனந்தல், காலசந்தி, அர்த்தசாமம் ஆகிய நேரங்களில் பள்ளியறை திறக்கப்பட்டு பூசை நடைபெறுகிறது.

கோவிலின் கீழ்த்திசை வாயிலில் மூன்று நிலைகளை உடைய சுவாமி கோபுரம் உள்ளது. அது வெள்ளைக் கல்லும், செங்கல்லும் கொண்டு எழுப்பப்பட்டுள்ளது. கோபுரத்தில் பல்வேறு தெய்வச் சிற்பங்கள் உள்ளன.

நேமம் கோவில் நகரத்தார்கள் முந்தைய திருப்பணியின் போது சுவாமிக்கும், அம்மனுக்கும் கோபுரங்களை எழுப்பினர்.

1991இல் நடைபெற்ற குடமுழுக்கு விழாவில் இராசகோபுரம் கட்டிக் குடமுழுக்குச் செய்தனர். இராச கோபுரத்தில் ஐந்து நிலைகள் உள்ளன.

இத் திருப்பணியைக் காரைக்குடி திரு. பெ. சொக்கலிங்கம் செட்டியார் மற்றும் நேமம் கோவில் நகரத்தார்கள் செய்து முடித்தனர்.

## அம்மன் சன்னதி

இங்குள்ள இறைவியின் பெயர் சௌந்தர நாயகி அம்மன். சுவாமி சன்னதி முக மண்டபத்தின் வடக்கே இச் சன்னதி உள்ளது. அம்பாள் தென்திசையை நோக்கி உள்ளாள்.

அம்பாள் தாமரைப் பீடத்தில் இரு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளாள். பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள்.

1907இல் நடைபெற்ற முதல் திருப்பணியின் போது நகரத்தார்கள் புதிய அம்பாளைப் பிரதிஷ்டை செய்தனர்.

நேமம் பழைய சிவாலயத்தில் இருந்த தேவியைத் தற்போது அம்மன் சன்னதிக்கு மேற்கே காணலாம்.

அம்மன் சன்னதி வாயிலின் மேல் உள்ள கூரையின் முகப்பில் கஜலெட்சுமியின் உருவங்கள் உள்ளன. கூரைக் கபோதகங்களின் இடை இடையே அம்மனின் பல்வேறு வடிவங்கள் உள்ளன.

பிராமி, மகேஸ்வரி, இந்திராணி, வைஷ்ணவி, கௌமாரி, வராகி, சாமுண்டி எனச் சப்த மாதர்களின் உருவங்கள் உள்ளன.

வாயிலின் இரு புறமும் துவார சக்திகள் உள்ளனர்.

வெள்ளைக் கல்லால் இரு தளங்களாக அம்மன் கோவில் விமானம் கட்டப்பட்டுள்ளது. இதில் பதுமைகளையும், சிவ கணங்களையும், இறை உருவங்களையும் அமைத்துள்ளனர்.

## நேமம் காளி

இங்கு புகழ் பெற்ற தெய்வம் நேமம் காளி. இப் பகுதி மக்களிடமும், நகரத்தார்களிடமும் நீங்காத இடம் பெற்ற தெய்வம் நேமம் காளி.

இங்கு காளிக்கு உருவமில்லை. சக்தி பீடமாக அமைக்கப்பட்டுள்ளது. இப் பீடம் திருமதிலின் இரண்டாம் பிரகாரத்தின் பின்புறம் உள்ளது.

இக் காளி மிகவும் கோபமுடையவள் என இப் பகுதி மக்கள் கூறுகின்றனர். அதனால் உச்சி வேளையில் பெண்களும், குழந்தைகளும் இப் பீடம் பகுதியில் செல்வதில்லை.

இக் காளிக்கு வைராவிகள் பூசை செய்கின்றனர்.

## காளி பூசை

நேமம் காளிக்கு நேர்த்திக் கடனாகக் கிடாயை வாங்கி வைராவியிடம் கொடுப்பர். அக் கிடாயைக் குறிப்பிட்ட நாளில் பைரவர் சன்னதியில் நிறுத்தி, தீபம் காட்டி, மஞ்சள் நீரைத் தெளிப்பர். கிடாய் பிள்ளி காட்டும்.

அக் கிடாயை முதல் பிரகாரத் திருமதில் மேற்புறமுள்ள துவாரத்தின் வழியே தூக்கி விடுவர். ஏணியில் நின்று மற்றொரு வைராவி அக் கிடாயை வாங்குவார். பின் இரண்டாம் பிரகார மதிலில் உள்ள துவாரத்தின் வழியே அக் கிடாயை வெளியே கொடுப்பார்.

ஏணி வைத்து ஏறி வெளிப்பிரகாரத்தில் மூன்றாவது வைராவி அக் கிடாயை வாங்குவார். காளி பீடத்தின் முன் கிடாயை நிறுத்துவர்.

பின் வைராவி கிடாயை வெட்டிக் காளிக்குப் பூசை போடுவார். கிடாயின் குருதி பலிபீடத்தில் தோய்ந்து நிற்கும். பலியிட்ட கிடாயை அங்கேயே சமைத்து உண்பர். எஞ்சியவற்றை மண்ணில் குழி தோண்டிப் புதைத்து விடுவர். வீட்டிற்கு எடுத்துச் செல்வதில்லை.

இச் சடங்கில் வைராவி வீட்டுப் பெண்கள் கலந்து கொள்வதில்லை. இச் சடங்கு இரவில் நடைபெறும்.

தகவல் : திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

ஆட்டுக் கிடாயைக் கிராமப் பொதுவில் வாங்கி, காளிக்குப் பூசை போடுவது இன்றும் நடைமுறையில் உள்ளது. இதற்குக் 'கிடாய்ச் சிறப்பு' என்று பெயர்.

இக் காளிக்குரிய ஈட்டி, திரிசூலத்தண்டு, ஆடைப் பேழை முதலியன முதல் பிரகாரத்தில் உள்ள துவாரத்தின் கீழ் வைக்கப்பட்டுள்ளது.

## சிற்பங்கள்

இக் கோவில் சிற்பங்கள் புகழ் பெற்றவையாகும். இச் சிற்பங்கள், இக் கோவில் முன்புறத் தூணிலும், திருச்சுற்று மாளிகைப் பத்தியிலும் அமைந்துள்ளன.

தேவிமார்களுடன் அட்ட வீராட்டான மூர்த்திகள், விநாயகர், சுப்பிரமணியர் முதலிய சிற்பங்கள் ஒரே கல்லில் பெரிய அளவில் செதுக்கப்பட்டுள்ளன.

இன்ப வாழ்வை அருளும் போக வடிவ மூர்த்திகள் உமாமகேஸ்வரர், சோமாஸ்கந்தர், இடபாருடர் சிற்பங்கள் இங்குள்ளன.

ஞான வாழ்வை அருளும் யோக வடிவ மூர்த்தியான தட்சிணாமூர்த்தி சிற்பம் இங்குள்ளது.

தீமையை அகற்றி நம்மை ஆட்கொள்ளும் வேக வடிவ மூர்த்திகளாகிய காலசம்ஹாரமூர்த்தி, ஊர்த்துவ தாண்டவமூர்த்தி, வீரபத்திரர் சிற்பங்கள் இங்குள்ளன.

இவை தவிர, வல்லபை கணபதி, ஆறுமுகச் செவ்வேள், திரிபுரசுந்தரி, பார்வதி, காரைக்கால் அம்மையார், ஆலங்காட்டுக் காளி, மீனாட்சி கல்யாணம், சக்தி, வீணை ஏந்திய பெருமாள், உக்கிரமூர்த்தி, உக்கிர சக்தி, அக்கினி வீரபத்திரர், எண்தோள் காளி, வீணை மீட்டும் பெண் தெய்வம், தக்கையாக சங்காரமூர்த்தி, உக்கிரகாளி, வில்லேந்தி அம்மன், காலசம்ஹாரமூர்த்தி, விதித்தும்சர் முதலிய சிற்பங்கள் இங்குள்ளன.

"ஒன்பது நகரக் கோவில்களில் ஒன்றான மாத்தூர் ஐந்நூற்றீசுவரர் கோவிலில் உள்ள வல்லவை கணபதியின் உருவத்தோடு, இங்குள்ள வல்லபை கணபதி ஒப்பிடத்தக்கவர்" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

அதேபோல அறுமுகச் செவ்வேள் சிற்பமும் ஒப்பிடத்தக்கது என்கிறார்.

"நகரத்தார் கோவில்களில் ஒன்றான மாத்தூர் ஐந்நூற்றீசுவரர் கோவில் முக மண்டபத்து அறுமுகச் செவ்வேளுடன் இங்குள்ள அறுமுகச் செவ்வேள் சிற்பம் ஒப்பிடத்தக்கது. மாத்தூரைப் போன்று இங்கு ஆறுமுகங்களும் காட்டப்படவில்லை. அச் சிற்பத்தின் பின்னழகில் தோன்றும் இடைவெளி இங்கில்லை. முன் புறத்தில் மூன்று முகங்களை மட்டும் காட்டி, மீதி மூன்று முகங்களை மறைபொருளாக்கியுள்ளனர்" என ஒப்பிட்டுக் கூறுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

"பிறவாமை வேண்டும். மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னடியை மறவாமை வேண்டும்" என்று இறைவனிடம் விண்ணப்பித்த காரைக்கால் அம்மையாரின் முதிர்ந்த உருவம், தாளமிடும் கைகள், தளர்ந்த உடல், தள்ளாடும் கால்கள், வற்றிய மார்பு, எலும்புருவம் என இயற்கையாய் வடிவமைக்கப்பட்டுள்ளது.

ஆடும் பிரானின் இடப்புறம் உள்ள சிறிய மேடையில் சண்டி அமர்ந்து குடமுழா வாசிக்கின்றார். நந்தி மத்தளம் வாசிக்கிறார்.

இவ்வாறு காரைக்காலம்மை தாளமிட, சண்டி முழவு இசைக்க, நந்தி மத்தளம் கொட்டப் பெருமான் ஆடுகிறார். இக் காட்சி அற்புதமாய் வடிக்கப்பட்டுள்ளது.

"காரைக்கால் தாயும், குடமுழா வாசிக்கும் சண்டியும், ஆடும் பெருமானின் அருகிலேயே காட்டும் வழக்கம் சோழர் காலத்திலிருந்து காணப்படினும், இங்கு நகரத்தார் காலச் சிற்பிகள் இவர்களைத் தனித்தன்மையுடன் வடித்திருக்கும் திறன் கண்டுகளிக்கத்தக்கது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

கல்லிலே திருவாட்சி ஒன்று ஆடும் பெருமானின் பின்புறம் வடிக்கப்பட்டுள்ளது. தூணின் முன்புறம், பின்புறம் உள்ள கற்களை இடைவெளி தெரியுமாறு வெட்டி எடுத்து திருவாட்சியை வடித்துள்ளனர்.

சிவனும், உமையும் அமர்ந்துள்ள பெரிய ரிஷப வாகனம் கல்லில் வடிக்கப்பட்டுள்ளது. காளை மாட்டின் மூக்கில் மூக்குக்கயிறு (மூக்கணாங்கயிறு) காணப்படுகிறது. இது புதுமையானது.

"விஜயநகர நாயக்கர் காலச் சிற்ப வரிசையில் வைத்து எண்ணத்தக்கது என்றாலும், நகரத்தார் காலச் சிற்பிகள் இப் பகுதியில் உள்ள காளையை ஒற்றைக் கல்லிலே சமைத்துள்ள பாங்கு கண்டு இன்புறத்தக்கது. முந்தைய சோழர், பாண்டியர் சிற்பங்களில் காட்டப்படாத மூக்குக் கயிறு நகரத்தார் கால நந்தியில் காட்டப்பட்டுள்ளதும், அணிகளின் தன்மையும் நகரத்தார் கலையை அடையாளம் காணச் செய்கின்றன" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

ஊர்த்துவத் தாண்டவரின் எதிரே ஆலங்காட்டுக் காளியின் சிற்பம் உள்ளது. எட்டுக் கரங்களுடன் காளி நடனமாடுகிறாள். ஆடும் காளியின் காலடியில் மங்கை ஒருத்தி நடனமாடும் தோற்றத்தில் சிறிய உருவமாகக் காட்டப்பட்டுள்ளாள்.

"மதுரை, தாடிக்கொம்பு, பேரூர் ஆகிய இடங்களில் உள்ள ஆடும் காளியின் சிற்ப வரிசையில் வைத்து எண்ணத்தக்க வகையில் எழிலூட்டும் வனப்பில் இச் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. இது நகரத்தார் காலத்திய சிற்பக் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது" என்று குறிப்பிடுகிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

வீரபத்திரரை அடுத்து எண்தோள் காளியின் சிற்பம் உள்ளது. காளியின் உருவில் பல்வேறு ஆயுதங்களும், அணிகலன்களும் உள்ளன. எட்டுக் கரங்களிலும் கொடிய ஆயுதங்கள் உள்ளன. இவ்வாறு ஆயுதம் தாங்கி உக்கிரமாகத் தோன்றும் தேவி சிற்பியின் கைத்திறனுக்குச் சிறந்த சான்றாகும்.

"மதுரைச் சிற்பத்துடன் இது ஒப்பு நோக்கத்தக்கது. ஆவேசத்தோடு ஆடும் காளியின் கால்களின் அசைவிலும், கரங்களின் வீச்சிலும் கூட இங்கு ஒரு நயத்தினையும், கலையினையும் காண முடிகிறது. காளி அணிந்துள்ள ஆடை அணிகள் யாவும் நகரத்தார் காலத்திய கலை வளத்தை வெளிப்படுத்துகின்றன" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

காலசம்ஹாரமூர்த்தி சிற்பத்தில் சிவன், எமன், எருமை, மார்க்கண்டேயன் அனைத்தும் தத்ரூபமாக வடிக்கப்பட்டுள்ளது. இங்கு எருமைக்கு மூக்குக்கயிறு (மூக்கணாங்கயிறு) உள்ளது.

"காலனைக் கடிந்து உதைக்கும் பெருமானைச் சீற்றத்தோடும், அவன் முன்பு செயலற்று வீழ்ந்து கிடக்கும் காலனை, உயிருக்கு மன்றாடும் நிலையிலும், பயத்தோடு ஆழ்ந்த பக்தியை உணர்த்தும் தெய்வீக உணர்வோடு மார்க்கண்டனையும், அவன் வேண்டி நிற்கும் லிங்கத்தைத் தலையில் தாங்கி நிற்கும் சிவ கணத்தைக் கடமை உணர்வோடு காட்டியும், அளவோடும், அழகோடும் ஒரே கல்லில் வடித்துள்ள இச் சிற்பத் தொகுதி இங்குள்ள சிற்பங்களுக்கெல்லாம் மகுடம் வைத்தது போன்று அணி செய்கிறது. லிங்கத்தையும், மார்க்கண்டேயனையும் சிவனது இடது காலையும் சுற்றி வரும் பாசக்கயிறு 2.40 மீட்டரில் கல்லிலே வடிக்கப்பட்டுள்ளது. ஆலயத்திற்கு வந்து இச் சிற்பத்தைக் கண்டு செல்லும் பெரியோர்கள் இது கல்லா அல்லது சுபிறா என்று வியக்கும் அளவிற்கு அமைக்கப்பட்டுள்ளது" எனத் தெரிவிக்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

வில்லேந்தி அம்மன் ஆறு கரங்களுடன் வடிக்கப்பட்டுள்ளாள். அக் கரங்களில் கொடிய ஆயுதங்களும், வில்லும் உள்ளன. இவ் உருவம் சிவசக்தி அம்சங்களில் ஒன்று. அன்னையின் இடது கையில் உள்ள வில்லை நுணுக்கமாகச் செதுக்குவதற்காகச் சிற்பிகள் மிகக் கவனம் செலுத்தியுள்ளனர்.

விதித்தும்ஸர் எட்டுக் கரங்களுடன் வடிக்கப்பட்டுள்ளாள். எட்டுக் கரங்களிலும் ஆயுதங்கள் உள்ளன. பருத்த அனல் கக்கும் விழிகளில் ஆவேசம் நன்கு வெளிப்படும்படி இவ் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. சீற்றமுடன் தோன்றும் இத் தெய்வம் வெட்டிய அசுரரின் உடலைப் பக்கத்துத் தூணில் முண்டமாக வடித்துள்ளனர்.

அவ் அசுரன் முறுக்கிய மீசையுடனும், கோரைப் பற்களுடனும் வாளுடனும் வடிக்கப்பட்டுள்ளான்.

"நகரத்தார் காலத்தில் எழுவன்கோட்டைச் சிற்பிகளால் தோற்றுவிக்கப்பட்டுள்ள 24 சிற்பங்களும் அவர்களது கைவினையையும், கலைமரபையும் வெளிப்படுத்துவன. பல்வேறு உணர்ச்சிகளைத் தெய்வ உருவங்களின் தன்மைகளுக்கேற்ப அமைத்துள்ளனர்.

விஜயநகரத் தூண் சிற்பங்களுக்கு ஸ்ரீரங்கமும், வேலூரும் புகழ் அடைந்ததைப் போல், நாயக்கர்காலச் சிற்பங்களுக்கு மதுரையும், தஞ்சையும் தாடிக்கொம்பும் சிறப்படைந்ததைப் போல், நகரத்தார் காலத் தூண்

சிற்பங்களுக்கு நேமம் புகழ் வாய்ந்ததாகக் கருதலாம்" என மதிப்பீடு செய்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

"ஒரு நூற்றாண்டுக்கு முன்பு தோன்றி வளர்ந்த நகரத்தார் கலை வளத்தை அறிந்து கொள்ளவும், ஆய்வு செய்யவும் இச் சிற்பங்கள் பெரிதும் பயன் உடையன. இச் சிற்பங்களைத் தோற்றுவித்த பெருமை எழுவன்கோட்டை ஸ்தபதிகளுக்கும், அவர்களை ஊக்குவித்த பெருமை நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கும் உரியது" என இருவரையும் புகழ்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

## செப்புத் திருமேனிகள்

இக் கோவிலில் 28 செப்புத் திருமேனிகள் உள்ளன.

இவை மூன்று காலகட்டத்தில் செய்தளிக்கப்பட்டதாகத் திரு. மா. சந்திரமூர்த்தி தமது நேமம் கோவில் நூலில் குறிப்பிடுகிறார். அதன் விபரம் வருமாறு :

முதல்காலகட்டச் செப்புத் திருமேனிகள் பிந்திய பாண்டியர் காலத்தவை. பிரதோஷ நாயகர், சந்திரசேகரமூர்த்தி, சந்திரசேகர அம்மன் முதலிய திருமேனிகள் இக் காலத்தவை.

இரண்டாம் காலகட்டச் செப்புத் திருமேனிகள், விஜயநகரக் காலத்தவை. திருமகள், சக்கரத்தாழ்வார் முதலிய திருமேனிகள் இக் காலத்தவை.

மூன்றாவது காலகட்டச் செப்புத் திருமேனிகள் நகரத்தார் காலத்தவை. இக் காலகட்டத்துச் செப்புத் திருமேனிகளே இக் கோவிலில் எண்ணிக்கையில் மிகுந்து காணப்படுகின்றன. அவையாவன :

விநாயகர், நடராசர், சிவகாமி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, பிரதோஷ நாயகர், பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், சோமாஸ்கந்தர், தனி அம்மன், சுக்கிரவார அம்மன், சண்டிகேசுவரர், அஸ்திர தேவர், அழகு நாச்சியம்மன், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், நந்தி, பலிபீடம், கண்ணாடி.

(நன்றி : நேமம் கோவில்)

"இவை அனைத்தும் செப்புக் கலவையில் முழுதும் வார்க்கப்பட்டுள்ளன. இவை செம்பொன் நிறமும், வெங்கல நிறமும் கொண்டவை. நாட்டுக்கோட்டை நகரத்தாரின் படிமக் கலையை வெளிப்படுத்துபவை"என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

சோழ மன்னர்கள் எழுப்பிய இக் கோவிலில் சோழர் காலத்துப் படிமங்கள் எதுவும் கிடைக்கவில்லை.

பிற்காலப் பாண்டியர் காலத்துப் படிமங்களில் மிகப் பழமையானது பிரதோஷ நாயகர் படிமமே. இதனைப் பிற்காலத்தில் திருத்தி அமைத்துள்ளனர். அதனால் சிவனின் வலது கட்டை விரல், மான், பீடக் கொம்பு ஆகியவை உடைந்துள்ளன.

"இக் கோவிலின் தன்மையினை அறிவதற்கும், அடையாளம் காண்பதற்கும், இச் சிலைகள் பெரிதும் துணை செய்கின்றன" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

பழைய சிவாலயத்தில் இருந்த சந்திரசேகர அம்மன் சிலையை 1907இல் நகரத்தார் திருப்பணி செய்தபோது பீடம் செய்து இணைத்துள்ளனர்.

புதையலில் கிடைத்த இரு வைணவ சிலைகளான திருமகள், சக்கரத்தாழ்வார் என்ற இரண்டு சிலைகளும் இக் கோவிலில் வழிபாட்டில் உள்ளன.

இங்குள்ள மாணிக்கவாசகர் படிமத்தை இரணிக்கோவில் படிமத்துடன் ஒப்பிடலாம்.

"இரணியூர் படிமத்தில் தலையைச் சுற்றிலும் சுருண்ட கேசங்களுடனும், காதுகளில் அணியின்றியும், கழுத்தில் உருத்திராட்சமும், இடையில் கௌபீனமும், இடுப்பில் அரைஞானும், காலில் தண்டையும் அணி செய்ய, மாறாக நேமத்துப் படிவம் சுருண்ட கேசங்கள் இன்றியும், தொள்ளைக் காதுகளில் கடுக்கனும், கழுத்திலும், மார்பிலும் கற்கள் பதித்த பொன் அணிகளும், இடையில் முண்டும், காலில் காப்பும் பூண்டு காட்சியளிக்கக் காண்கிறோம். நகரத்தார்கள் செய்தளித்த படிமங்களில் நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர் படிமங்கள் சிறப்பானவை" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

நர்த்தன ஞானசம்பந்தர் படிமம் இலுப்பைக்குடிக் கோவில் படிமத்தை ஒத்துள்ளது.

ஒரே சிற்பி அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர் படிமங்களை வார்த்துள்ளார். சுந்தரரின் இடை வசீகரத்துடன் காணப்படுகிறது.

"இரணியூர் சுந்தரர் படிமத்தின் உருவ அமைப்பிலிருந்தும், ஆடை அணிகலன்களிலிருந்தும் இது முற்றிலும் வேறுபட்டுத் திகழ்கிறது. சோழரது படிமக்கலையின் சாயல் இப் படிமத்தில் காணப்படினும், நகரத்தாரின் கலைப்பாணி இப் படிமத்தில் பதிவாகியுள்ளதை இதில் நன்கு காண முடிகிறது. சுந்தரரின் வேறுபட்ட உருவங்கள் மாறுபட்ட நிலையில் இரணியூர் - நேமம் படிமங்களில் காண முடிகிறது" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

வள்ளியின் கையிலும், தெய்வானையின் கையிலும் தனியாக மலரைச் செய்து பொருத்தி உள்ளனர்.

"இத்தகைய வழக்கு நகரத்தார் காலக் கலைப்பாணியில் குறிப்பிடத்தகுந்த அம்சமாகும்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : நேமம் கோவில்)

அஸ்திரத் தேவர் படிமம் சித்திரைத் திங்கள் பத்தாம் நாள் உற்சவத்தில் ஊருணிக்கு உலாவாக எடுத்துச் செல்லப்படுகிறது.

## வாகனங்கள்

இக் கோவிலில் மரத்தால் செய்த வாகனம் ஏழும், வெள்ளியால் செய்த வாகனம் ஒன்றும் ஆக எட்டு வாகனங்கள் உள்ளன.

பெரிய காளை வாகனம், சிறிய காளை வாகனம், பெருச்சாளி வாகனம், அன்ன வாகனம், மயில் வாகனம், சிம்ம வாகனம், குதிரை வாகனம் முதலிய மர வாகனங்களும், வெள்ளி ரிஷப வாகனமும் உள்ளது.

மேலைச் சிவபுரி சி.ஆ.சி. சின்னான் செட்டியார் வெள்ளி ரிஷப வாகனத்தை உபயமாகச் செய்து கொடுத்துள்ளார்.

சட்டத் தேரும், சப்பரமும் இக் கோவிலில் இருந்ததாகவும், 50 ஆண்டுகளுக்கு முன் இவை ஓடியதாகவும் கூறுகின்றனர். மாடு

பூட்டும் இரு சகடைகள் மட்டுமே இப்போது இக் கோவிலில் உள்ளது.

## பூசை விபரம்

தினந் தோறும் ஐந்து காலப் பூசை நடைபெறுகிறது. அனைத்துப் பூசைகளும் இறைவனுக்கே. சாயரட்சைப் பூசை அம்மனுக்கு.

திருநீறு (பிரசாதம்) வழங்கும்போது 'ஒக்கூருடையார்' என முதலிலும், 'அயல் கோவில் நகரத்தார்' என இரண்டாவதாகவும், 'நகரத்தார்' என மூன்றாவதாகவும் அழைத்து குருக்கள் விபூதி வழங்குகிறார்.

விசேட காலங்களில் அரண்மனையாரையும், நகரத்தாரையும், நாட்டாரையும் அழைத்து விபூதி வழங்குகிறார்.

## திருவிழாக்கள்

ஆவணி மாதம் பிள்ளையார் சதுர்த்தி விழா நடைபெறுகிறது. புரட்டாசி மாதம் நவராத்திரி விழா நடைபெறுகிறது. விஜயதசமியன்று மகர் நோன்பு விழா நடைபெறுகிறது. கார்த்திகை மாதம் திருக்கார்த்திகை விழா. அன்று இரவு பஞ்சமூர்த்திகள் புறப்பாடும், சொக்கப்பனை கொளுத்துதலும் நடைபெறுகிறது. மார்கழி மாதம் 30 நாளும் திருப்பள்ளி எழுச்சியும், திருவாதிரை விழாவும் நடைபெறுகிறது.

தை மாதம் பொங்கல் விழாவில், இக் கோவில் சார்பாகச் சுற்றுப்புறக் கோவில் அனைத்திற்கும் பொங்கல் சீர் வழங்கப்படுகிறது. கோவில் சிப்பந்திகளுக்கும் பொங்கல் சீர் வழங்கப்படுகிறது.

பொங்கலன்று சுவாமி சன்னதியில் நந்திக்குப் பின்புறம் பொங்கல் வைப்பார்கள். உச்சிக்காலப் பூஜையில் சிறப்பு வழிபாடு நடைபெறும்.

நான்கு காலம் அபிஷேகத்துடன் மகா சிவராத்திரி விழா மாசி மாதம் நடைபெறுகிறது.

நேமம் காளிக்குச் சிறப்பு வழிபாடும், மரியாதையும் நடைபெறுகிறது.

## ஊருணிகள்

கோவிலுக்குத் தெற்கே சோழகுல ஊருணி உள்ளது. சோழர் காலத்தில் வெட்டப்பட்ட இவ் ஊருணியை நகரத்தார்கள் விரிவுபடுத்தினர். நீண்ட மதிற்சுவர்கள், படித்துறைகள் கட்டினர்.

இரு படித்துறைக்கு நடுவே, ஊருணியின் வடக்கே சோழகுல விநாயகரும், திருச்சுற்று மண்டபமும் உள்ளன.

"நகரத்தார்களது திட்டமிட்ட கட்டடக் கலைக்கு இவ் ஊருணி சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இச்சாழா ஊருணி திராவிடக் கட்டடக் கலையை நினைவூட்டும் வகையில் அமைந்து விளங்குகிறது" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

**(நன்றி : நேமம் கோவில்)**

கோவிலுக்கு எதிரே விடுதிக்குக் கீழ்ப்புறம் செட்டி ஊருணி என்ற குடிநீர் ஊருணி உள்ளது. காரைக்குடி அரு.அ.குடும்பத்தார் ரூ.15,000/- செலவில் பிள்ளையார் கோவிலும், ஊருணியும் உண்டாக்கினர். செட்டியாரால் இவ் ஊருணி ஏற்படுத்தப்பட்டதால், செட்டி ஊருணி என அழைக்கப்படுகிறது.

## சோழகுல விநாயகர் கோவில்

திருக்குளத்தின் வடகரையில் இக் கோவில் உள்ளது. கோவில்குளத்தில் நீராடி விட்டு இவ் விநாயகரை வணங்கிச் செல்லும் விதத்தில் கோவில் எழுப்பப்பட்டுள்ளது. கோவிலில் பல அழகிய சிற்பங்கள் உள்ளன.

## பெருமாள் கோவில்

சிவன் கோவிலுக்கு மேற்புறம் பெருமாள் ஊருணி உள்ளது. ஊருணிக்குத் தென்புறமுள்ள மேட்டில் பெருமாள் கோவில் இருந்து அழிந்த அடையாளங்கள் காணப்படுகின்றன. இப்போது ஊருணி மட்டும் உள்ளது.

## கிராமத் தெய்வங்கள்

வெயில் உகந்த விநாயகர், அழகாபுரி பிள்ளையார், செட்டி ஊருணிப் பிள்ளையார், அழகு நாச்சியம்மன், நொண்டிக்கருப்பர், பச்சிலை நாச்சியம்மன், நித்தம் புதுமை நாச்சி என்னும் நெம்மேனியம்மன், சேவுகப் பெருமாள், அய்யனார் ஆகிய கிராம தெய்வங்களும், அவற்றிற்குரிய ஆலயங்களும் இங்குள்ளன.

## கோவில் நிர்வாகம்

வயதாலும், அனுபவத்தாலும் முதிர்ந்தவர்கள் 25 பேர் சிறந்த முறையில் நிர்வாகம் செய்கின்றனர். இந்த 25 பேரும் ஆண்டுக்கு 5

பேர் வீதம் 5 ஆண்டுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப் படுகின்றனர். இவர்கள் காரியக்காரர்கள் என அழைக்கப்படுகின்றனர்.

நெற்குப்பை கு.பழ.சு. வகை, வெ.ராம.ப. வகை, கீழச்சிவல்பட்டி மெ.மு.கரு. வகை, மேலச்சிவபுரி ராம.மு. வகை, நா.ஆ.சி. வகை - இந்த 5 வகையாரில் 5 பேர்.

வலையப்பட்டி குழ-அடை-வகை, ந.மு.வகை, வேந்தன்பட்டி ந.ந.வகை, நா.அரு.வகை, ராங்கியம் வ.நா.வகை - இந்த 5 வகையாரில் 5 பேர்.

காரைக்குடி நா.நா.வகை, கண்டனூர் தெ.அரு.வகை, பள்ளத்தூர் தெ.அ.தெ.மு.மு.பி.வகை, அரு.மு.தெ.சு.வகை, கானாடுகாத்தான் அள.சு.வகை - இந்த 5 வகையாரில் 5 பேர்.

அரிமழம் சி.ராம.வகை, மு.செ.வகை, கோட்டையூர் கு.கரு. வகை, கு.மு. வகை, கு.வீர.வகை - இந்த 5 வகையாரில் 5 பேர்.

காரைக்குடி அரு.அ.வகை, வீர.அ. வகை, தெ.வ.கரு. வகை, தேவகோட்டை உ.ராம.மெ.வகை, உ.ராம.உ.வகை - இந்த 5 வகையாரில் 5 பேர் என 25 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கோவில் நிர்வாகத்தை நடத்துகின்றனர்.

தகவல் திரு.மா.சந்திரமூர்த்தி.

**(நன்றி : நேமம் கோவில்)**

## குடமுழுக்கு விழாக்கள்

முதல் குடமுழுக்கு விழா 23.5.1907இல் நடைபெற்றது. இரண்டாவது குடமுழுக்கு விழா 5.2.1961இல் நடைபெற்றது. மூன்றாவது குடமுழுக்கு விழா 3.2.1991இல் நடைபெற்றது.

இக் கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள் 20 ஊர்களில் வாழ்கின்றனர். அதன் விபரம் வருமாறு.

1. அரண்மனை சிறுவயல்
2. அரிமழம்
3. பி. அளகாபுரி
4. இராங்கியம்
5. உலகம்பட்டி
6. கண்டனூர்

7. *கல்லல்*
8. *காரைக்குடி*
9. *கானாடுகாத்தான்*
10. *கீழச்சிவல்பட்டி*
11. *கோட்டையூர்*
12. *சண்முகநாதபுரம்*
13. *செம்பனூர்*
14. *தேவகோட்டை*
15. *நெற்குப்பை*
16. *பலவான்குடி*
17. *பள்ளத்தூர்*
18. *மேலச்சிவபுரி*
19. *வலையபட்டி*
20. *வேந்தன்பட்டி*

(நன்றி : நகரத்தார் கலைக்களஞ்சியம்)

பேர்நேமங் கோவிலார் பேர்வாழப் பாரோங்கும்
பார்புகழும் சீரோங்கும் பண்புமிகும் - பாரில்
ஜெயங்கொண்ட சோழீசர் சேர்சவுந்த்ர நாயகியும்
நேயமிகக் காக்கின்றார் நீடு.

- நல்லறக் கவிராயர் சுப.நா. நாகப்பன்





# சூரக்குடிக் கோவில்

நகரத்தாரின் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் சூரக்குடிக் கோவிலும் ஒன்று.

சூரக்குடி என்ற பெயரில் தமிழ்நாட்டில் பல ஊர்கள் உள்ளன. ஆனால், 'நகரச் சூரக்குடி' தான் நகரத்தாரின் குலமரபுக் கோவிலோடு தொடர்புடையது.

சூரை மரங்கள் நிறைந்திருந்ததால் இவ் ஊர் சூரைக்குடி எனப் பெயர் பெற்றது.

சூரை, சூரைக்குடி, சூரக்குடி, சூரைமாநகர், இலந்தைவனம், விஜயாலயபுரம் எனப் பல பெயர்களில் இவ் ஊர் வழங்கப்படுகிறது. இன்று 'வன்னியச் சூரக்குடி, நகரச் சூரக்குடி' என இரு பகுதியாக இவ் ஊர் உள்ளது.

வன்னியச் சூரக்குடியில் ஒற்றைக் கல் மண்டபமும், ஓடாத தேரும் புகழ் பெற்றவை.

பூவாண்டிப்பட்டி என்ற கிராமத்தில் நகரச் சூரக்குடி உள்ளது. இங்கு தான் நகரத்தாரின் குலமரபுக் கோவில் உள்ளது.

நகரத்தார்கள் நானா தேசங்கட்கும் சென்று வாணிபம் செய்பவர்கள். அதனால் நானாதேசிகன் எனப் பெயர் பெற்றனர். இதிலிருந்து 'தேசி' என்பது நகரத்தாரைக் குறிக்கும் சொல் என்பதும், அவர்கள் வணங்கிய கடவுள் தேசிகநாதர் என்பதும் புலனாகிறது.

இவ் ஊரில் கோவில் கொண்டுள்ள இறைவன் தேசிகநாதர். அவ் இறைவன் பெயரால் இவ் ஊர் தேசிகநாதபுரம், தேசிக நாராயணபுரம் என்றும் அழைக்கப்படுகிறது.

இத் தலத்தைச் சூரன் என்ற அசுரன் வழிபட்டதாலும், சூரியன் வணங்கியதாலும் இவ் ஊருக்குச் சூரக்குடி என்ற பெயர் ஏற்பட்டதாகத் தலபுராணம் கூறுகிறது.

நகரச் சூரக்குடிக்குப் புராணம் இல்லை. வன்னியச் சூரக்குடிக்குப் பழமையான 'சூரை மாநகர்ப் புரணம்' என்ற நூல் உள்ளது.

இந் நூல் வடமொழி மூல நூலில் இருந்து தமிழில் திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையால் மொழிபெயர்க்கப் பட்டது. இந்நூல் காரைக்குடி முரு.லெ.இலக்குமணன் செட்டியார் மகன் கிருஷ்ணன் செட்டியாரின் வேண்டுகோளின்படி எழுதப்பட்டதாகும்.

இந் நூலில் திருநாட்டுப்படலம், சூரக்குடி நகரப்படலம், நைமிச வனப்படலம், சூரியன் பூசித்த படலம், சூரன் பூசித்த படலம், பொன்னான் விசயாலயத்தேவன் நிருத்த தரிசனம் செய் படலம், பொன்னான் விசயாலயத்தேவன் திருப்பணிப் படலம், சங்கப்புலவர் பூசித்த படலம், திருமலை பூசித்த படலம், தலவிசேசப் படலம் என பத்துப் படலங்களும், 539 செய்யுட்களும் உள்ளன.

**பூவினில் தாமரை போலும் புத்தொளிர்**
**காவினில் கற்பகம் போலும் கண்ணிய**
**தேவினில் சிவபிரான் போலும் ஊர்களில்**
**சோவினில் பொலிவளச் சூரை மாநகர்**

என இவ்வூரின் சிறப்பை இந் நூல் கூறுகிறது.

சூரையின் பெருமை, இறைவன், இறைவி, திருக்குளம், தெய்வங்களின் பெருமை முதலியவற்றை இந் நூலின் மூலம் நாம் அறிகிறோம்.

**(நன்றி : சூரக்குடிக் கோவில் - திரு.மா.சந்திரமூர்த்தி)**

1800 ஆண்டுகட்கு முற்பட்ட பழமையான சிறப்புடைய ஊர் சூரக்குடி. இதனை இவ் ஊரில் கிடைத்துள்ள முதுமக்கள் தாழியும், மட்பாண்டங்களும் உறுதி செய்கின்றன.

இவ் ஊர் தேசிகநாதர் கோவிலில் பாண்டியர் காலத்துப் பைரவர், சண்டி, விநாயகர் சிற்பங்கள் உள்ளன.

எனவே முற்காலத்தில் பாண்டிய மன்னனால் கட்டப்பட்ட கோவில் ஒன்று இருந்து அழிந்துள்ளதாகத் தெரிகிறது.

மாகாளி கோவிலும் இருந்ததாகத் தெரிகிறது.

அழிந்த சிவன் கோவில் தளத்திலேயே இன்றைய நகரக் கோவில் கட்டப்பட்டுள்ளது.

கி.பி. 718இல் பாண்டிய மன்னனால் நகரத்தார்களுக்கு இக் கோவில் வழங்கப்பட்டது.

1898இல் சூரக்குடி நகரத்தார்களின் முதல் திருப்பணி நடைபெற்றது. அப்போது கோவில் முழுமையாகப் புதுப்பிக்கப்பட்டது.

## கோவில் அமைப்பு

இக் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், நடராசர் சன்னதி, அம்மன் சன்னதி, பைரவர் சன்னதி, நந்தி, பலிபீடம், கொடிமரம், திருச்சுற்று, மேற்சுற்றுப் பிரகாரம், திருச்சுற்று மாளிகைப்பத்தி, பள்ளியறை, சோமாஸ்கந்தர் சன்னதி, இராசகோபுரம், மதில், பதினாறுகால் மண்டபம், திருக்குளம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது.

பரிவாரத் தெய்வங்களுக்குத் தனித்தனி ஆலயங்கள் உள்ளன.

இரண்டாம் திருச்சுற்று மதிலின் வெளியே பைரவர் பீடம் உள்ளது. மா மரத்தடியில் முனீஸ்வரர் பீடம் உள்ளது. அரச மரத்தடியில் விநாயகர் கோவில் உள்ளது.

பசுமடம், அக்கிரகாரம், பணியாளர் இல்லங்கள், நந்தவனம், நகர விடுதி முதலியன உள்ளன.

கிழக்கு நோக்கி கோவில் அமைந்துள்ளது. இறைவன் தேசிகநாதர். தல மரம் மா மரம். வாயிலின் முகப்பில் தெய்வ உருவங்கள் ஏதுமில்லை. கூரையின் மேல்பாகம் வரை வெள்ளைக்கல்லால் கோவில் கட்டப்பட்டுள்ளது.

இரு தளங்களை உடைய இக் கோவில் விமானம் அதிட்டானம், சுவர், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி ஆகிய ஆறு பகுதிகளைக் கொண்டுள்ளது.

அதிட்டானத்தின் கபோதக மேல் மூலையில் யானை முகமும், கீர்த்தி முகமும் காட்டப்பட்டுள்ளன.

*"இத்தகைய புதுமையான அமைப்பு பிற்காலப் பாண்டியர்களின் கட்டடக் கலையில் உள்ள அதிட்டான அமைப்பு முறையில் அறிமுகப்படுத்தப்பட்டு இருப்பினும், நாயக்கர்கள் காலக் கோவில்களிலும் இத்தகைய கலைமரபு கையாளப்பட்டுத் தொடர்ந்து நகரத்தார் கோவில்களிலும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது" எனக் கூறுகிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.*

**(நன்றி : சூரக்குடிக் கோவில்)**

*அபிஷேக நீர் வெளியேறும் கோமுகி கல் வேலைப்பாட்டு அமைப்புடன் உள்ளது. அம்மன் சன்னதியிலும், பைரவர் சன்னதியிலும் இத்தகைய அமைப்புள்ளது.*

*கலசத்தில் உள்ள பொதிகையில் மதளை, பூமுனை, நாணுதல் பெற்று மலர்ப் பொதிகையாகக் காட்சியளிக்கிறது.*

*"நாயக்கர் காலக் கட்டடக் கலை தொடங்கி, இம் மலர்ப் பொதிகைக் கலை வளர்ச்சியின் முதிர்ச்சியினை நகரத்தார் காலத் தூண்கள் நன்கு வெளிப்படுத்தி நிற்கின்றன" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.*

**(நன்றி : சூரக்குடிக் கோவில்)**

*கும்ப பஞ்சரம் விசிறி மடிப்புடன் காணப்படுகிறது. அதன் மேல் பக்கங்களில் இரு மகரங்களின் வாயிலிருந்து தோரணங்களாக இரு கொடிக் கருக்குகள் உள்ளன. இத் தோரணங்களை மகர முகமும், பறவை உடலும் கொண்ட இரு மகரங்கள் பற்றியுள்ளன.*

*கருவறையை மூடும் பிரஸ்தர எழுதக வரியில் பூதகணம் இல்லாமல், எழுதகமாகவே உள்ளது.*

*நாசிக் கூடுகளில் தெய்வ உருவங்கள் இல்லை. கொடுங்கைகள் உள்ளன.*

*கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் இரட்டை நந்திகளின் சுதை உருவங்கள் உள்ளன.*

*வேதிப்படையின் கோடியில் சிம்மங்கள் அமர்ந்துள்ளன.*

*கோஷ்டங்களின் முன்புறம் தட்சிணாமூர்த்தி, திருமால், நான்முகன், சிவன் ஆகியோரின் சுதை உருவங்கள் உள்ளன.*

ஸ்தூபி உலோகத்தால் ஆனது. அர்த்தமண்டபம் தூண்கள் இன்றிக் கருவறையை விடப் பெரியதாய் உள்ளது. இதன் தெற்கிலும், வடக்கிலும் விநாயகர், துர்க்கை முதலிய நின்ற கோலத் தெய்வச் சிற்பங்கள் உள்ளன.

அர்த்த மண்டப வாயிலின் திருநிலைக் காலின் முகப்பைக் கல்மணிகள் அலங்கரிக்கின்றன. படிகளின் முன்புறம் கண்ணாடிச் சட்டம், பூதகணம், மலர்ந்த பூவிதழ், விரிந்த தாமரை ஆகியன அர்த்த சித்திரங்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

கூரைப் பகுதியில் பெரிய கஜலெட்சுமி சிற்பம் உள்ளது.

தட்சிணாமூர்த்தி மண்டபம் கல் மண்டபமாக உள்ளது. இது வேலைப்பாடு மிக்கது. இரு வலிமையான சிம்மங்கள் இம் மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. சிம்மத்தின் மேல் உள்ள பீடம் வேலைப்பாடு மிக்கதாய் உள்ளது. இதன் கண்டப் பகுதியில் பன்னீர் செம்புகள் வரிசையாக அமைந்துள்ளன. அடியார் ஒருவர் வணங்கிய நிலையில் உள்ளார்.

“இக் கோவில் தட்சிணாமூர்த்தி மண்டபத்தின் கூரைப்பகுதி பிற நகரக்கோவில் கட்டடக் கலை முறையிலிருந்து வேறுபட்டுத் திகழ்கிறது. மாத்தூர், நேமம், இரணியூர், பிள்ளையார்பட்டிக் கோவில்களில் இம் மண்டபத்தின் கூரை மரச் சட்டங்களைச் செதுக்கி அமைத்தது போன்று சட்டங்கள் பொருத்தப்பட்டு, அதன் உட்புறத்தில் நீண்ட பட்டையான கம்பிகளை ஒத்தும், உருட்டுக் கம்பிகளை ஒத்தும் நுணுக்கமான கலை வேலைப்பாடுகள் நிறைந்து விளங்குகின்றன. சட்டத்தின் மீது அறையப்பட்டுள்ள கல் ஆணிகளும், மலர்க் குழிகளும், மரத்தையே செதுக்கியதை ஒத்து விளங்குகின்றன. ஆனால் நகரச் சூரக்குடிக் கோவில் தட்சிணாமூர்த்தி மண்டபக் கூரை எளிமையான வேலைப்பாடுகளுடன் திகழ்கிறது. இக் கூரையைத் தாங்கி நிற்கும் இரு கரிய நிறக் கற்றூண்கள் எழுவன் கோட்டைச் சிற்பிகளின் சிற்றுளி ஆற்றலை வெளிப்படுத்தும் அளவீடாக மிகவும் நுட்பமான வேலைப்பாடுகளுடன் திகழக் காண்கிறோம்” என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

அர்த்த மண்டபத்தின் முன்புறம் மகா மண்டபம் உள்ளது. இதுவும் மற்ற நகரக் கோவில்களான மாத்தூர், இரணியூர், பிள்ளையார்பட்டிக் கோவில்களிலிருந்து வேறுபட்டுக் காணப்படுகிறது.

இக் கோவில் மகா மண்டபம் சுற்றுச் சுவரின்றிப் பல சித்திரக் கால்களுடன் விசாலமாக விரிந்து காணப்படுகிறது.

நடராசர், ஆவுடைய நாயகி, பைரவர் முதலிய தெய்வ ஆலயங்கள் உள்ளன. சிறிய நந்தி பீடமும், சிம்மங்கள் தாங்கி நிற்கும் பெரிய நந்தி பீடமும் உள்ளன.

"இவை நகரச் சூரக்குடியில் சிவாலயத்தின் கட்டடக் கலை அமைப்பில் காணப்படும் சிறப்பு அம்சமாகக் கூறலாம். நகரத்தார் கட்டடக் கலைப்பாணியில் இது ஒரு புதிய அறிமுகம் எனலாம். இக் கோவில் மகா மண்டபமும், கருவறையைச் சுற்றியுள்ள மேற்சுற்றுப் பிரகாரமும் இணைந்து ஒரே தள வரிசை மட்டத்திற்கு அமைந்து காணப்படுவதைக் கட்டடக் கலையின் மற்றோர் அம்சமாகக் கொள்ளலாம்" எனத் தெரிவிக்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : சூரக்குடிக் கோவில்)**

இம் மகா மண்டபத்தை 30 சித்திரத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. இம் மண்டபத்தை அடைய இரு வாயில்கள் உள்ளன.

மகா மண்டபத்தின் வடக்கே நடராசர் சன்னதி உள்ளது. நீண்ட உயர்ந்த கல்மேடையில் நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர் ஆகியோரின் உலோகச் சிலைகள் உள்ளன. சன்னதியின் முன்புறம் பதஞ்சலி முனிவரும், வியாக்கிரபாதரும் வணங்கிய நிலையில் உள்ள உருவங்கள் உள்ளன.

இரு தளங்கள் உள்ளன. முதல் தளத்தை விமானம் தாங்கிகள் ஓங்கிய வாளைத் தோளில் தாங்கி நிற்கின்றனர். இரண்டாம் தளத்தைச் சீற்றத்துடன் ஓங்கிய கையையுடைய வீர அனுமான் தாங்கி நிற்கின்றார்.

மகா மண்டபத்தில் அம்மன் சன்னதியை அடுத்துப் பைரவர் சன்னதி உள்ளது. இங்கு சதுர்புஜ (நான்கு கரங்களுடைய) பைரவர் நின்ற கோலத்தில் வடுக (நாய்) வாகனத்துடன் காட்சி தருகிறார். அவரின் இடது மேற்கையில் உடுக்கை உள்ளது. வலது மேற்கையில் நாகம் உள்ளது. கீழ் வலக்கையில் நீண்ட கதாயுதம் உள்ளது. கீழ் இடக்கையில் கபாலம் உள்ளது.

கரிய நிறக் கல்லில் ஆடை அணியாக் கோலத்தில் பைரவர் அருள் பாலிக்கிறார்.

இச் சன்னதி அதிட்டானம் முதல் பிரஸ்தரம் வரை வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. விமானப் பகுதி செங்கல்லும், காரையும் கொண்டு கட்டப்பட்டுள்ளது.

திருச்சுற்று மாளிகை மதிலிலும், வெளி மதிலிலும் பைரவர் பார்வை படும்படி இரு சன்னல்கள் உள்ளன. வெளி மதிலின் முன்புறம் பைரவர் பீடம் அமைக்கப்பட்டுள்ளது.

"பைரவரின் முன்புறம் வாயிலை அமைப்பதற்குப் பதிலாகப் பெரிய சன்னல்களை அமைத்துள்ளமை நகரத்தார் கட்டடக் கலையில் குறிப்பிடத்தக்க அம்சமாகக் கருதலாம். பைரவர் மீது பற்றுக் கொண்ட நகரத்தாரும், ஊராரும் விடுதி முகப்பில் இருந்தே பைரவரின் நித்திய பூசையைக் காணும் வகையில் இவ் அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது. இங்குள்ள பைரவர் பீடமும் புனிதமாகக் கருதப்படுகிறது" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

நந்தி அமர்ந்துள்ள கல் மேடையை நான்கு சிம்மங்கள் தலையில் தாங்கி நிற்கின்றன. இச் சிம்மங்கள் மிகக் கவனமாக, இயற்கையாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவ் அமைப்பு மாத்தூர் நகரக் கோவிலிலும் உள்ளது.

"பொதுவாகச் சிம்மங்களைக் காஞ்சியிலும், திருவரங்கத்திலும், வேலூரிலும் விஜயநகர மன்னர்கள் சிற்பமாகச் செதுக்கி உள்ளனர். மதுரையில் நாயக்கர்களும், இராமேசுவரத்தில் சேதுபதிகளும், தாரமங்கலத்தில் கெட்டி முதலிகளும் சிம்மத்தைப் படைத்துள்ளதைப் போன்று, செட்டி நாட்டுச் சிற்பிகள் இலுப்பைக்குடி, மாத்தூர், சூரக்குடி போன்ற நகரக் கோவில்களில் இதனைப் படைத்து மகிழ்ந்துள்ளனர். எனவே இக் கலைப்பாணி விஜய நகர, நாயக்க, சேதுபதி காலக் கலையின் தொடர்ச்சி எனலாம்" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

மேற்சுற்றுப் பிரகாரம் தேசிகநாதர் - ஆவுடைய நாயகி சன்னதியைச் சுற்றி வரும் வகையில் உள்ளது. இப் பிரகாரத்தில் 42 சித்திரக்கால் தூண்கள் உள்ளன. இத் தூண்களில் தெய்வ உருவங்கள், தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், அடியார்கள், மிருகங்கள், பறவைகள், மலர்கள், இலைக்கருக்குகள் முதலியன அர்த்த சித்திரங்களாக வெட்டப்பட்டுள்ளன.

காற்றும், வெளிச்சமும் வரக் கருவறையை ஒட்டிப் பல இடங்களில் சாளரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சண்டிகேஸ்வரர்க்குத் தனிச் சன்னதி உள்ளது. இவர் நான்கு கரங்களுடன் உள்ளார். கிரீவ கோஷ்டங்களின் நான்கு திசைகளிலும் சண்டிகேஸ்வரரின் அமர்ந்த சிற்பங்கள் உள்ளன. இச் சுதைச் சிற்பங்களும் நான்கு கரங்களுடன் உள்ளன. வேதிப்படையின் நான்கு மூலைகளிலும் சிவகணங்களும், பக்கங்களில் இரட்டை நந்திகளும் உள்ளன.

"இத்தகைய அரிய சிற்பத்தை வேறு நகரச் சிவாலயங்களில் காண்பது அரிது" எனத் தெரிவிக்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

பரிவாரத் தெய்வங்களை வழிபடும் வகையில் திருச்சுற்று மாளிகை உள்ளது. இதில் 42 சித்திரக்கால்த் தூண்கள் உள்ளன.

உயர்ந்த மேடை மீது சோமாஸ்கந்தர் மற்றும் தனி அம்மனின் உலோகச் சிலைகள் உள்ளன. இவை வழிபாட்டில் உள்ளன.

இச் சன்னதியை அடுத்து விநாயகர் சன்னதி உள்ளது. இவர் நான்கு கரங்களுடன் இடப்புரி விநாயகராவார்.

இதனை அடுத்த நீண்ட மேடையில் விநாயகர், சந்திரசேகரர், சந்திரசேகர அம்மன், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோரின் உலோகச் சிலைகள் வழிபாட்டில் உள்ளன.

நான்கு கரங்களுடன் மயில் வாகனத்தின் முன்பு நின்ற கோலத்தில் தனிச் சன்னதியில் சுப்பிரமணியர் உள்ளார். அவரின் இரு பக்கங்களிலும் வள்ளி - தெய்வானை உள்ளனர்.

இதனை அடுத்து மகாலெட்சுமி சன்னதி உள்ளது. மகாலெட்சுமி நான்கு கரங்களுடன் உள்ளாள்.

பள்ளியறையின் நடுவே கேடக ஊஞ்சலில் பள்ளியறை அம்மன் நின்ற கோலத்தில் காட்சி தருகிறாள். திருவனந்தல், காலைச் சந்தி, அர்த்த சாமம் ஆகிய பூசைக் காலங்களில் பள்ளியறை திறக்கப்பட்டுத் தேவிக்குப் பூசை நடைபெறுகிறது.

வாகன அறையில் வாகனங்கள் உள்ளன.

## ஆவுடையநாயகி அம்மன்

மகா மண்டபத்தின் வடக்கே தென் திசையில் அம்மன் கோவில் உள்ளது. இக் கோவிலில் கருவறையும், அர்த்த மண்டபமும் உள்ளன. அம்மனின் பெயர் ஆவுடைய நாயகி.

உயர்ந்த பீடத்தில் தாமரை ஆசனத்தில் நான்கு கரங்களுடன் அம்மன் உள்ளாள். மேல் வலக்கையில் தாமரை மொட்டுள்ளது. இடக்கையில் நீலோற்பவ மலர் உள்ளது. கீழ் வலக்கை அபய முத்திரை காட்டுகிறது. இடக்கை வரத முத்திரை காட்டுகிறது.

தலையில் சடை மகுடம், காதில் மகர குண்டலங்கள், கழுத்தில் பொட்டு மணி, மங்கல நாண், கண்டசரம், சரப்பள்ளி, மார்பின் ஊடே மெல்லிய புரிநூல் அணி செய்ய, மார்பில் கச்சை இன்றி அம்மன் காட்சி தருகிறாள். அடி முதல் முடி வரை அணிகலன்கள் அழுகு செய்ய அம்மன் அருள் பாலிக்கிறாள்.

"இது பிற்காலப் பாண்டியர் காலத்தது. இத் தலத்து ஆவுடைய நாயகி கடந்த 700 ஆண்டுகளாகப் புகழோடும் பெருமையோடும் விளங்கி வருகிறாள். இக்கோவிலில் உள்ள பழைய சிற்பங்களில் ஆவுடைய நாயகி குறிப்பிடத்தக்கது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

அர்த்த மண்டப வாயில்களைத் திருநிலைக் கால்களும், அரைத்தூண்களும், கஜலெட்சுமியின் புடைப்புச் சிற்பங்களும் அலங்கரிக்கின்றன.

அம்மன் கருவறையிலிருந்து வெளியேறும் அபிஷேக நீர் சிம்ம வாயினை உடைய கோமுகியிலிருந்து வெளியேறுகிறது.

இரு தளத்தை உடைய விமானம் உள்ளது. அதில் அழகிய சுதை உருவங்கள் உள்ளன. முதல் தளத்தின் வடக்கு, தெற்கு, மேற்கு ஆகிய மூன்று திசைகளிலும் அம்மனின் சுதை உருவங்கள் உள்ளன. இவ்வாறே இரண்டாம் தளத்திலும் உள்ளது. இங்கு பெண்கள் விமானம் தாங்கிகளாக அமைக்கப்பட்டுள்ளனர்.

கர்ணக் கூடங்களின் முன்புறம் திசைப் பெண்கள் உள்ளனர்.

பஞ்சரக் கால்களின் முன்புறம் பிராமி, மகேஸ்வரி, இந்திராணி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, சாமுண்டி முதலிய சப்த மாதர்கள் நின்ற கோலத்தில் உள்ளனர்.

வேதிப்பட்டையில் வாளேந்திய பெண் பூதங்கள் சுதை வடிவில் உள்ளன.

எட்டு இரட்டை நந்திகள் காணப்படுகின்றன.

அம்மன் கோவில் விமானம் செங்கல்லும், காரையும் கொண்டு கட்டப்பட்டுள்ளது.

## இராச கோபுரம்

திருமதிலின் கிழக்கு வாயிலில் உயர்ந்து நிற்கும் இராசகோபுரம் உள்ளது. இதில் ஐந்து நிலைகள் உள்ளன. பிரஸ்தரம் வரை வெள்ளைக் கல்லும், அதன்மேல் செங்கல்லும், காரையும் கொண்டு கட்டியுள்ளனர்.

ஒவ்வொரு நிலையிலும் தெய்வ உருவங்கள், தேவர்கள், முனிவர்கள், வானவர்கள், அடியார்கள், கானவர்கள், கந்தர்வர்கள், மானிடர்கள், எண்திசைக் காவலர்கள், கோபுரம் தாங்கிகள், விலங்குகள், பறவைகள் முதலியன சுதை வடிவில் வடிக்கப் பட்டுள்ளன.

## பதினாறுகால் மண்டபம்

இராச கோபுரத்தின் முன்புறம் பதினாறுகால் மண்டபம் உள்ளது. வரிசைக்கு நான்கு தூண்கள் வீதம் நான்கு வரிசைகளில் பதினாறு தூண்கள் உள்ளன. எனவே இது பதினாறுகால் மண்டபம் என அழைக்கப்படுகிறது.

தூண்களின் சதுரப் பட்டைகளில் சைவ, வைணவ தெய்வ உருவங்கள், கிராம தெய்வங்கள், கொடிக்கருக்கு, இலைக்கருக்கு, பூக்கள் முதலியன புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

இத் தூண்களின் மேல் இரு தலைகளை உடைய புஷ்ப பொதிகைகள் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

ஆண்டுதோறும் திருவிழாக் காலங்களில் பஞ்சமூர்த்திகளைக் கொண்டு வந்து இம் மண்டபத்தில் வைத்து அலங்காரம் செய்வர். பின்னர் புறப்பாடு செய்வர். இதனைப் பொதுமக்கள் காணும் வகையில் மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

இக் கோவிலில் பாலாலயம் செய்வதற்கு முன்னால் நிரந்தரத் தேவையைக் கருதி இம் மண்டபத்தைக் கட்டினர்.

## சிற்பங்கள்

கோவிலின் கருவறைப் புறச்சுவரில் உள்ள தேவகோட்ட மாடங்களில் தெற்கே தட்சிணாமூர்த்தியும், மேற்கே லிங்கோத்பவரும், வடக்கே நான்முகனும் உள்ளனர்.

இக் கோவிலில் இரண்டு தட்சிணாமூர்த்தி வடிவங்கள் வழிபாட்டில் உள்ளன. அவற்றில் ஒன்று சிறிய வடிவம். மற்றொன்று பெரிய வடிவம்.

உருவில் தட்சிணாமூர்த்தி ஆலமரமும், சனகாதி முனிவர்களும் இன்றித் தனித்துக் காணப்படுகிறார். இவர் திருச்சுற்றுப் பிரகாரத்தின் தென்மேற்கில் உள்ளார்.

பெரிய உருவத் தட்சிணாமூர்த்தி கருவறை வெளிச்சுவர்ப் பக்கம் உள்ளார். இவர் ஆலமரத்தின் கீழ் அமர்ந்து சனகாதி முனிவர்களுக்குத் தத்துவம் கூறும் நிலையில் கருங்கல்லில் வடிக்கப்பட்டுள்ளார். நான்கு கரங்கள் உள்ளன. மேல் வலக்கையில் படமெடுத்தாடும் நாகமும், இடக்கையில் அனல் தண்டும் உள்ளது. கீழ்வலக் கை அக்கமாலை ஏந்தி சின் முத்திரை காட்ட, இடக்கை சுவடி ஏந்தி உள்ளது.

சடை மகுடமும், பல்வேறு அணிகலன்களும் அணிந்துள்ளதாக இச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது.

திருவடியின் கீழ் அபஸ்மாறன் உள்ளான்.

ஆலமரமும், கிளைகளும், அடர்ந்த இலைகளும், விரிந்த மரமும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளன.

இக் கோவில் தட்சிணாமூர்த்திச் சிற்பம் பிற கோவில்களிலிருந்து வேறுபட்டுள்ளது. அதாவது தட்சிணாமூர்த்தியின் முதுகுப் பகுதியும், ஆலமரத்தின் தண்டுப் பகுதியும் சேர்ந்தே இருக்கும். ஆனால், இங்கே அவை இரண்டும் தனித்தனியே தோன்றும் வண்ணம் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளது.

"இது நகரத்தார் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

முதல் திருப்பணியின்போது இவர் பிரதிஷ்டை செய்யப் பெற்றார்.

அடியும் முடியும் காணா அண்ணலாக அண்ணாமலையார் லிங்கத்தில் காட்டப்பட்டுள்ளார். அன்னமும், வராகமும் காட்டப்பட்டுள்ளன. நான்கு கரங்களை உடைய இச் சிற்பம் முதல் திருப்பணியின்போது பிரதிஷ்டை செய்யப் பெற்றது.

நான்முகன் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். மேல் இரு கரங்களில் அக்க மாலையும், கெண்டியும் உள்ளன. கீழ் இரு கரங்கள் அபய முத்திரையும், வரத முத்திரையும் காட்டுகின்றன. நான்கு முகங்கள் உள்ளன. பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது.

"இச் சிற்பத்தில் குறிப்பாகக் காணத்தக்கவை நான்முகனின் மார்பை அலங்கரிக்கும் முத்துச் சரமாலை. இது நகரத்தார் கலையை அடையாளம் காட்டும் அணியாக விளங்கக் காண்கிறோம்" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

அர்த்த மண்டபத்தின் புறச்சுவர் மாடத்தில் உயர்ந்த இருக்கையில் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் விநாயகர் சிற்பம் உள்ளது. மேல்வலக் கையில் மழு உள்ளது. இடக்கையில் பாசக்கயிறு உள்ளது. கீழ் வலக்கையில் தந்தம் உள்ளது. இடக்கையில் மோதகம் உள்ளது. பல்வேறு அணிகலன்கள், துதிக்கையில் ஒற்றை மணி முதலியன காட்டப்பட்டுள்ளன.

அர்த்த மண்டபத்தின் வடக்கில் விஷ்ணு துர்க்கையின் சிற்பம் உள்ளது. இச் சிற்பம் உயர்ந்த பீடத்தில் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளது. மேல் இரு கைகளில் ஆழியும், சங்கும் உள்ளன. கீழ் வலக்கை அபய முத்திரை காட்ட, இடக்கை ஊரு முத்திரையைக் காட்டுகிறது. அணிகலன்கள் பல உள்ளன.

"பொதுவாகப் பண்டைய ஆலயங்களில் பெரும்பாலும் துர்க்கையின் திருவடிக்கீழ்க் காட்டெருமையின் தலை காட்டப்படுவது வழக்கம். பிற்காலத்தில் எருமைத் தலையின்றி சங்கு, சக்கரம் ஏந்திய நிலையில் விஷ்ணு துர்க்கையைக் காண முடிகிறது. இத்தகைய வடிவத்தைப் பிள்ளையார்பட்டி முதலிய நகரக் கோவில்களில் இன்றும் காணலாம். இவ்வகையில் சூரக்குடிச் சிற்பமும் ஒத்த அமைப்பும், அழகும் பெற்றுத் திகழ்கிறது" எனத் தெரிவிக்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

ஐந்து விநாயகர் சிற்பங்கள் இக் கோவிலில் உள்ளன. இடம்புரி விநாயகர் நான்கும், வலம்புரி விநாயகர் ஒன்றும் உள்ளது. இதில் ஒருவர் துவார கணபதியாவார்.

நகரத்தாரின் இஷ்ட தெய்வமான தண்டாயுதபாணி துவார தண்டாயுதபாணி என்றழைக்கப்படுகிறார்.

சிவன் சன்னதியில் இரு துவார பாலகர்கள் உள்ளனர். அம்மன் சன்னதியில் இரு துவார சக்திகள் உள்ளனர்.

பரிவார தெய்வமான சூரியனின் சிற்பம் உள்ளது.

"இச் சிற்பத்தின் உருவ அமைதி, நிற்கும் நிலை, எடுப்பான தோற்றம், ஆடை அணிகளின் தன்மை யாவும் கொண்டு நகரத்தார் காலச் சூரியனின் கலை வடிவமாக இதனைக் கருதலாம்" எனக் கூறுகிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

சந்திரனின் சிற்பம் உள்ளது.

நான்கு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் சண்டிகேசுவரர் உள்ளார். மேல்வலக் கையில் மழு உள்ளது. இடக்கையில் பாசக்கயிறு உள்ளது. கீழ் வலக்கை அபய முத்திரையைக் காட்ட, இடக்கை வரத முத்திரையைக் காட்டுகிறது.

"பொதுவாகச் சண்டிகேசுவரரின் சிற்ப வடிவங்கள் இரண்டு கைகளுடன் அமர்ந்த கோலத்தில் காட்டப்படும். இரு கரங்களில் வலக்கரம் கோடாலியை ஒத்த மழுவைத் தாங்கியும், இடக்கரம் தொடைமீது அமைந்தும் காணப்படுவது இயல்பு. அவ்வாறே அவரது தலையை வனப்புடன் விரிந்த ஜடாபாரம் என்னும் தலைக்கோலம் அலங்கரிக்கும். ஆனால், சூரக்குடி சிவாலயத்தில் உள்ள சண்டிகேசுவரர் உருவம் வேறுபட்டு விளங்குவதைக் காண்கிறோம். இவ்வாறு நான்கு கரங்களைக் கொண்ட சிற்பங்களைக் காண்பது மிக அரிது. அவ்வகையில் சூரக்குடிச் சதுர்புஜ சண்டிச் சிற்பம் சிறப்புப் பெறுகிறது. இவ் உருவத்தின் அமைப்பும், அழகும், அளவு முறையும், ஆடையும், அணிகளும் நகரத்தார் கலையை வெளிப்படுத்துவன" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

இக் கோவிலில் இரண்டு பைரவர் சிற்பங்கள் உள்ளன. ஒன்று பழமையானது. மற்றொன்று நகரத்தார் திருப்பணியின்போது செய்து வைத்தது.

இவ் ஊரில் இருந்த பழைய சிவாலயத்தில் இருந்த பைரவர் இக் கோவிலின் திருச்சுற்று மாளிகைப் பத்தியில் உள்ளது.

தாமரைப் பீடம், நான்கு கரங்கள், ஆயுதம் தாங்கிய கரங்கள், நின்ற கோலம், அச்சுறுத்தும் வகையில் சிற்பம் எனப் பழைய பைரவர் காட்சி தருகிறார். மேல் வலக்கையில் உடுக்கை உள்ளது. இடக்கையில் ஆடும் நாகம் உள்ளது. கீழ் வலக்கையில் கதாயுதம் உள்ளது. இடக்கையில் கபாலம் உள்ளது. இக் கோலத்தில் பைரவர் காட்சி தருகிறார். கீழ் இடக்கை சிதைந்துள்ளது. ஆடை அணியாப் பைரவரைச் சுடர்முடி மகுடமும், ஆடும் நாகமும், இளம் பிறையும், முப்புரி நூலும், அரவ அரைஞாணும், அணி செய்கின்றன. பின்புறம் நாய் வாகனம் உள்ளது.

"பெரும்பாலும் பைரவரின் கரங்களில் உடுக்கை, பாசம், திரிசூலம், கபாலம் ஆகிய கொடிய ஆயுதங்கள் காட்டப்படுவது மரபு. ஆனால்; இங்குள்ள பைரவரின் கீழ் வலக்கை சூலமின்றிக் கதாயுதத்தோடு காட்டப்பட்டுள்ளது. அவ்வகையில் இச் சிற்பம் சிறப்புப் பெறுகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : சூரக்குடிக் கோவில்)**

அழகு மிளிரும் ஊர்த்துவத் தாண்டவர் சிற்பம் உள்ளது. எட்டுக் கரங்களுடன் தாண்டவமாடும் நிலையில் இச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. உடுக்கை, தீச்சுடர், மான், மழு, அம்பு, வில், மணி முதலிய ஆயுதங்களைக் கரங்களில் காட்டியுள்ளனர். முன் வலக்கரம் அபய முத்திரையைக் காட்டுகிறது. முயலகன் கீழே விழுந்து கிடக்கிறான்.

ஆடும் பெருமானின் ஆடலுக்கு ஏற்பக் கைத்தாளம் இசைக்கும் காரைக்கால் அம்மையார் சிற்பம் உள்ளது.

நந்தியெம்பெருமான், நான்முகன், திருமால், நடனமாடும் காளி, நால்வர், நவக்கிரக மண்டலம், பழைய தட்சிணாமூர்த்தி, காசி விஸ்வநாதர், விசாலாட்சி, நாகர், பிரகார விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, மகாலெட்சுமி முதலிய சிற்பங்கள் உள்ளன.

"கொடிய ஆயுதங்களைப் பற்றி ஆடும் காளியின் வேகம், சிற்பத்தின் ஒவ்வோர் அசைவிலும் காணப்படுகிறது. ஆடும் காளியின்

கீழ் விழுந்து கிடக்கும் அசுரனின் உருவம் இங்கு காட்டப்படவில்லை. எனவே, இரணியூர் இராச கோபுரத்தில் உள்ள காளிக்கூத்துச் சிற்பத்திலிருந்து இவ் உருவம் மாறுபட்டுள்ளது. சிவனை நோக்கி ஆடும் காளியின் முகத்தை நேராகச் சீற்றத்தோடு படைத்துள்ள சிற்பி, அம் முகத்தைப் பக்கவாட்டில் காணும்போது துயரம் தோய்ந்த விழிகளோடு தோல்வியைத் தழுவும் நிலையில் காட்டி உள்ள பாங்கு போற்றுதற்குரியது" எனத் தெரிவிக்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

இங்கு கோள்கள் ஒன்பதும் இரண்டு அல்லது நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் உள்ளன.

சுவாமி சன்னதி முக மண்டபத் தூணில் உமையவள், சிங்கம், கொடிக்கருக்குகள், பூரணகும்பம், அன்னம், ஆடவன், சுந்தரர், பிரமன், சூரியன், காளிங்க நர்த்தனன், சஞ்சீவிராயர், கருப்பண்ணசாமி, இரட்டைக்கிளிகள், இரட்டை நாகம், தண்டாயுதபாணி, யாளி, மந்தி, மாணிக்கவாசகர், இருகை காளி, சந்திரன், தேசிகநாதர் முதலிய சிற்பங்கள் உள்ளன.

மேற்சுற்றுப் பிரகாரத் தூண்களில் அழகிய சிற்பங்கள் உள்ளன. இவை சிறிய உருவங்களாக வடிக்கப்பட்டுள்ளன.

"இச் சிற்பங்கள் ஏனைய நகரக் கோவில் சிற்பங்களைவிடக் கலைவளம் குறைந்திருப்பினும், அந் நூற்றாண்டுகளில் வளர்ந்த கலையை அடையாளம் காணத் துணைச் செய்கிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

புடைப்புச் சிற்பங்கள் பல பதினாறுகால் மண்டபத்தில் உள்ளன.

இக் கோவிலில் பெரியதும், சிறியதுமாக 10 விமானங்களும், 2 இராசகோபுரங்களும் உள்ளன. இவற்றில் அழகிய சுதைச் சிற்பங்கள் உள்ளன. இராச கோபுரத்தில் சிவபெருமானின் பல்வேறு வடிவங்கள் உள்ளன. திருமாலின் பத்து அவதாரங்கள், எண்திசைக் காவலர்கள், எட்டு முனிவர்கள், விநாயகர், சுப்பிரமணியர், தண்டாயுதபாணி, துவார பாலகர்கள், விமானம் தாங்கிகள் முதலிய சிற்பங்கள் உள்ளன.

"நகரக் கோவில்களில் சூரக்குடிக் கோவில் இராசகோபுரம் சிற்பங்கள் நிறைந்தது. சீரிய கலைத்திறன் மிக்கது. செட்டிநாட்டுக்

*கலைத்திறனை எடுத்துக் காட்டுபவையாகத் திகழ்கின்றது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.*

(நன்றி : சூரக்குடிக் கோவில்)

*பாதுகாப்பான நிலவறையும், நந்தி சிற்பத்துக்கு மேல் ஐந்து வளையங்களோடு கூடிய கல் சங்கிலியும், சிற்பச் சிறப்புகளாகும்.*

## செப்புத் திருமேனிகள்

*பழைய சேமாஸ்கந்தர், உமை, குமரன், பழைய தனியம்மன், விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சண்டிகேசுவரர், சந்திரசேகரர், சந்திரசேகர அம்மன், உமா சகித சந்திரசேகரர், சிவன், சோமாஸ்கந்தர், பிரியாவிடை, அஸ்திர தேவர், பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர் முதலிய செப்புத் திருமேனிகள் இக் கோவிலில் உள்ளன.*

## வாகனங்கள்

*சுற்றும் குதிரை வாகனம், காளை வாகனம், மயில் வாகனம், பெருச்சாளி வாகனம் முதலிய மர வாகனங்கள் உள்ளன. மர கேடக ஊஞ்சல் பள்ளியறையில் உள்ளது.*

## வழிபாடு

*தினமும் ஐந்து காலப் பூசைகள் நடைபெறுகின்றன. அனைத்துப் பூசைகளும் சிவபெருமானுக்கே நடைபெறுகின்றன. பைரவர் பூசையுடன் அர்த்தசாமப் பூசை நிறைவடைகிறது.*

*ஆண்டுதோறும் வருஷாபிஷேகம் சிறப்பாக நடைபெறுகிறது.*

*1898இல் நடந்த முதல் குடமுழுக்கு ஆனி மாதம் உத்திர நட்சத்திரம் ஆகும். அதை நினைவூட்டும் வகையில் கும்பம் வைத்து ஜபம் செய்து ஆண்டுதோறும் சிறப்பு அபிஷேகம் நடைபெறுகிறது. அன்றிரவு பஞ்சமூர்த்திகள் புறப்பாடு நடைபெறுகிறது.*

*புரட்டாசியில் நவராத்திரி விழா, கார்த்திகையில் திருக்கார்த்திகை விழா, மார்கழியில் ஆருத்ரா தரிசன விழா, தையில் பொங்கல் விழா, மாசியில் சிவராத்திரி விழா, மாதந்தோறும் சதுர்த்தி விழா, பிரதோஷ விழா, தேய்பிறை, அஷ்டமியில் பைரவருக்குப் பூசை முதலிய விழாக்கள் நடைபெறுகின்றன.*

## நிர்வாகம்

*முதலில் 10 ஊர்களைச் சேர்ந்த சூரக்குடி நகரத்தார்கள் கோவில் நிர்வாகத்தைக் கவனித்து வந்தனர். அதன் விவரம் வருமாறு :*

கண்டனூரரார், வேகுப்பட்டியார் - ஒருவகை
கீழச்சிவல்பட்டியார், புதுவயலார் - ஒரு வகை
பள்ளத்தூரார், செவ்வூரார் - ஒரு வகை
காரைக்குடியார், கீழச்சிவல்பட்டியார் - ஒரு வகை
நாட்டரசன்கோட்டையார், பட்ட மங்கலத்தார் - ஒரு வகை

*எனப் பத்து ஊராரும் ஐந்து வகையாக இணைந்து ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு வகையார் கோவில் நிர்வாகத்தைக் கவனித்து வந்தனர்.*

*பின்னர், கண்டனூரர் - வேகுப்பட்டி ஊரார் இருவர் ஓராண்டு நிர்வாகம் செய்வதென்றும், மறு ஆண்டு கீழச்சிவல்பட்டி - புதுவயல் ஊரார் இருவர் நிர்வாகம் பார்ப்பதென்றும் முடிவு செய்து பார்த்து வந்தனர்.*

*1943ஆம் ஆண்டு முதல், கண்டனூரர், வேகுப்பட்டி, பள்ளத்தூரர், செவ்வூர், அரண்மனை சிறுவயல், புதுவயல், காரைக்குடி, கீழச்சிவல்பட்டி, நாட்டரசன்கோட்டை, கண்டரமாணிக்கம் ஆகிய புள்ளிகள் அதிகமாக வாழும் ஊர்களிலிருந்து ஆண்டுக்கு இரு ஊரார் வீதம் இருவர் நிர்வாகம் செய்து வருகிறார்கள்.*

*வருசாபிசேகத்தன்று சுவாமி புறப்பாடு முடிந்த பின் அடுத்த காரியக்காரர் பொறுப்பேற்பார்.*

## கோவில் ஊருணி

*இராச கோபுரத்திற்குக் கிழக்கே கோவில் ஊருணி உள்ளது. ஊருணியின் நான்கு பக்கங்களிலும் படிக்கட்டுகள் கட்டப்பட்டுள்ளன. பக்கத்திற்கு 18 படிக்கட்டுகள் வீதம் 72 படிக்கட்டுகள் உள்ளன. நான்கு பக்கங்களிலும் வெளிமதில்ச் சுவர் செம்புராக் கற்களைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது.*

*இங்கு நகர விடுதி உள்ளது.*

## குடமுழுக்கு விழாக்கள்

*விளம்பி வருடம் ஆனி மாதம் 14ஆம் தேதி (26.6.1898) ஞாயிற்றுக்கிழமை உத்திர நட்சத்திரத்தில் முதல் குடமுழுக்கு விழா நடைபெற்றது.*

சுபானு வருடம் ஆனி மாதம் 25ஆம் தேதி (9.2.1943) வெள்ளிக்கிழமை உத்திர நட்சத்திரத்தில் இரண்டாவது குடமுழுக்கு விழா நடைபெற்றது.

நந்தன வருடம் ஆனி மாதம் 16ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை உத்திர நட்சத்திரத்தில் மூன்றாவது குடமுழுக்கு விழா நடைபெற்றது.

பிரமாதி வருடம் ஆவணி மாதம் 24ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை (9.9.1973) திருவோண நட்சத்திரத்தில் நான்காவது குடமுழுக்கு விழா நடைபெற்றது.

பவ வருடம் ஆனி மாதம் 26ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை (10.7.1994) ஐந்தாவது குடமுழுக்கு விழா நடைபெற்றது.

இக் கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள் கீழ்க்கண்ட 25 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். அதன் விபரம் வருமாறு :

1. அரண்மனை சிறுவயல்
2. ஆவினிப்பட்டி
3. கண்டரமாணிக்கம்
4. கண்டனூர்
5. கல்லல்
6. காரைக்குடி
7. காளையார்மங்கலம்
8. கீழச்சிவல்பட்டி
9. குருவிக்கொண்டான்பட்டி
10. சண்முகநாதபுரம்
11. செவ்வூர்
12. தேனிப்பட்டி
13. நடராசபுரம்
14. நாட்டரசன்கோட்டை
15. நெற்குப்பை
16. பட்டமங்கலம்
17. பள்ளத்தூர்
18. பனங்குடி
19. பனையபட்டி
20. பாகனேரி
21. புதுவயல்
22. பூலாங்குறிச்சி
23. மிதிலைப்பட்டி

24. *விரையாச்சிலை*
25. *வேகுப்பட்டி*

(நன்றி : நகரத்தார் கலைக்களஞ்சியம்)

சூரக் குடிக்கோவில் சூழ்நகரத் தார்மக்கள்
பாரோங்கு பண்புமிகும் பாசமிகும் - பேர்புகழ்சேர்
தேசிகநா தர்உடன்வாழ் ஆவுடைய நாயகியும்
நேசமிகு வாழ்வளிப்பார் நீடு.

- நல்லறக் கவிராயர் சுப.நா.நாகப்பன்







# இரணியூர்க் கோவில்

*நகரத்தார் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் இரணியூர்க் கோவிலும் ஒன்று. இக் கோவில் கி.பி. 714இல் நகரத்தார்களுக்குக் கொடுக்கப்பட்டது.*

*நகரத்தார் சமூக அமைப்பு கோவிலை அடிப்படையாகக் கொண்டது. இவர்கள் கோவிலைத் தழுவிய குடிகள்.*

*ஒவ்வொரு நகரக் கோவிலும் கட்டடக் கலையாலும், ஓவியக் கலையாலும், சிற்பக் கலையாலும் சிறந்து விளங்குபவை. சுருங்கச் சொன்னால் நகரத்தார் கலைப்பாணியை உலகிற்கு எடுத்துக்காட்டும் வரலாற்றுச் சின்னங்களாகும், செட்டிநாட்டுச் சிற்பக்கலைக் களஞ்சியமான இரணியூர் இதில் தலையாயது ஆகும்.*

*நரசிம்ம அவதாரத்தில் இரணியனைக் கொன்ற பாவம் நீங்கத் திருமால் இத் தலத்தில் சிவபெருமானை வழிபட்டதாகப் புராணக் குறிப்பு ஒன்றுள்ளது. அதனால் இவ் ஊர் இரணியூர் எனப் பெயர் பெற்றது.*

*இதனைக் கவிஞர் சித. சிதம்பரம்,*

நரசிம்ம வடிவெடுத்து நகங்களினால்
உடல் கிழித்தே இரணியன்தன்
சிரசு இற்றே கீழ்வீழச் செய்மாலார்
தேடி வந்து சிவனை வேண்டித்
தரிசித்தே அருள்பெற்ற தவத்தின் ஊரே
தாயான சிவபுரத்தாள்
அரசி விழை அனல்ஏந்தி நஞ்சும் உண்டார்
ஆட்சி செயும் இரணியூரே!
..................ஆட்கொண்ட
தேசிகரின் அருளி ஊரே.....

*என்று பாடுகிறார்.*

(நன்றி : நகரக்கோவில் ஒன்பது திருப்பதிகம்)

"இரணியன் வரலாறு கம்ப இராமாயணத்தில் இரணியன் வதைப்படலத்தில் மிகச் சிறப்பாகக் கூறப்பெற்றுள்ளது. இந்த தொன்மையான புராணக் கதை அரிய தத்துவத்தை உள்ளடக்கியிருக்கிறது. ஆணவத்தின் மொத்த வடிவமாக இரணியன் விளங்குகின்றான். பக்தியின் அன்பு உருவமாக பிரகலாதன் விளங்குகின்றான். இரணியன் பெயரை உச்சரிக்கச் சொல்லிச் செய்யும் கொடுமைகள் கணக்கில் அடங்கா. பிரகலாதன் இரணியன் பெயரை உச்சரிக்க மறுக்கிறான். இறைவன் திருநாமத்தைச் சொல்லிப் பிரகலாதன் உயர்ந்த கதையைக் கம்பர் ஓவியமாக்கியுள்ளார். இந்த கம்பச் சித்திரத்தை இரணியூர் சிற்பங்கள் விளக்கிக் காட்டுகின்றன. இரணியன் கதை காவியமாகிறது. காவியத்தை ஓவியத்தில் காண்கிறோம். காவியமும், ஓவியமும் இரணியூரில் களிநடம் புரிகின்றன" என்கிறார் தமிழ்வேள் திரு.ச. மெய்யப்பன்.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

இளையாத்தங்குடிக் கோவிலைச் சேர்ந்த திருவேட்புடையார் என்னும் பிரிவில் மூத்த வழியினர் இரணிக் கோவிலைத் தமக்குரிய கோவிலாகக் கொண்டு வாழலாயினர்.

இதனால் இக் கோவில் நகரத்தார்கள், தங்கள் இசை குடிமானத்தில் "கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராச நாராயணபுரத்தில் இரணியூர் திருவேட்பூருடையார்" என எழுதுகின்றனர்.

இதே போல, இளையாத்தங்குடி கோவிலைச் சேர்ந்த திருவேட்பூருடையார் என்னும் பிரிவில் இளைய வழியினர் பிள்ளையார்பட்டிக் கோவிலைத் தமக்குரிய கோவிலாகக் கொண்டு வாழலாயினர்.

அதனால் பிள்ளையார்பட்டிக் கோவிலாரும், இரணிக் கோவிலாரும் தங்களுக்குள் கொள்வினை கொடுப்பினை செய்து கொள்வதில்லை. திருமணத்திற்குப் பாக்கு வைக்கும்போது தங்கள் கோவிலிலும், இளையாத்தங்குடிக் கோவிலிலும் பாக்கு வைப்பர். இரண்டு கோவிலிலும் இருந்து கோவில் மாலை வரும்.

பண்டைய நாளில் இரணி, இரணியம், மருதங்குடி, இராச நாராயணபுரம் எனப் பல பெயர்களால் இரணியூர் அழைக்கப்பட்டு வந்துள்ளது.

ஆனால் கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் 'இரணியூர்' என்ற பெயரே காணப்படுகிறது.

இரணிய வதைக்குப் பிறகும் சீற்றம் தணியாத நரசிம்மனை இவ் ஊர் இறைவன் ஆட்கொண்டதால், இங்கு உறையும் நாதர் ஆட்கொண்டநாதர் என்று அழைக்கப்படுவதாகத் தலபுராணம் கூறுகிறது.

கல்வெட்டுக்களில் இவ் இறைவனது பெயர் 'ஆட்கொண்ட ஈசுவரமுடையார்', 'ஆட்கொண்ட ஈசுவரமுடைய நாயனார்', 'ஆட்கொண்ட நாதர்' எனக் குறிக்கப்பட்டுள்ளது.

இப் பகுதியைப் பாண்டிய மன்னர்கள் ஆண்டபொழுது, அவர்களது விருதுப் பெயர்களில் ஒன்றான 'இராச நாராயணன்' என்பதை நினைவூட்ட இவ் ஊர் 'இராச நாராயணபுரம்' என அழைக்கப்பட்டது.

பத்துக் கல்வெட்டுக்கள் இரணியூர் பற்றித் தெரிவிக்கின்றன. அவற்றுள் இரணியூர் பத்திரகாளியம்மன் கோவில் கல்வெட்டு மட்டுமே இன்று எஞ்சியுள்ளது. ஏனையவை கோவில் திருப்பணியின் போது மறைந்து விட்டன.

இக் கல்வெட்டுக்கள் ஆட்கொண்ட நாதருக்கு அளிக்கப்பட்ட நிலக்கொடை பற்றியும், இறைவனுக்கு அளித்த நிலங்கள் பற்றியும், பத்திரகாளியம்மன், அஸ்திர தேவர் ஆகிய தெய்வச் சிலைகள் கோவிலுக்குச் செய்து அளித்தமை பற்றியும் விரிவாகக் குறிப்பிடுகின்றன.

இவ் ஊரின் மையத்தில் இயற்கையான சூழலில் கல்லூருணியின் தென்மேற்குப் பகுதியில் இரணியூர்க் கோவில் அமைந்துள்ளது. கோவிலின் கிழக்கே இராச கோபுரம் உள்ளது. நான்கு திசைகளிலும் தேரோடும் வீதிகள் உள்ளன.

சிவன் கோவிலின் மேற்புறம் நீலமேகப் பெருமாள் கோவில் உள்ளது. வடக்கே பத்திரகாளியம்மன் கோவில் உள்ளது. தெற்கே அய்யனார் கோவில் உள்ளது.

இக் கோவில்கள் பெரிய கோவிலின் பொறுப்பில் உள்ளன.

ஆட்கொண்டநாதர் - சிவபுரந்தேவி தேவஸ்தானம் என்பதை "ஆள,சிவ" தேவஸ்தானம் எனக் குறிக்கின்றனர்.

நகரத்தாரின் சிற்பக் கலைக்குக் கருவூலமாக இக் கோவில் விளங்குகிறது. சுருங்கச் சொன்னால் செட்டி நாட்டின் சிற்பக் களஞ்சியம் இக் கோவில்தான்.

கால வெள்ளத்தில் சிதைந்து விட்ட பாண்டியர் காலக் கோவிலின் அடித்தளத்தின் மேலேயே நகரத்தார்கள் இக் கோவிலைக் கட்டியுள்ளனர்.

எழுவன் கோட்டைச் சிற்பிகளின் கலைவண்ணத்தையும், கற்பனை நயத்தையும், கைவண்ணத்தையும் இக் கோவிலில் முழுமையாகக் காணலாம்.

சான்றாக, நம் தேசத் தந்தை மகாத்மா காந்தியைச் சென்னையில் சிற்பக் கலைஞர் ராய் சௌத்திரி தோற்றுவிப்பதற்கு முன்பே, எழுவன்கோட்டைச் சிற்பிகள் இக் கோவிலில் மகாத்மா காந்தி உருவத்தைப் படைத்துள்ளனர்.

மேலும், சுதந்திரப் போராட்டம் உச்ச நிலையில் இருந்தபொழுது, இக் கோவில் கட்டுமானப் பணிகள் நடைபெற்றதால், நகரத்தார்கள் தங்கள் நாட்டுப்பற்றை வெளிக்காட்டும் விதத்தில் இக் கோவிலில் மகாத்மா காந்தியுடன் பாரத மாதா, கதர்க்கொடி முதலிய சிற்பங்களையும் படைத்துள்ளனர்.

விடுதலைப் போராட்டக் காலத்தில் இக் கோவில் திருப்பணி நடந்தது என்பதை இச் சிற்பங்கள் நினைவூட்டுகின்றன. இக் கோவில் குடமுழுக்கு விழா 1944இல் நடைபெற்றது குறிப்பிடத்தக்கதாகும்.

"நகரத்தார் கலை என்பது சோழர், பாண்டியர், விஜயநகரர், நாயக்கர் ஆகிய அரச மரபினர் வளர்த்த கலைப்பாணியின் தொடர்ச்சியே என்றாலும், அது ஒரு வகையில் செட்டிநாட்டு மண்ணின் மணத்தையும், மக்கள் வளத்தையும், படைக்கப்பட்ட காலத்தின் பண்பாட்டையும், வட்டார வளத்தையும், அன்றைய அரசியல் திருப்பங்களையும், சிற்பிகளின் சீரிய சிந்தனைகளையும் வெளிக்காட்டும் கண்ணாடியாக அமைந்து விளங்குகிறது" என நகரத்தார் கலையைத் திரு.மா. சந்திரமூர்த்தி விளக்குகிறார்.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

## கோவில் - கட்டடக்கலை

இக் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம், அம்மன் சன்னதி, நந்தி, பலிபீடம், கொடி மரம்,

திருச்சுற்று, திருச்சுற்று மாளிகைப்பத்தி, பரிவார ஆலயங்கள், வாகன அறை, உற்சவ மண்டபம், பள்ளியறை, அலங்கார மண்டபம், லெட்சுமி மண்டபம், இராச கோபுரம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது.

கருவறை பளபளப்பான சலவைக் கருங்கற்களால் அமைந்துள்ளது. இது தவிர அழுக்கடையாமல் இருக்க சிற்பங்களுக்குப் பதிலாக ஐம்பொன் சிலைகளை நிறுவியுள்ளனர்.

இக் கோவில் முதல் திருப்பணியின்போது அமைக்கப்பட்ட சோமாஸ்கந்தர், நவக்கிரகங்கள், நர்த்தன கணபதி, அண்ணாமலையார், நான்முகன், துர்க்கை ஆகிய தெய்வங்கள் வழிபாட்டில் உள்ளன.

தேவகோட்டங்களில் கற்சிலைகளை வைக்க இயலாத காரணத்தால், உலோகச் சிலையைப் பிரதிஷ்டை செய்துள்ளனர்.

"தமிழகத்திலேயே முதன் முதலாக தேவகோட்டங்களில் உலோகச் சிலைகள் காணப்படுவது இரணியூர்க் கோவிலில் மட்டுமே" எனத் தெரிவிக்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : இரணியூர்க் கோவில்)**

கோவிலின் வெளிப்பிரகாரத்தில் உள்ள முனீசுவரர் வழிபாட்டில் உள்ளார். இவர் பைரவர் சன்னதிக்கு எதிரே பீடமாக உள்ளார்.

கல்லூருணியில் ஊருணி விநாயகர் ஆலயம் உள்ளது.

ஆட்கொண்ட நாதர் கருவறையின் இரு பக்க நிலைகளிலும், சிற்ப வேலைப்பாடுகள் உள்ள அரைத்தூண்கள் உள்ளன. கருமையான பளபளப்பான புறச்சுவர்கள் கருவறையைச் சுற்றி உள்ளன. இதில் சிற்பங்கள் இல்லை.

இக் கோவிலில் விமானம், பீடம், கல், கூரை, கழுத்து, தலை, குடம் என்ற ஆறு பகுதிகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பகுதியும் பல நுணுக்கமான அங்கங்களைப் பெற்று விளங்குகின்றன.

அதிட்டானத்தின் உபானம் எளிமையான அமைப்புடன் உள்ளது. உபானத்தின் மீதுள்ள பத்ம வரி விரிந்த பத்மம், கபோதகம் ஆகியவற்றைக் கொண்டு அமைந்துள்ளது.

"இங்கு பத்ம வரியில் உள்ள இதழ்கள் மடித்த நிலையில் நீர்த்தாரையை ஒத்து அமைக்கப்பட்டுள்ளன. இதனை

அதிட்டானத்தின் கட்டட அமைப்பில் தனிச்சிறப்பாகக் காணலாம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

"பிற்காலப் பாண்டியர் காலக் கட்டடக் கலையில் அதிட்டானத்தில் ஏற்பட்ட புதுமையான அமைப்பு முறை நாயக்கர் காலத்தில் கோவில்களில் மிகுதியாகக் கையாளப்பட்டு இருப்பினும், இம்முறை நகரத்தார் காலத்திலும் தொடர்ந்து வந்துள்ளது. இக் கட்டடக் கலையில் நகரத்தார் பின்பற்றிய பாரம்பரிய கலை மரபின் தொடர்ச்சியினையும் அவர்களது கலை வளர்ச்சியினையும் காட்டுவதாகவும் அமைகிறது" என்று மேலும் தெரிவிக்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

அபிஷேக நீர் யாளியின் வாயிலிருந்து வெளியாகும் வண்ணம் கோமுகி அமைக்கப்பட்டுள்ளது.

கோவிலின் மேல் மட்டத்தில் பெய்யும் மழை நீர் அனைத்தும் ஓடி வர இரும்பு அல்லது சிமெண்டுக் குழாய்கள் வைக்கப்படாமல், வெள்ளைக் கல்லால் ஆன குழாய்களை வைத்துள்ளனர்.

இது இரணியூர்க் கோவில் கட்டடக் கலையின் மற்றொரு சிறப்பாகும்.

தட்சிணாமூர்த்தி சன்னதி அமைந்துள்ள கல் மண்டபப் பகுதி 'தட்சிணாமூர்த்தி கொரடு' என அழைக்கப்படுகிறது. இரு சிம்மங்கள் இம் மண்டபத்தைத் தலையில் தாங்கி நிற்கின்றன. மரத்தில் செதுக்கியதைப் போன்று கல் வேலைப்பாடுகள் உள்ளன.

சுதையால் அமைக்கப்பட்ட தெய்வ உருவங்கள் விமானத்தில் உள்ளன.

அர்த்த மண்டப வாயிலின் மேற்புறம் உள்ள கபோதகக் கூடுகளின் நடுவே கஜலெட்சுமியின் உருவமும், இரு லிங்க வடிவங்களும் உள்ளன.

மகா மண்டபத்தின் நடுவே உள்ள மேடையின்மீது உள்ள நந்தி, பீடம், கண்ணாடி ஆகியன நித்திய வழிபாட்டில் உள்ளன.

மகா மண்டபத்தின் வடக்கே நடராசர் சன்னதி உள்ளது. இது தென்திசை நோக்கி உள்ளது. இங்கு நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர் உருவச் சிலைகள் உலோகத்தில் உள்ளன.

நீண்ட வண்டிக் கூரையை ஒத்த சாலை வடிவில் ஒரு தள விமானம் அமைக்கப்பட்டுள்ளது.

சுவாமி சன்னதியையும், அம்மன் சன்னதியையும், பைரவர் சன்னதியையும் பக்தர்கள் வணங்கும் வகையில் முக மண்டபம் கட்டப்பட்டுள்ளது.

அம்மன் சன்னதியின் எதிரே நவதுர்க்கை மண்டபம் உள்ளது. இங்கு வரிசைக்கு மூன்று தூண்கள் வீதம் ஆறு தூண்கள் உள்ளன.

நாற்பது தூண்கள் உள்ள மேற்சுற்றுப் பிரகாரத்தில் மிருகத்தின் உடலும், அன்னப்பறவையின் தலையும் கொண்ட உருவம் உள்ளது.

பைரவர் சன்னதி விமானம் வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ளது. இங்கு பைரவரின் பல்வேறு வடிவங்கள் வடிக்கப்பட்டுள்ளன. பைரவர் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். மேல் இரு கைகளில் உடுக்கையும், ஆடும் அரவமும் உள்ளது. கீழ் இரு கைகளில் திரிசூலமும், கபாலமும் உள்ளது. பக்கத்தில் வடுக (நாய்) வாகனம் உள்ளது.

சண்டிகேசுவரருக்குத் தனிச் சன்னதி உள்ளது. இச் சன்னதியும் வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ளது. சன்னதியின் நடுவே இடது காலை மடித்து, வலது காலை தொங்கவிட்ட நிலையில் அமர்ந்த கோலத்தில் உள்ளார். இவரின் வலது கையில் கோடாரி உள்ளது.

திருச்சுற்று மாளிகைப் பத்தியில் நான்கு கர்ணக்கால் தூண்கள், ஐம்பத்தெட்டு அணியொட்டிக் கால் தூண்கள், எட்டு சித்திரக்கால் தூண்கள், இரண்டு பிள்ளைக்கால் தூண்கள் என எழுபத்திரண்டு தூண்கள் உள்ளன.

"இங்குள்ள கம்பீரமான கர்ணக்கால் தூண்களும், அணியொட்டிக் கால் தூண்களும், அத் தூண்கள் தாங்கி நிற்கும் சிற்ப வடிவங்களும், சீறிப்பாயும் சிம்மங்களும், நகரத்தார் காலத்தில் வளர்க்கப்பட்ட கட்டடக் கலையை அடையாளம் காட்டும் வகையில் தனித் தன்மையோடு விளங்கக் காண்கிறோம். கோவில் கலையிலும், கட்டடக் கலை நிர்மானிக்கும் ஆற்றலிலும், சைவ

சமயத்திலும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு உள்ள ஈடுபாட்டை இவை தெளிவாகக் காட்டுவதாக அமைகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

திருச்சுற்று மாளிகையின் மேற்கே சோமாஸ்கந்தர், விநாயகர், சுப்பிரமணியர், மகாலெட்சுமி முதலிய தெய்வங்களுக்குத் தனித்தனிச் சன்னதிகள் உள்ளன.

சோமாஸ்கந்தர் சன்னதியின் முகப்பில் கஜலெட்சுமி சிற்பம் உள்ளது. இச் சன்னதியின் இரு பக்கங்களிலும் இரு பணிப் பெண்கள் உள்ளனர்.

நான்கு கரங்களுடன் இடம்புரி விநாயகர் உள்ளார். மேலிரு கைகளில் அங்குசமும், பாசமும் உள்ளது. கீழிரு கைகளில் தந்தமும், மோதகமும் உள்ளது. துதிக்கையிலும் மோதகம் உள்ளது.

நான்கு கரங்களுடன் மயில் வாகனத்தில் அமர்ந்துள்ளார் சுப்பிரமணியர். மேலிரு கைகளில் வச்சிரப் படையும், சக்திப் படையும் உள்ளது. கீழிரு கைகளில் அபய வரதமளிக்கிறார். மலர் ஏந்திய வள்ளி, தெய்வானை அவரின் இருபுறமும் உள்ளனர்.

"இவ்வாறு முருகப் பெருமானின் தேவியர் இருவரும் தனித்தனியே மயில் வாகனத்தில் அமர்ந்து காட்சியளிப்பது பண்டையச் சிற்பங்களில் காண்பது அரிது. இது முந்தைய நகரத்தார் சிற்பக் கலையின் சிறப்பம்சமாகக் கருதலாம்" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

நான்கு கரங்களுடன் மகாலெட்சுமி வீற்றிருக்கிறாள். மேற் கரங்களில் மலர்கள் உள்ளன. கீழ்க் கைகள் அபய முத்திரையைக் காட்டி அருள் செய்கின்றன. தேவியின் இருபுறமும் நீர்சொரியும் யானைகள் உள்ளன.

பள்ளியறை அம்மன் கேடக ஊஞ்சலில் நின்ற கோலத்தில் உள்ளாள். திருவனந்தல், காலை சந்தி, இரவு சந்தி (அர்த்தசாமம்) ஆகிய பூசை நேரங்களில் பள்ளியறை திறக்கப்பட்டு பூசை நடைபெறுகிறது.

பள்ளியறையை ஒட்டி சிறப்பான வாகன அறை உள்ளது.

"இத்தகைய வாகன அறையைச் செட்டிநாட்டுப் பகுதியில் எங்கும் காண்பது அரிது. ஒன்பது நகரக் கோவில்களில் இரணியூரில் மட்டுமே இத்தகைய தனிச் சிறப்புள்ளது" எனப் புகழ்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

**(நன்றி : இரணியூர்க் கோவில்)**

சிற்பங்கள் நிறைந்த அணியொட்டித் தூண்கள் தாங்கும் அலங்கார மண்டபம் உள்ளது. திருவிழாக் காலங்களில் தெய்வ உருவங்களை அலங்காரம் செய்ய இம் மண்டபத்தைக் கட்டியுள்ளனர்.

பிற கோவில்களில் காணப்படாத நிலவறை இங்குள்ளது. ஓரடி இடைவெளி விட்டு இரண்டு கற்சுவர்களால் இந் நிலவறை கட்டப்பட்டுள்ளது. இடையில் ஓரடி இடைவெளியில் நீர் நிரப்பப்பட்டதும், இவ்அறை குளுகுளுப்பாக அமையும். கருங்கல்லினைக் குடைந்து செய்யப் பெற்ற கற்சாளரமும், கற்குழாய்களும் இக் கோவிலில் மட்டுமே காணக்கூடியவை.

**(நன்றி : நகரத்தார் கலைக் களஞ்சியம்)**

## அம்மன் கோவில்

தென் திசையை நோக்கியவண்ணம் அம்மன் சன்னதி உள்ளது. அம்மன் கோபுரம் நகரத்தாரின் இரண்டாவது திருப்பணியின்போது கட்டப்பட்டது. இங்கு கருவறையும், அர்த்த மண்டபமும் உள்ளது.

அம்மனின் பெயர் சிவபுரந்தேவி. தேவி தாமரைப் பீடத்தில் இரண்டு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளாள். காதுகளில் மகரக் குண்டலங்கள், கழுத்தில் மங்கல நாண், கல்பதித்த கரப்பளி, கைகளில் வளையல்கள், மார்பில் நூல், இடையில் கச்சை, காலில் பாரசம் அணிந்து அம்மன் அருள் பாலிக்கிறாள்.

அர்த்த மண்டப வாயிலில் இரு பணிப் பெண்கள் சாமரம் வீசக் கஜலெட்சுமி உள்ளாள். விநாயகர், சுப்பிரமணியர் உருவங்களும் உள்ளன.

அர்த்த மண்டப அரைத்தூண்களின் அடிப்பட்டையில் விநாயகர், சுப்பிரமணியர், துவார சக்தி, சங்கு ஊதும் பூத கணங்கள், சாமரம் ஏந்திய பணிப்பெண்கள், பிராமி, மகேசுவரி, இந்திராணி, வைஷ்ணவி, கௌமாரி, வராகி, சாமுண்டி முதலிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

ஐந்து அசுரர்களைப் படுக்கையாக அடுக்கி, அவர்கள்மீது தேவியின் வடிவம் அமர்ந்துள்ளது போல வடிக்கப்பட்டுள்ளது. பல்வேறு ஆயுதங்களைத் தாங்கிய தேவியின் பல்வேறு வடிவங்கள் உள்ளன.

பார்வதி தேவி தம் இளைய மகன் முருகனை இடுப்பில் ஏந்திக்கொண்டு, தம் மூத்த மகன் விநாயகனை நடக்க வைத்து அழைத்து வரும் அற்புதச் சிலையும் உள்ளது.

"இது வழுவூர், திருவாரூர் போன்ற இடங்களில் காணப்படும் செப்புப் படிமங்களுடன் ஒப்பிடத்தக்கது. செட்டிநாட்டு சீரிய கலைத்திறனையும், அவர்கள் போற்றிக் காத்து வந்த கலைப்பாணியையும், இது வெளிக்காட்டுகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

அம்மன் கோபுரம் வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. திருநிலைக்கால்கள் ஒரே கல்லால் செதுக்கப்பட்டுள்ளன. பக்கச் சுவரில் கொடிப் பெண்கள் உள்ளனர்.

ஏனைய நகரக் கோவில்களைப் போலவே கல் வேலைப்பாடுகள் மர வேலைப்பாடுகளைப் போலவே இக் கோவிலிலும் காணப்படுகிறது.

ஐந்து நிலைகளை உடைய இக் கோபுரத்தில் தெய்வ உருவங்கள், கோபுரம் தாங்கும் பதுமைகள், சிவ கணங்கள் முதலியன அமைக்கப் பட்டுள்ளன.

அம்மன் கோபுரத்தின் இரண்டாவது தளத்தில் இரு துவார சக்திகளும், இரு பணிப் பெண்களும் உள்ளனர்.

"இப் பணிப் பெண்களின் ஆடைகள் மற்றும் தலைக்கோலங்கள், இவைகளைக் காணும்போது நகரத்தார் காலச்சிற்பங்களில் ஐரோப்பியர் காலத்து நாகரிகத் தாக்கங்களைக் காண முடிகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

மூன்றாவது தளத்தில் கைக் குழந்தையைத் தம் தொடையில் உட்கார வைத்து பல்வேறு காட்சிகளைக் குழந்தைக்குக் காட்டி மகிழும் கோபுரம் தாங்கிய தாயின் உருவம் உள்ளது. வாளுடன்

நிற்கும் வீரனையும், கையில் புறாவுடன் வீரனைப் போருக்கு அனுப்பும் தலைவியையும் உருவமாக வடித்துள்ளனர்.

இரண்டு கர்ணக்கால் தூண்களும், ஆறு அணியொட்டிக் கால் தூண்களும், ஆக எட்டுத்தூண்கள் கோபுரத்தின் முகப்பு மண்டபத்தில் உள்ளன. இத் தூண்களில் தெய்வ உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

## இராச கோபுரச் சிற்பங்கள்

வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ள இக் கோவில் இராச கோபுரம் கட்டடக் கலைத்திறனும், சிற்பக் கலைத்திறனும் சிறந்து விளங்கும்படி கட்டப்பட்டுள்ளது.

இராச கோபுரச் சுவரைச் சுற்றிலும் எழில் மிகுந்த சிற்பங்களை அமைத்துள்ளனர்.

துவார பாலகர், சுப்பிரமணியர், மாணிக்கவாசகர், இந்திரன், முப்புரம் எரித்த விரிசடைக் கடவுள், வீரபத்திரர், ஈசானமூர்த்தி, கௌமாரி அம்மன், அகோரமூர்த்தி, பிரமன் முதலிய சிற்பங்கள் வலப்பக்கச் சுவரில் உள்ளன.

துவார பாலகர், கூத்தாடும் விநாயகர், துர்வாசர், அக்கினிமூர்த்தி, திருவேங்கமுடையான், மாதொருபாகர், அட்டபுயக்காளி, பைரவர், எமதருமன், தட்சிணாமூர்த்தி முதலிய சிற்பங்கள் இடப்பக்க வெளிப்புறச் சுவரில் உள்ளன.

இரண்ய சம்ஹாரம், கல்யாண சுந்தரர், வருணன், மகாவிஷ்ணு, சரபமூர்த்தி, நிருதி, மன்மதன், ரதி, வாயு, காளிக்கூத்து, ஊர்த்துவ தாண்டவர், மகிஷாசுரமர்த்தினி, மதுரைவீரன், குபேரன் ஆகிய சிற்பங்கள் உட்புறமுள்ள வலப்பக்கச் சுவரில் உள்ளன.

துவார பாலகர் நான்கு கரங்களுடன் உள்ளார். கால்களைச் சிம்மத்தின் மீது வைத்துள்ளார். கரங்களில் அங்குசம், பாசம், நீண்ட கதாயுதம் உள்ளது.

நான்கு கரங்களுடன் மயில் வாகனத்தில் அமர்ந்துள்ள சுப்பிரமணியர் மேற்கரங்களின் சக்திப்படையும், வச்சிரப் படையும் உள்ளன. கீழ்க்கரங்களில் அம்பும், வில்லும் உள்ளன.

மாணிக்கவாசகர் கௌபீனம் அணியாமல் ஆடையுடன் நின்ற கோலத்தில் உள்ளார்.

இந்திரன் ஐராவதத்தின் மீது அமர்ந்துள்ளார். நான்கு கரங்கள் உள்ளன. தனக்கு முன்னால் உள்ள அழகிய பெண்ணின் இடையை ஐராவதம் அன்போடு தழுவி நிற்கிறது.

நான்கு கரங்களில் ஆயுதம் ஏந்திப் போருக்குச் செல்லும் நிலையில் திரபுரம் எரித்த விரிசடைக் கடவுள் காட்டப்பட்டுள்ளார்.

எட்டுக் கரங்களில் ஆயுதம் தாங்கி எடுப்பான தோற்றத்துடன் கம்பீரமாக வீரபத்திரர் காட்டப்பட்டுள்ளார். இவரால் தாக்கப்பட்ட அசுரன் கத்தியையும்,கேடயத்தையும் கீழே போட்டுவிட்டு விழுந்து கிடக்கிறான்.

எண்திசைக் காவலர்களில் ஒருவராகிய ஈசானமூர்த்தி நான்கு கரங்களுடன் காளை வாகனத்தில் அமர்ந்துள்ளார்.

சிவனின் தேவியான கௌரி இரு கரங்களுடன் நின்ற நிலையில் உள்ளாள். பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள். அமைதி தவழும் அன்னை இயற்கையாக வடிக்கப்பட்டுள்ளாள்.

அசுரன் ஒருவனைக் கீழே வீழ்த்தி அசுரனின் காலிலும், உடலிலும் தம் கால்களை ஊன்றி, நீண்ட திரிசூலத்தால் அசுரனை அழித்த நிலையில் அகோரமூர்த்தி காட்டப்பட்டுள்ளார். அவரின் எட்டுக் கரங்களிலும் ஆயுதங்கள் உள்ளன.

நான்கு கரங்களுடன் பிரமன் காட்டப்பட்டுள்ளார் மூன்று தலைகளை மகுடம் அலங்கரிக்கிறது. நான்காவது தலை பின்புறம் உள்ளது.

"தமிழ்நாட்டில் பிரம்மனின் சிற்பங்கள் குறைவாகவே காணப்படுகிறது. அதிலும் இங்கு யோக நிலையில் காணப்படும் சிற்பம் நகரத்தார் சிற்பச் சிறப்பில் வைத்து எண்ணத்தக்கது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

விநாயகரின் நான்கு கரங்களில் அங்குசமும், பாசமும், எழுத்தாணியும், மோதகமும் உள்ளன. ஒடுங்கிய யானை முகம் கொண்டு கூத்தாடும் நிலையில் காட்டப்பட்டுள்ளார்.

கதிரவனை வணங்கும் நிலையில் துர்வாசர் காட்டப் பட்டுள்ளார்.

"தமிழ்நாட்டில் துர்வாசர் சிற்பம் வெகு குறைவாகவே காணப்படுகிறது. அவ்வகையில் இரணியூர்ச் சிற்பம் சிறப்பானது. இக் கோவில் லட்சுமி மண்டபத்தில் தீட்டப்பட்டுள்ளது. துர்வாசர் ஓவியத்துடன் ஒப்பிடத்தக்கது. இவ் உருவம் நகரத்தார் கலைப்பாணியாகும்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

எண்திசைக் காவலர்களில் அக்கினித் தேவரும் ஒருவர். ஆட்டுக்கிடா வாகனத்தில் அமர்ந்த கோலத்தில் காட்டப்பட்டுள்ளார். நான்கு கரங்கள் உள்ளன. அனல் ஏந்திய இரண்டு தலைகளுடன் காட்டப்பட்டுள்ளார். அவரின் திருவடியில் ஆடும் அரவம் உள்ளது.

நீலமேனி நெடியோன் ஆன திருமால் ஆழியும், சங்கும், கதையும் கரங்களில் ஏந்தி அபயமளிக்கிறார். நெற்றியில் திருமண் இட்டுள்ளார். அருள் பாலிக்கும் கண்களுடன் வடிக்கப்பட்டுள்ளார்.

மாதொரு பாகராகிய அர்த்தநாரீசுவரர் சிற்பங்கள் இரண்டு இங்குள்ளன. நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். சிவனையும், உமையையும் ஒரே முகத்தில் காட்ட சிற்பி எடுத்துக்கொண்ட முயற்சி இச் சிற்பத்தில் நன்கு தெரிகிறது.

"நகரத்தார் கலையான இச் சிற்பத்தைக் காணும்போது,

> தோலும் துகிலும் குழையும் அருள்தோடும்
> பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
> சூலமும் தொக்க வளையும் உடை தொன்மைக்
> கோலமே நோக்கி, குளிர்ந்து ஊதாய்க் கோத்தும்பி

என்ற மாணிக்கவாசகர் பாடல் நினைவுக்கு வருவ"தாகத் திரு. மா. சந்திரமூர்த்தி கூறுகிறார்.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

அசுரனைக் கீழே வீழ்த்தி அவனது உடல் மீது கால்களை மிதித்து எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் ஏந்தி அட்டபுயக்காளி காட்சி தருகிறாள். காளியின் வேல் கம்பு அசுரனின் மார்பில் பாய்ந்துள்ளது.

ஆறு கரங்களில் ஆயுதம் ஏந்தி, ஆடையின்றி, நின்ற கோலத்தில் பைரவர் உள்ளார்.

"பொதுவாக நான்கு கைகளுடன் தோன்றும் பைரவர், இங்கு ஆறு கைகளுடன் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. நகரத்தார் கலையை அடையாளம் காண இச் சிற்பமும், இதன் ஆடை அணிகளும் உதவுகிறது. அட்டபுய காளியும், நகரத்தார் கலையாகும்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

திசைக் காவலர்களில் ஒருவரான எமதருமன் எருமை வாகனத்தில் அமர்ந்துள்ளார். இரு கரங்கள் உள்ளன. இவரது வலது கை தோள்வரை உடைந்துள்ளது. இடையில் சாட்டை உள்ளது. இடுப்பில் குத்து வாள் உள்ளது.

சனகாதி முனிவர்களுக்கு உபதேசிக்கும் நிலையில் கயிலை மலைமீது அமர்ந்த கோலத்தில் தட்சிணாமூர்த்தி உள்ளார்.

திசைக் காவலர்களில் ஒருவரான குபேரன் தன் வாகனமான குதிரையின்மீது சவாரி செய்யும் நிலையில் உள்ளார். வலது கையில் ஓங்கிய வாள், இடது கையில் கேடயம் உள்ளது. குதிரையின் முன் கால்களின் கீழ் சிம்மங்கள் உள்ளன. பின் கால்களின் கீழ் யாளிகள் உள்ளன.

மீசையை வலக்கையால் முறுக்கி இடக்கையில் குறுவாள் ஏந்தி மதுரைவீரன் உள்ளான்.

"மதுரை வீரனின் முழங்காலில் வெளிப்படும் எலும்பும், பாதங்களில் ஓடும் நரம்பும், காண்போர் கூர்ந்து நோக்கத்தக்கது. இவனது காலடியைத் தாங்கியவண்ணம் வீரன் ஒருவன் காட்டப்பட்டுள்ளான். இவனது இடப்புறத்தில் உள்ள கொடிக்கருக்குகளைப் பற்றி ஓடும் நிலையில் சிறிய அணில் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது. இவ்வாறு மதுரை வீரன் அருகில் மிகவும் இயற்கையாக பூங்கொடிகளின் மீது தாவி வரும் அணிலை மிக நுட்பமாகப் படைத்துள்ள செட்டிநாட்டுச் சிற்பிகள் கைத்திறனை ஒவ்வொருவரும் தவறாது காண வேண்டும்" என்று கூறுகிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

எருமைத்தலை அசுரனான மகிஷனைத் தன் தொடைமீது வைத்து கழுத்தைக் கத்தியால் அறுத்து, எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் தாங்கி மகிஷாசுரமர்த்தினி உள்ளாள்.

"வழக்கமாக எருமைத் தலை அசுரனைக் காளியின் காலடியில் 'காட்டுவது வழக்கம். ஆனால், இங்கு அசுரனின் தலை காளியின் தொடை மீது உள்ளது. அசுரனின் தலையை அறுக்க கத்தியைக் கையில் பிடித்துள்ளாள். அக் கையை அசுரனின் கை தடுக்க முயல்கிறது. அதனையும் மீறி அன்னையின் கரம் அசுரனை அழிக்கிறது. தேவியின் இடது காலடியின் கீழ் ஆடும் அரவம் ஒன்று காட்டப்பட்டுள்ளது. அசுரனை அழிக்கும் இவ் உருவம் செட்டிநாட்டுக் கலையை வெளிப்படுத்துகிறது'' என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

அசுரனின் உடல்மீது இடது காலை ஊன்றி, வலது காலை மேலே தூக்கி, எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் தாங்கி, ஊர்த்துவ தாண்டவர் உள்ளார். சிவபெருமானின் நெற்றியில் மூன்றாவது கண் உள்ளது.

ஆடும் பெருமானை அடுத்து நடனமாடும் காளியின் தாண்டவச் சிற்பம் உள்ளது. எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் உள்ளன. அசுரனின் உடலை மிதித்து அழிக்கும் நிலையில் வடிக்கப்பட்டுள்ளது.

திசைக் காவலர்களில் ஒருவரான வாயு பகவான் தன் வாகனமான மானின்மீது அமர்ந்துள்ளார். இரண்டு கரங்கள் உள்ளன. அவற்றில் ஆயுதங்கள் உள்ளன.

மெல்லிய இடையை இடப்புறம் ஒடித்து, கழுத்தை இடப்புறம் திருப்பி, ரதி அழகிய கோலத்துடன் உள்ளாள். இவள் உயிரோவியமாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

காமன் என்றழைக்கப்படும் மன்மதன் வணங்கிய கரங்களுடன் காட்சி தருகிறான்.

இரணியூர்க் கோவில் தல புராணத்தை அடிப்படையாகக் கொண்டு இராசகோபுரத்தில் இரண்ய மல்யுத்தம், இரண்ய சம்ஹாரம், நரசிம்மரை ஆட்கொள்ளும் சரபமூர்த்தி என மூன்று சிற்பங்களை அமைத்துள்ளனர்.

இரணிய சம்ஹாரம் முடிந்தபின் சிங்கபிரானின் சீற்றத்தைத் தணிக்க, சிவபெருமான் எடுத்த அவதாரமே சரபமூர்த்தியாகும். சிங்க முகமும், மனித உடலும், மிருகத்தின் காலும், வாலும், பறவையின் இறக்கையும் இணைந்து நிற்கும் உருவம் உடைய சரபமூர்த்தி நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார்.

மீனாட்சி கல்யாணம் கல்யாண சுந்தரர் சிற்பமாகக் காட்டப்பட்டுள்ளது.

நின்ற கோலத்தில் நான்கு கரங்களுடன் திருமாலின் திருஉருவம் வடிக்கப்பட்டுள்ளது. அவரின் பக்கங்களில் கருடனும், அனுமனும் வணங்கி நிற்கின்றனர். இது ஓர் அரிய சிற்பமாகும்.

எண்திசைக் காவலர்களில் ஒருவரான வருணன், தன் வாகனமான யாளியுடன் நின்ற கோலத்தில் இரு கரங்களுடன் வடிக்கப்பட்டுள்ளார்.

"திசைத் தெய்வங்களை அத் தெய்வங்களுக்குரிய வாகனங்களில் செதுக்கி உள்ளமை இக் கோவிலின் தனிச்சிறப்பு. கோபுரத்தில் வருணன் முதலிய திசைத் தெய்வங்களைத் தோற்றுவிக்கும் மரபு சோழர் காலத்தில் இருந்தே தொடங்கிய ஒன்று எனலாம். இதனைச் சிதம்பரம் கோவிலிலும் காணலாம். இத்தகைய மரபு பாண்டியர், நாயக்கர் காலத்தைத் தொடர்ந்து நகரத்தார் காலத்திலும் தொடர்ந்துள்ளமையை இக் கோவிலில் அறிய முடிகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

எண்திசைக் காவலர்களில் ஒருவரான நிருதி வீரனின் தோள்மீது அமர்ந்து ஓங்கிய வாளும், கேடயமும் கரங்களில் பற்றித் தென்திசையைக் காத்து நிற்கிறது.

சிவனும், உமையும் காளை வாகனத்தின்மீது விடைப்பாகராகத் தோன்றும் சிற்பம் உள்ளது. அண்ணலின் தொடைமீது அன்னை அமர்ந்துள்ளாள். பெருமான் தேவியை அணைத்தவாறு நான்கு கரங்களுடன் காட்சி தருகிறார்.

## லெட்சுமி மண்டபச் சிற்பங்கள்

இராச கோபுரத்தின் முன்புறம் லெட்சுமி மண்டபம் உள்ளது. இதில் உள்ள எட்டுத் தூண்களில் எட்டு வகை லட்சுமியின் சிற்ப வடிவங்கள் உள்ளன. ஆதிலட்சுமி, தனலட்சுமி, சௌபாக்கியலட்சுமி, வீரலட்சுமி, தான்யலட்சுமி, சந்தானலட்சுமி, கஜலட்சுமி, விஜயலட்சுமி ஆகிய எட்டு லட்சுமிகளும் நின்ற கோலத்தில் உள்ளனர்.

"இங்குள்ள சிற்ப வடிவங்களையும், ஆடை அணிகளின் தன்மையையும் கூர்ந்து நோக்குவோமானால் செட்டிநாட்டுச் சிற்பக்

*கலையை நன்கறியலாம். குறிப்பாக எண்வகை லட்சுமியின் சிற்பங்களிலும் இடது மூக்கில் 'நத்து' என்னும் மூக்கணி காணப்படுகிறது. இது வரிசையாகக் கல் பதிக்கப்பட்டு வட்டமாகத் திகழ்கிறது. பொதுவாகப் பெண்கள் அணியும் மூக்கணியை பண்டைய சிற்பங்களில் காண்பதரிது. இவை கி.பி. 15ஆம் நூற்றாண்டுக்குப் பின் தோன்றிய சிற்பங்களில் மட்டும் காணப்படுகிறது. விசயநகர, நாயக்கர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட இம் மரபு செட்டிநாட்டுச் சிற்பங்களில் மிகுந்திருக்கக் காண்கிறோம். இக் கலையே இதனை அடையாளம் காணவும் துணை செய்கிறது" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.*

(நன்றி : இரணியூர்க் கோவில்)

*உடலில் நிறைய அணிகலன்களை அணிந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது. மேற்காதில் பெரிய செவிப்பூக்கள் செருகி உள்ளனர். காதுகளில் மகரக்குழைகள் அணிந்துள்ளனர். பொட்டுமணி, கண்டிகை, முத்தாரம், முத்துச்சரம், முத்துச்சரப்பள்ளி, சவடி, கொத்துச்சரப்பள்ளி, மலர்ப் பதக்கங்கள், அன்னப்பட்சி கோர்த்த பதக்கங்கள், மாலை முதலிய அணிகளை அணிந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது.*

*கோவிலின் முன்புறம் கோபுர வாயிலை விரிவுபடுத்த இம் மண்டபம் கட்டப்பட்டது.*

*அதன் தன்மைகளுக்கேற்ப முகப்பொலிவு மாறுபட்டு காட்டப் பட்டுள்ளது. அதேபோல ஆயுதங்களும் மாறுபட்ட எண்ணிக்கையில் காட்டப்பட்டுள்ளன. லட்சுமியின் உருவத்திற்கேற்ப கரங்களின் எண்ணிக்கையும் வேறுபடுகிறது.*

## நவதுர்க்கை மண்டபச் சிற்பங்கள்

*அம்மன் சன்னதியின் எதிரே கிழக்கிலும், மேற்கிலும் உள்ள தூண்களில் நவ துர்க்கையின் சிற்ப வடிவங்கள் உள்ளன.*

*நவதுர்க்கை சிற்பங்களில் ஆறு சிற்பங்கள் நின்ற கோலத்திலும், மூன்று சிற்பங்கள் அமர்ந்த கோலத்திலும் உள்ளன.*

*முதலாவது தூணில் ருத்திர துர்க்கை உருவம் உள்ளது. எட்டுக் கரங்களிலும் ஆயுதங்கள் தாங்கிப் போர் செய்யும் நிலையில் வடிக்கப்பட்டுள்ளது. பல்வேறு அணிகலன்களைத் துர்க்கை அணிந்துள்ளாள்.*

கீழ் வரிசையில் இரண்டாவது தூணில் ஸ்தூல துர்க்கையின் உருவம் உள்ளது. மேல்வலக் கையில் அங்குசமும், இடக்கையில் பாசமும் உள்ளது. கீழ் வலக்கையில் மலர் மாலையும், இடக்கையில் யாளி முகப்புடைய வீணையும் உள்ளது. தேவி பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள். வீணையின் நாதத்தில் லயித்திருப்பது போல் தேவி வடிக்கப்பட்டுள்ளாள்.

"வெள்ளைக் கல்லைக் கொண்டு செதுக்கப்பட்டுள்ள இச் சிற்பம் செட்டிநாட்டுச் சிற்பிகளின் கலைத்திறனுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

கீழ்வரிசை இடப்புற மூன்றாவது தூணில் மகிட சம்ஹாரியின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. எட்டுக் கரங்களில் ஆயுதங்கள் உள்ளன. தேவி பல்வேறு ஆயுதங்களை அணிந்துள்ளாள். இடக்கையில் நாணேற்றிய வில்லுடன் உள்ளாள். இத் தேவியின் பீடத்தை இரு சிவ கணங்கள் கையில் ஏந்தி நிற்கின்றன.

"வில்லைத் தனியாகக் காணுமாறு இடைவெளிவிட்டு சிற்றுளியால் நுட்பமாகச் செதுக்கியுள்ள சிற்பியின் பாங்கு போற்றத்தக்கது" எனப் பாராட்டுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

நான்காவது தூணில் விஷ்ணு துர்க்கையின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. தேவி நான்கு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் உள்ளாள். மேல் வலக்கையில் சக்கரமும், இடக்கையில் சங்கும் உள்ளது. கீழ் வலக்கை அபய முத்திரையைக் காட்ட, இடக்கை வரத முத்திரையைக் காட்டுகிறது. தேவி பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள். இப் பீடத்தை இரு பெண்கள் தாங்கி நிற்கின்றனர்.

மேல்வரிசை நான்காவது தூணில் பிரம்ம துர்க்கையின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. நான்கு கரங்கள் உள்ளன. மேல்வலக் கையில் அக்கமாலையும், இடக்கையில் கெண்டியும் உள்ளது. கீழ் இரு கைகள் ஒன்றின் மேல் ஒன்று படிய வைக்கப்பட்டுள்ளது. இத் துர்க்கை நான்கு தலைகளுடன் உள்ளாள் அதில் மூன்று தலைகள் முன்புறம் உள்ளன. நான்காவது தலை பின்புறம் உள்ளதால் தெரியவில்லை. எனவே இவள் பிரம்ம துர்க்கை என அழைக்கப்படுகிறாள். தேவி பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள்.

வலது மேற்புற வரிசையில் நான்காவது தூணில் மகா துர்க்கையின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. ஆறு கரங்களில் கொடிய ஆயுதங்களைத் தாங்கி, நின்ற கோலத்தில் உள்ளாள். தேவி பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள். சிவன், விஷ்ணு, துர்க்கை என மூன்றின் அம்சமாக இவள் காட்டப்பட்டுள்ளதால், மகா துர்க்கை என அழைக்கப்படுகிறாள்.

மேல்வரிசை வலப்புறம் இரண்டாவது தூணில் சூலினி துர்க்கையின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. முன் வலக்கரத்தில் சூலைத் தண்டை இத் தேவி பிடித்துள்ளதால், இவள் சூலிணி துர்க்கை என அழைக்கப்படுகிறாள். எட்டுக் கரங்கள் உள்ளன. கரங்களில் கொடிய ஆயுதங்களை ஏந்தி உள்ளாள். பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள். சிறிய உருவமுடைய இத் தேவியை மூன்று சிவ கணங்கள் தாங்கி நிற்கின்றன.

மேல்வரிசை முதலாவது தூணில் நவதுர்க்கையின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. எட்டுக் கரங்களில் பல்வேறு ஆயுதங்களை ஏந்தி உள்ளாள். பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள்.

## மரச் சிற்பங்கள்

இக் கோவிலில் பல மர வாகனங்கள் உள்ளன. அவை : சுற்றும் குதிரை, சிம்மம், கேடகம் முதலிய வாகனங்களாகும்.

தேரில் பல சிற்பங்கள் உள்ளன. இக் கோவில் தேர் சிறியது. ஆண்டுதோறும் சித்திரை மாதம் நடைபெறும் விழாவில் இத் தேர் உலா வருவதால், இதனைச் 'சித்திரைத் தேர்' என அழைக்கின்றனர்.

தேரின் கீழ்த் தட்டில் 100 யாளியின் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

## செப்புத் திருமேனிகள்

இக் கோவிலில் 58 செப்புத் திருமேனிகள் உள்ளன. அவை வருமாறு :

பெரிய பிள்ளையார், சந்திரசேகரர், சந்திரசேகர அம்மன், சிவகாமி, சோமாஸ்கந்தர், பிரியாவிடை, சண்டிகேசுவரர், பிரதோஷ நாயகர், பிரதோஷ நாயகி, சுந்தரர், தனி அம்மன், அஸ்திர தேவர், துவார விநாயகர், கூத்தாடும் விநாயகர், தட்சிணாமூர்த்தி, சனகாதி முனிவர்கள், நால்வர், அண்ணாமலையார், பிரம்மா, துர்க்கை,

தண்டாயுதபாணி, சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, முத்துஸ்கந்தர், வீரபாகு, பிட்சாடனர், பைரவர், சுக்கிரவாார் அம்மன், போக சக்தி, பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், அப்பர், மாணிக்கவாசகர், சுந்தரர், சம்பந்தர், இரு துவார பாலகர்கள், பத்மலிங்கம், பசுபதீஸ்வரர், நந்தி, பலிபீடம், கண்ணாடி, திருமால், திருமகள், நிலமகள் முதலியன.

இவற்றில் இரண்டு மட்டும் செப்புத் தகட்டில் வெட்டப்பட்டுள்ளது. அவை பத்மலிங்கமும், பசுபதீஸ்வரரும் ஆகும். ஏனையவை செப்புக் கலவையால் வார்க்கப்பட்டுள்ளன.

தட்சிணாமூர்த்தி, சனகாதி முனிவர்கள், லிங்கோத்பவர், நான்முகன், துர்க்கை முதலிய செப்புத் திருமேனிகளைத் தேவகோட்டத்தில் அமைத்துள்ளனர்.

இவ் அமைப்பு வேறு எக் கோவிலிலும் இல்லை.

திருமேனிகளின் பீடத்தில் உள்ள கம்பியில் அச் சிலைக்குரிய முதல் எழுத்தைப் பொறித்து வைத்துள்ளனர். எ.கா. 'அஸ்திரதேவர்' . இம்முறை அச் சிலையை எளிதில் அடையாளம் காண உதவுகிறது.

நகரத்தார்கள் வளர்த்த படிமக் கலையின் சிறப்பைக் காண, இச் செப்புத் திருமேனிகள் பெரிதும் உதவுகின்றன.

## ஓவியங்கள்

இராச கோபுரத்தின் முன்னுள்ள லெட்சுமி மண்டபத்தில் அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இவ் ஓவியங்கள் மதுரை ராம. முத்தழகிரி நாயுடுவால் வரையப்பட்டுள்ளது. அவை வருமாறு :

ஸ்ரீ மீனாட்சி திக்விஜயம்.

துர்வாசர் சாபத்தால் இந்திரனுக்குப் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டதும், இந்திரன் பழிதீர்த்ததும்.

மதுரைக் கடம்பவனச் சொக்கலிங்கம்.

வெள்ளை யானை சாபம் தீர்ந்தது.

திருப்பதி ஸ்ரீ வெங்கடாசலபதி.

பகவத் கீதை உபதேசம்.

பிரம்ம சாபம் நீங்கியது.

தும்புரு.

ஊர்த்துவ தாண்டவர்.

மலையத்துவச பாண்டியன் புத்திர காமிஷ்டி யாகம் செய்தல்-தடாதகைப் பிராட்டியார் திருஅவதாரம்.

நாரதர்.

தும்புருடர்.

நடனக் காளி.

சங்கரநாராயணர்.

விநாயகர்.

அர்த்தநாரீஸ்வரர்.

ரிஷபாரூடர்.

நடராசர், சிவகாமி, முயலகன், காரைக்கால் அம்மையார், பதஞ்சலி முனிவர், வியாக்ரபாதர், லெட்சுமி, ராஜராஜேஸ்வரி, சரஸ்வதி, பார்வதி திருக்கல்யாணம்.

ஸ்ரீ சானகி இராமர்.

பிருந்தாவனக் கிருஷ்ணன்.

பகீரதன் கங்கையை வரவழைத்தல்.

கிழ வடிவ சுப்பிரமணியர் யானையை வரவழைத்து வள்ளியை மணத்தல்.

சண்முகர் வள்ளிக்குக் காட்சி தருதல்.

**பட விளக்கமுடைய ஓவியங்கள் வருமாறு :**

சங்க நிதி - பதும நிதி.

கஜலெட்சுமி.

பெருமான் பிட்டுக்கு மண் சுமந்ததும், பாண்டியன் பிரம்பால் அடித்ததும்.

நாரதர் சிவபெருமான் - பார்வதியிடம் மாம்பழம் தருதல்.

விநாயகரும், முருகனும் மாம்பழம் வேண்டிப் போட்டியிடுதல்.

பெற்றோரைச் சுற்றி வந்து விநாயகர் கனியைப் பெறுதல்.

க்ஷீராப்த நாதர்.

காமதேனு - கற்பக விருட்சம் - சிந்தாமணி.

சம்பந்தர் - அப்பர் - சுந்தரர் - மாணிக்கவாசகர்.

தேவி லிங்க பூசை செய்தல்.

காமதகனம்.

சனகாதி முனிவர்களுக்குத் தட்சிணாமூர்த்தி உபதேசம் செய்தல்.

பூமியை முருகன் சுற்றி வருதல்.

விநாயகருக்குக் கனி கொடுத்ததைப் பெருமான் கூறுதல்.

கோபம் கொண்ட முருகன் பழனிக்குச் செல்லுதல்.

சூரபத்மனை அழிக்கப் பரமசிவன் சுப்பிரமணியருக்குச் சக்திவேல் தருதல்.

"இவ் ஓவியங்கள் திருச்சி ஓவியர் கோபால் ராசுவால் 1928இல் ஆத்தங்குடி சிவன் கோவிலில் தீட்டப்பட்ட ஓவியங்களுடன் ஒப்பிடத்தக்கவை. இவை ஆத்தங்குடி ஓவியத்தைவிடக் காலத்தால் சற்றுப் பிற்பட்டவை" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

"தமிழ்நாட்டு ஆலயங்களில் இரணியூரில் மட்டுமே தட்சிணாமூர்த்தியின் சிற்பம், படிவம், ஓவியம் ஆகியவற்றை ஒரு சேரக் காணமுடிகிறது. இது இரணியூரின் தனிச் சிறப்புகளில் ஒன்று" எனத் தெரிவிக்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

லட்சுமி மண்டப விமானத்தில் 12 ராசிகளும் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன.

திருவிளையாடற் புராணம், சிவபுராணம், கந்தபுராணம், தேவாரம், திருவாசகம், இராமாயணம், மகாபாரதம் முதலியவற்றில் இடம் பெற்றுள்ள செய்திகள் இங்கு ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன.

"நகரத்தார் கால ஓவியப் பாணி வளர்வதற்கு இரணியூர் ஓவியங்கள் ஒரு அங்கமாக அமைந்து விட்டன எனலாம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : இரணியூர்க் கோவில்)

## வழிபாடு

இக் கோவிலில் திருவனந்தல், காலைச்சந்தி, உச்சிக்காலம், மாலைச்சந்தி, அர்த்த ஜாமம் என ஐந்து காலப் பூசைகள் நடைபெறுகின்றன. இவை அனைத்தும் சிவபெருமானுக்கே நடைபெறுகிறது.

காலையில் திருப்பள்ளி எழுச்சி பாடி, பால் நிவேதனம் செய்து அம்மையையும், அப்பனையும் எழுப்புகின்றனர். இரவு பைரவரிடம் ஒப்படைத்த பொறுப்பைப் பெற்று இவ் வழிபாடு நடைபெறுகிறது.

காலைச் சந்தியில் தயிர்ச்சாதம் நிவேதனம்.

உச்சிக் காலத்தில் புளியோதரை நிவேதனம்.

சாயரட்சையில் அன்னம் நிவேதனம்.

அர்த்த சாமத்தில் பால் அபிஷேகம், சம்பா வடை, பள்ளியறை முன்பு சுண்டல், பால் நிவேதனம் செய்து, பள்ளியறைப் பாட்டைப் பாடித் திருக்காப்பிடுகின்றனர்.

பின்னர் பைரவர், சண்டிகேசுவரருக்குப் பூசை நடைபெறுகிறது.

## மரியாதை

தினந்தோறும் பூசை முடிந்ததும் குருக்கள் திருநீறு வழங்கும்போது, முதலில் 'ஒக்கூருடையாரை'யும், பின்னர் 'அயல்க்கோவில் நகரத்தாரை'யும், பின்னர் 'நகரத்தாரை'யும் அழைத்துப் பிரசாதம் வழங்குகிறார்.

விசேட காலங்களில் அரண்மனையாரையும், நகரத்தாரையும், நாட்டாரையும், ஊராரையும் அழைத்து திருநீறு வழங்குகிறார்.

## திருவிழாக்கள்

ஆவணியில் விநாயகர் சதுர்த்தி. புரட்டாசியில் நவராத்திரி. அப்போது பத்திரகாளிக்குச் சிறப்பு அலங்காரம் செய்வர். விஜயதசமியன்று அம்பு போடும் மகர் நோன்பு நடைபெறுகிறது.

ஐப்பசி தீபாவளி. அனைத்துத் தெய்வங்களுக்கும் புத்தாடை அணிவிப்பர். சிறப்பு அபிஷேகம் நடைபெறும்.

கார்த்திகையில் திருக்கார்த்திகை. மார்கழியில் சிவகாமி அம்மனின் ஊடல் தீர்த்தல்.

தைப்பொங்கல். சுற்றியுள்ள கோயில்கள் அனைத்திற்கும் பொங்கல் சீர் கொடுப்பர். பணியாளர்கள், நிர்வாகிகள் எல்லோருக்கும் பொங்கல் சீர் வழங்குவர். நந்திக்குப் பின்புறம் ஐந்து பானைகளில் பொங்கல் இடுவர். உச்சிக் காலத்தில் சிறப்புப் பூசை நடைபெறும். பின்னர் சுவாமி பானையை அர்ச்சகர் தன் வீட்டிற்குக் கொண்டு செல்வார்.

மாசியில் சிவராத்திரி.

ஒவ்வொரு மாதமும் பிரதோஷ வழிபாடு நடைபெறுகிறது.

பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட அணிகலன்கள், அங்கிகள், பரிகலன்கள் இக் கோவிலில் உள்ளன.

இங்கு ஊருணி விநாயகர் கோவில் உள்ளது.

சிவன் கோவிலின் மேற்கே நீலமேகப் பெருமாள் கோவில் உள்ளது. பழைய பெருமாள் கோவில் சிதைந்து அழிந்து விட்டது. அவ்விடத்தில் புதிய கோவிலை நகரத்தார்கள் கட்டி வழிபாடு செய்து வருகின்றனர். இங்கு திருமால், திருமகள், நிலமகள், சிலைகள் உள்ளன. தாயார் பெயர் கனகவல்லி.

## கிராம தெய்வங்கள்

இங்கு பத்திரகாளியம்மன் கோவில், கழுவன் கோவில், காமன் கோவில், சந்திவீரன் கோவில், செவிட்டு அய்யனார் கோவில், காடப்பிள்ளை அய்யனார் கோவில் முதலிய கிராமத் தெய்வங்களுக்குக் கோவில்கள் கட்டியுள்ளனர்.

கழுவன் கோவிலும், காமன் கோவிலும் கூரையின்றி கட்டப்பட்டுள்ளது.

## ஊருணிகள்

இங்கு மூன்று ஊருணிகள் உள்ளன. அவை : அம்மன் சேங்கையான திருவேட்பூருடையார் ஊருணி, பெருமாள் கோவில் ஊருணி, கல்லூருணி முதலியன.

## செப்பேடுகள்

இரணியூரில் வரலாற்றுச் சிறப்புமிக்க மூன்று செப்பேடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இதில் முதல் செப்பேடு விஜயநகரப் பேரரசு மெய்கீர்த்தியுடன் தொடங்குகிறது. இச் செப்பேடு 'ஸ்ரீ மகாமண்டலீசுவரன்' எனத் தொடங்குகிறது. 'சிவபரப்பிரம்மன்' என முடிவடைகிறது.

இதில் முதல் பக்கத்தில் 37 வரிகளும், இரண்டாம் பக்கத்தில் 32 வரிகளும் என 69 வரிகள் உள்ளன.

*இதில் காணப்படும் செய்தி : கி.பி. 1775இல் கல்வாச நாட்டில் குலசேகரபுரமான இளையாத்தங்குடியில் நான்கு வகை வேளாளரும், ஊரவரும் அறவிலை பிரமாணமாக மேற்படி ஊரில் நிலம் விடுவதைப் பட்டயம் கூறுகிறது.*

*இளையாத்தங்குடி ஆவுடையார் கோவில் உப கிராமத்தாரும், நயகுடி நாலாயிரமும், மணலூருடையாரும் (மாத்தூர் கோவிலில் ஒரு பிரிவினர்), ஏழு நகரமும் (ஏழு நகரம் - இளையாத்தங்குடி, மாத்தூர், வைரவன் கோவில், நேமம், இலுப்பைக்குடி, சூரக்குடி, வேலங்குடி) கூடியிருந்து கரைச் சீட்டுப் போட்டு ஆறுவகை கருமார் படை முதலிகளுக்கு நிலம் விடுகின்றனர்.*

*இந் நிலத்தின் எல்லை செப்பேட்டில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.*

*நிலம் விட்ட இடம் இரணியூர் செம்பகம் பேட்டையாகும்.*

*இப் பட்டயம் கல்வெட்டாகவும் வெட்டப்பட்டுள்ளது.*

*இப் பட்டயத்தில் 'தொழிலாளி' என்னும் சொல்லாட்சி காணப்படுகிறது.*

*அறுபடை மூவேந்த வேளிர் பொய் சொல்லாமெய்யன் என்ற நாட்டுக்கணக்கன் உத்தரவுப் படிக்கு, இப் பட்டயத்தினைச் சிதம்பர பத்தர் வெட்டியுள்ளார்.*

**தகவல் : திரு. மா.சந்திரமூர்த்தி**
**(நன்றி : இரணியூர்க் கோவில்)**

*1926ஆம் ஆண்டு இந்தியக் கல்வெட்டு அறிக்கையில் இரணியூர்க் கல்வெட்டுகள் 13 இடம் பெற்றுள்ளன. தற்போது ஒரு கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக் கல்வெட்டுக்களில் இக் கோவில் கல்வாயிலாண்ட நாயனார் கோவில் என்றும், இங்குள்ள இறைவன் பெயர் ஆட்கொண்ட ஈசுவரமுடைய நாயனார் என்றும் காணப்படுகின்றன.*

**(நன்றி : நகரத்தார் கலைக் களஞ்சியம்)**

*13ஆம் நூற்றாண்டில் இக் கோவில் நிர்வாகத்தை நகரத்தார்கள் ஏற்றுக் கொண்டார்கள்.*

*இங்கு நகர விடுதி உள்ளது.*

இக் கோவிலுக்கு 1928, 1944, 1990ஆம் ஆண்டுகளில் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

இக் கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள் கீழ்க்கண்ட 35 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர்.

1. அரிமழம்
2. க. அழகாபுரி
3. பி. அழகாபுரி
4. ஆ. தெக்கூர்
5. இராங்கியம்
6. இராயவரம்
7. கொ. லட்சுமிபுரம்
8. உலகம்பட்டி
9. கடியாபட்டி
10. கண்டனூார்
11. கருங்குளம்
12. காரைக்குடி
13. கானாடுகாத்தான்
14. கீழச்சிவல்பட்டி
15. குருவிக்கொண்டான்பட்டி
16. குழிபிறை
17. கொத்தமங்கலம்
18. கொப்பனாபட்டி
19. கோட்டையூர்
20. கோனாபட்டு
21. செவ்வூர்
22. தேவகோட்டை
23. தேனிப்பட்டி
24. நாட்டரசன்கோட்டை
25. நெற்குப்பை
26. நேமத்தான்பட்டி
27. பலவான்குடி
28. பள்ளத்தூர்
29. பனையபட்டி
30. புதுவயல்
31. பூலாங்குறிச்சி
32. மிதிலைப்பட்டி
33. மேலைச்சிவபுரி

34. *வலையபட்டி*
35. *வேந்தன்பட்டி*

(நன்றி : நகரத்தார் கலைக் களஞ்சியம்)

இரணியூர்க் கோவிலார் ஈடில்லாப் பேரும்
பரமனருள் போற்றுகின்ற பண்பும் - வரமருளும்
ஆட்கொண்ட நாதரம் பாள்சிவபு ரந்தேவி
நாட்டமிகு தொண்டுகாக்கும் நாடு.

- நல்லறக் கவிராயர் சுப.நா. நாகப்பன்





# வேலங்குடிக் கோவில்

நகரத்தார் குலமரபுக் கோவில்கள் ஒன்பதில் வேலங்குடிக் கோவிலும் ஒன்று.

"இந்தியா ஞான பூமி. தமிழ்த்திருநாடு புண்ணிய பூமி. தமிழ்நாட்டில் செட்டிநாடு அறம் வளர்க்கும் திருநாடு. தவத்திரு குன்றக்குடி அடிகளார், 'கோவிலைச் சார்ந்த குடிகள், குடிகளைச் சார்ந்த கோவில்கள்' எனக் கோட்பாடு உருவாக்கியுள்ளார். இக் கூற்றுக்கு நூற்றுக்கு நூறு பொருந்துகிற சமூகம் நகரத்தார் சமூகம் மட்டுமே. தாங்கள் வாழும் செட்டிநாட்டுப் பகுதியில் தங்களுக்கென ஒன்பது கோவில்களை அமைத்துக் கொண்டுள்ளனர். இவை 'நகரக்கோவில்கள்' என வழங்கப்பெறும்" என்கிறார் தமிழவேள் முனைவர் ச. மெய்யப்பன்.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

"நமது பாரத நாடு அந்நியக் கலாச்சாரத்தினால் தீண்டப்பட்டு, அவற்றால் வசீகரிக்கப்பட்டு, உலகியல் நலன்களைப் பெரிதுபடுத்திக்கொண்டு சென்று கொண்டிருந்த நிலையில், சமயத்துறையை உயிரெனக் காத்து இந்த நாட்டு மக்களுக்குச் சொந்தமாக்கிய பெருமை நகரத்தார்களுக்குரியது. கடல் கடந்து சென்று தான் பெற்ற செல்வத்தை இந்த நாட்டு மக்களுக்குச் சமயத் துறை வழியாக வருணிக்க முடியாத தொண்டுகளைச் செய்திட்ட நகரத்தார்கள், தமக்கென, தமது குலமரபுக்கெனப் பல கோவில்களைக் கட்டி அரும்பெரும் சேவை செய்துள்ளார்கள். நகரத்தார்கள், கோவில்களை மட்டுமல்லாது, கோவில்களில் அரசர்கள் வளர்ந்து வந்த இயல், இசை, நடனம் என்ற முத்தமிழையும் வளர்த்து வந்திருக்கிறார்கள். இதைப் போல் சிற்பக் கலை, கட்டடக் கலை ஆகியவற்றையும் காத்து வந்துள்ளனர். சுருங்கச் சொன்னால்,

செட்டிநாட்டு நகரத்தார்கள் என்ற ஓர் இனம் தமிழகத்துக்குக் கிடைத்திராவிட்டால், இக் கலை அனைத்தும் மறைவுற்று, நமது சமயக் கலாச்சாரம் மடிந்து போயிருக்கும் என்று துணிந்து கூறலாம்" என்கிறார் சிற்பச்சித்தர் முனைவர் வை. கணபதி ஸ்தபதி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

வேலங்குடியில் நகரச் சிவன் கோவில் உள்ளதால், இவ் ஊரை 'நகர வேலங்குடி' என்றும், கோட்டையூர் அருகில் உள்ளதால் 'கோட்டையூர் வேலங்குடி' என்றும் அழைக்கின்றனர்.

கோட்டையூருக்கும் பள்ளத்தூருக்கும் இடையில் வேலங்குடிக் கோவில் உள்ளது.

பண்டைய நாளில் இவ் ஊர், 'கேரள சிங்க வளநாட்டுப் பாலையூர் நாட்டில்' இருந்து வந்துள்ளது.

வேலங்குடிவயல் நாச்சியம்மன் கோவில் பின்புறம் உள்ள ஊருணிக் கல்வெட்டு 'பாலைய நாட்டைச் சார்ந்த வேலங்குடி' என இவ் ஊரைக் குறிக்கிறது.

பாலைய நாட்டைச் சேர்ந்த ஊர்கள் பதினாறு என்பர். அவற்றில் வேலங்குடி ஒன்று.

முன்பு இப் பகுதி வேலமரங்கள் நிறைந்ததாய் இருந்ததால், இவ் ஊர் வேலங்குடி என அழைக்கப்பட்டது.

பாண்டியர் காலத்தில் இவ் ஊர் 'தேசிக நாராயணபுரம்' என அழைக்கப்பெற்றது.

இவ் ஊர் 'நானா தேசிகர்' என்னும் வணிகக் குழுவினருடன் தொடர்புடையது.

நகரத்தார்களின் நன்முயற்சியால் வேலங்குடிக் கோவில் கட்டப் பெற்றது. இறைவன் பெயர் சண்டீசுவரர். இறைவி பெயர் காமாட்சி அம்மன்.

வேலங்குடியில் உள்ள பெருமாள் கோவிலுக்குப் பின்புறம் உள்ள பகுதி 'தேசிக நாராயணபுரம்' என்றே இன்றும் அழைக்கப்படுகிறது. பெருமாள்கோவிலும் 'தேசிக நாராயணப் பெருமாள் கோவில்' என்றே அழைக்கப்படுகிறது.

நகரத்தார்களுடைய ஆவணங்களிலும், இசை பிடிமானத்திலும், கல்வெட்டிலும் இவ் ஊர் 'வேலங்குடியான தேசிக நாராயணபுரம்' என்றே காணப்படுகிறது.

இக் கோவில் நகரத்தார்கள் தங்கள் இசை பிடிமானத்தில், "கேரள சிங்கவள நாடாகிய பாலையூர் நாட்டில் வேலங்குடியான தேசிக நாராயணபுரத்தில் கழனி நல்லூருடையார்" என்று குறிப்பிடுகின்றனர்.

வேலங்குடி சண்முக ஆசாரி வீட்டுத் தோட்டத்தில் விஜயநகர அரசர் காலக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. அதில் இவ் ஊரை 'வேலங்குடியான தேசிக நாராயணபுரம்' என்றும், இக் கோவில் நகரத்தாரை 'வேலங்குடியான தேசிக நாராயணபுரத்து நகரத்தார்' என்றும் குறிக்கப்படுகிறது.

வேலங்குடிக் கோவில் கோபுர வாயிலில் உள்ள கல்வெட்டில் இவ் ஊர் 'நகர வேலங்குடி' என்று குறிக்கப்பட்டுள்ளது.

இவ் ஊர் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமை வாய்ந்த ஊர். இங்குள்ள ஊருணிக் கரையிலும், ஊரின் புறப்பகுதியிலும், கழனியிலும், மக்கள் வாழ்ந்த பகுதிகளிலும் கிடைத்துள்ள முதுமக்கள் தாழிகள், மட்பாண்டங்கள் முதலியன இதனை உறுதி செய்கின்றன.

இக் கோவிலைப் பாண்டிய மன்னர்கள் கட்டினர்.

மிகப் பழமை வாய்ந்த இக் கோவிலைப் பிரித்து, முன்பிருந்த இடத்திற்குச் சற்று தென்திசையில் புதுக் கோவிலாக நகரத்தார்கள் கட்டித் திருப்பணிச் செய்து ஈசுவர ஆண்டு தை மாதம் 5ஆம் நாள் (18.6.1937) குடமுழுக்குச் செய்தனர்.

தேசிக நாராயணப் பெருமாள் கோவிலும் அதே நாளில் சம்போரட்சணம் (குடமுழுக்கு) செய்யப்பெற்றது.

**திருப்பணிச் செலவு விவரம்**

| | |
|---|---|
| கோவில் திருப்பணி | ரூ. 12,00,000/- |
| அந்தணர் இல்லங்கள் நகர விடுதி கட்ட | ரூ. 15,000/- |
| பெரிய நாயகி அம்மன் கோவில் திருப்பணி, குடமுழுக்கு | ரூ. 1,00,000/- |

| | | |
|---|---|---|
| பசுமடம் | ரூ. | 3,000/- |
| நந்தவனம் | ரூ. | 1,500/- |
| தண்ணீர்ப்பந்தல் | ரூ. | 6,000/- |

தேவகோட்டை செ.பி.ச. சண்முகம் செட்டியார் பெரியநாயகி அம்மன் கோவிலைத் திருப்பணி செய்தார்கள். நகரத்தார் சிலர் பசுமடம் ஏற்படுத்தினர்.

தகவல் : திரு. மா.சந்திரமூர்த்தி
(நன்றி : வேலங்குடிக் கோவில்)

இக் கோவிலைப் பாண்டிய மன்னன் கி.பி. 718இல் நகரத்தார்களுக்குக் கொடுத்தான்.

இக் கோவில் புள்ளிகள் மிகக் குறைவு. அதற்குக் காரணம் உபதேசக் குருவின் சாபம் என்கின்றனர். அதன் உண்மைத் தன்மை தெரியவில்லை.

அச்சாபத்திலிருந்து விடுபட, இக் கோவில் நகரத்தார்கள் காஞ்சிச் சங்கராச்சாரியாரின் ஆலோசனைப்படி, தட்சிணாமூர்த்திக்குத் தனிக் கோவில் கட்டினர். மேலும் நடராசருக்கு அருகே உபதேச குரு கையில் வைத்திருந்த தண்டம் ஒன்றை வைத்து வழிபட்டு வருகின்றனர்.

மிகக் குறைந்த புள்ளிகளை உடைய இக் கோவில் நகரத்தார்கள் நான்கு ஊர்களில் மட்டுமே உள்ளனர்.

## கோவில் அமைப்பு

இக் கோவில் கருவறை, விமானம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், நடராசர் சபை, முக மண்டபம், அம்மன் சன்னதி, நந்தி, பலிபீடம், கொடிமரம், மேற்சுற்றுப் பிரகாரம், தட்சிணாமூர்த்தி சன்னதி, பள்ளியறை, பைரவர் சன்னதி, திருச்சுற்று, திருச்சுற்று மாளிகை, சோமாஸ்கந்தர் சன்னதி, இராசகோபுரம், திருக்குளம், நந்தவனம், விடுதி முதலிய பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது.

கணபதி, சுப்பிரமணியர், மகாலெட்சுமி, சண்டிகேசுவரர் ஆகிய தெய்வங்களுக்குத் தனித்தனி ஆலயங்கள் உள்ளன.

மேடையின் மீது நவக்கிரகங்கள், சூரியன், சந்திரன் ஆகியவை உள்ளன.

திருச்சுற்று மாளிகையில் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரின் நின்ற கோலச் சிற்பங்கள் உள்ளன.

இராச கோபுரம் ஐந்து நிலைகளை உடையது. இராச கோபுரத்தின் வெளியில் இரு பக்கங்களிலும் விநாயகருக்கும், தண்டாயுதபாணிக்கும் சிறிய ஆலயங்கள் உள்ளன.

ஊருணியின் மேல் கரையில் சொற்கேட்டான் விநாயகர் கோவில் உள்ளது.

அவ் விநாயகர் கோவிலின் வடக்கே தேசிக நாராயணப் பெருமாள் கோவில் உள்ளது.

இரண்டாம் பிரகாரத்தை அடுத்து கோவிலின் வடக்கே பணியாளர் வீடுகள் உள்ளன.

கிழக்குத் திசையில் சுவாமி சன்னதி உள்ளது. கருவறையில் சதுரமான ஆவுடையார் மீது லிங்கம் உள்ளது. சுவாமி பெயர் சண்டீசுவரர். லிங்கத்தின் முகப்பில் பிரம்ம சூத்திரக் கோடுகள் உள்ளன.

இரு அரைத்தூண்கள் கருவறையின் நிலை வாயிலில் உள்ளன. புறச்சுவர்களில் சிற்பங்கள் இல்லை.

கருவறையின் உப பீடம் முதல் கூரையின் மேல் மட்டம் வரை வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. இதே போல அர்த்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம், மேற்சுற்றுப் பத்தி, திருமாளிகைப் பத்தி முதலியனவும், வெள்ளைக்கல்லால் கட்டப்பட்டுள்ளது.

“தேவகோட்டையைச் சேர்ந்த சிற்பிகளின் பரம்பரையினர் இக் கோவிலை வெள்ளைக் கல்லால் முழுமையாகக் கட்டியுள்ளனர். இக் கோவில் திருப்பணி முழுமையும் வேலங்குடி நகரத்தார்கள் செய்துள்ளனர்” எனக் குறிப்பிடுகிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

இக் கோவில் விமானம், அதிட்டானம், சுவர், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என ஆறு பெரும் பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது.

அதிட்டானத்தின் கீழுள்ள உபபீடம், உபானம், கண்டம், கபோதகம் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

*உபானத்தில் விரிந்த பத்மம், கம்பு என்ற பகுதிகள் உள்ளன.*

*கபோதகத்தில் நாசிக்கூடுகள், மூலைகளில் கொடுங்கைகள், மகரக்கட்டுக்கள் உள்ளன.*

*உப பீடத்தின் மூன்று உறுப்புக்களையும் ஒரே கல்லில் செய்து ஆங்காங்கே இணைத்துள்ளனர்.*

*"இது நகரத்தார் காலக் கட்டடக் கலையின் தனித்தன்மையை அறிய உதவுகிறது. இப் புதுமையான அதிட்டானத்தின் அமைப்பு பிற்காலப் பாண்டியரின் கட்டடக் கலையில் உள்ள அமைப்பு முறையில் புகுத்தப்பட்டிருப்பினும், நாயக்கர் காலக் கோவில்களில் இத்தகைய முறை கையாளப்பட்டு, தொடர்ந்து நகரத்தார் காலத்திலும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.*

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

*சிங்கத்தின் வாயிலிலிருந்து வெளிப்பட்டு வரும் நிலையில் கோமுகி அமைக்கப்பட்டுள்ளது. கோமுகியின் முகம் புஷ்ப பொதிகையில் வளைந்து பூ முனையுடன் உள்ளது. நீர்த்தாரையின் கீழ்ப்புறம் அழகிய அன்னப்பறவை பூ முனையுடன் இணையும்படி தலையை வளைத்து அமைக்கப்பட்டுள்ளது. அபிஷேக நீர் பூ முனை வழியாக வெளியேறிக் கீழே உள்ள நீர்த்தொட்டியில் விழுகிறது. தொட்டியில் உள்ள ஒரு துளை வழியாக வெளிப்பட்டு, சாளரத்தின் வழியே வெளியேறுகிறது. திருச்சுற்றைக் கடந்து, மதிலுக்கு வெளியே செல்கிறது. இதே அமைப்பு அம்மன் சன்னதியிலும், பைரவர் சன்னதியிலும் உள்ளது.*

*"நீர்த்தாரையிலிருந்து வெளிப்படும் அபிஷேக நீரைச் சேகரிக்கப்பதற்குக் கட்டப்பட்டுள்ள தொட்டியும், கோவில் வளாகத்திலிருந்து படிப்படியாக வெளியேற்றுவதற்கு அமைக்கப்பட்டுள்ள ஆழமான நீண்ட சாளரங்களும் நகரத்தாரின் திட்டமிட்ட கட்டடக் கலைக்குச் சான்றாக விளங்குகின்றன. இத்தகைய சாளரங்களின் அமைப்பும், பகுப்பும் சிந்துச் சமவெளி நாகரிகத்தின் சாயலை நினைவூட்டுகின்றன. திராவிடக் கட்டடக் கலையின் அமைப்பினை அடையாளம் காண இவ் அமைப்பு முறை பெரிதும் உதவுகிறது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.*

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

அதிட்டானத்தின் மேல் உள்ள சுவரில் அரைத் தூண்களும், தேவகோட்ட மாடங்களும், கோஷ்ட பஞ்சரங்களும், கும்ப பஞ்சரங்களும் உள்ளன. தெற்குச் சுவரில் தட்சிணாமூர்த்தியும், மேற்குச் சுவரில் அண்ணாமலையாரும், வடக்குச் சுவரில் பிரம்மனும் உள்ளனர். தென்திசை மாடத்தில் விநாயகரும், வடதிசை மாடத்தில் துர்க்கையும் உள்ளனர்.

அர்த்த மண்டபச் சுவரில் பஞ்ச கோட்டங்கள் உள்ளன. இவை தேவகோட்டங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. இரு அரைத்தூண்களில் இலைக்கருக்கைப் பற்றி நிற்கும் யாளிகளும், அதன் மேல் முனைகளில் நாகபந்தக் கட்டுக்களும் செதுக்கப்பட்டுள்ளன. தூணின் மேலே உள்ள தாமரை இதழ் மீது பலகை அமைத்து உத்திரத்துடன் இணைக்கப்பட்டுள்ளன. கூரையின் உட்பகுதி மரச்சாத்துக்களை அறுத்துச் செதுக்கியவாறு இடை இடையே கற்கம்பிகள் இணைக்கப்பட்டுள்ளன. குமிழ் ஆணிகளும் அரையப்பட்டுள்ளன. கூரையின் மேற் பகுதியை நாசிக்கூடுகள் அலங்கரிக்கின்றன. இடை இடையே முனிவர்கள் உருவம் உள்ளது.

பிரஸ்தரம் என்ற கூரை கருவறையை மூடும் பகுதியாகும். எழுதகம் என்னும் பகுதியில் காணப்படும் பூதகணங்கள் இல்லை. மதளைகள் காணப்படுகின்றன.

அர்த்த மண்டபத்தின் மேலுள்ள கூரையும், கொடுங்கையும் செதுக்கு வேலைப்பாடு மிக்கதாய் உள்ளது.

இரு தளங்களை உடைய விமானம் உள்ளது. இரு தளங்களிலும் நீண்ட சாலைகள், கர்ணக்கூடங்கள் மாறி மாறி உள்ளன. இடையே கல் சன்னல்களும் உள்ளன. சாலைகள் மற்றும் கர்ணக் கூடங்களின் கால்கள் செங்கல் கொண்டு செதுக்கப்பட்டுள்ளன.

"இது அக் காலக் கட்டடக் கலையின் நுட்பமான வேலைப்பாட்டை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

விமான தளங்களின் நான்கு திசைகளிலும் தெய்வ உருவங்கள், திசைத் தெய்வங்கள், கந்தர்வர்கள், தேவர்கள், முனிவர்கள், மானிடர்கள், விமானந்தாங்கிகள், பூதகணங்கள், காளை வாகனம் ஆகிய சிற்பங்கள் சுதை வடிவில் உள்ளன.

கிரீவம் வட்ட வடிவமாய் உள்ளது. இதன் கிழக்கே இந்திரன், மேற்கே திருமால், திருமகள், நிலமகள், தெற்கே தட்சிணாமூர்த்தி, சனகாதி முனிவர்கள், வடக்கே பிரம்மா, சரசுவதி, சாவித்திரி ஆகிய தெய்வ உருவங்கள் உள்ளன. வேதிப் பட்டையில் சிவ கணங்களும், இரட்டை நந்தியும் உள்ளன.

கிரீவத்தின் மேல் சிகரம் உள்ளது. சிகரத்தின் மீது உலோகத்தால் ஆன ஸ்தூபி உள்ளது.

இவ் விமானம் வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ளது.

திருநிலைக் காலின் பக்க முனைகளில் பூவிதழ்கள் உள்ளன. அதன்கீழ் நாகபந்தக் கட்டுக்களும், கல்மணி வரிசையின்றியும், கண்ணாடிச் சட்டங்கள் செங்குத்தாயும் அமைக்கப்பட்டுள்ளன.

ஈசுவர ஆண்டு ஆனி மாதம் 5ஆம் தேதி (18.6.1937) நடந்த குடமுழுக்கு விழாவின் போது சண்டீசுவரர் விமானத்தை நகரத்தார்கள் கட்டினர்.

அர்த்த மண்டப நிலைவாயில் பக்கச் சுவர்களின் இரு புறமும் சதுர வடிவ மற்றும் உருளை வடிவ ஒற்றைக் கல் பஞ்சரங்கள் இரண்டு உள்ளன.

அர்த்த மண்டபத்தின் முன்புறம் சதுர வடிவுடைய மகா மண்டபம் உள்ளது. இரு வரிசைகளில் நான்கு தூண்கள் இம் மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன.

தூணில் தவழும் கண்ணன், பல்வேறு முனிவர்களின் தோற்றங்கள் முதலியன சிற்பங்களாக உள்ளன.

"நடராசர் சபையின் முன்புறம் உள்ள தூண்களில் இவ் வகைச் சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளதால், தாருகாவனத்து முனிவர்களை நினைவூட்டுவதாகக் கருதலாம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

இத் தூண்களின் போதிகையின் பூமுனை வாழை மொட்டுப்போல இல்லாமல், பருத்தி மொட்டைப்போல் உள்ளது.

"இத்தகைய போதிகையின் பூ முனை பிற்காலச் சோழர்களின் கட்டடக் கலைப் பாணியாக இருப்பினும், அவை நகரத்தார்

காலத்திலும் எடுத்தாளப்பட்டுள்ளது என்பதைக் காணமுடிகிறது" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

நடராசர் சன்னதியின் வாயிலில் சுதையால் செய்யப்பட்ட சிறிய, பெரிய கஜலெட்சுமிகள் உள்ளனர். இதன் மேற்புறம் கல் திருவாச்சி உள்ளது.

மகா மண்டபத்தின் முன்புறம் விசாலமான முக மண்டபம் உள்ளது. இம் மண்டபம் சுவாமி சன்னதி, பள்ளியறை ஆகியவற்றுக்குப் பொதுவாகக் கட்டப்பட்டுள்ளது. இங்கிருந்தே பக்தர்கள் தெய்வங்களை வணங்கலாம்.

முக மண்டபத்தை இணைக்க கிழக்கேயும், தெற்கேயும் அகலமான மூன்று படிகள் உள்ளன. இப் படிகளில் கம்பீரமான யானைகள் உள்ளன.

ஆலயத்திற்கு அழகூட்டும் தூண்களைக் கல்லாலும், உலோகத்தாலும், செங்கல்லாலும், மரத்தாலும் அமைத்துள்ளனர்.

நகரத்தார்கள் தாங்கள் கட்டிய, மேலும் திருப்பணி செய்த கோவில்களில் சிற்பத் தூண்கள், இரட்டைத் தூண்கள், மூலைகளில் பெருந்தூண்கள் முதலியவற்றை அமைத்துக் கட்டினர்.

இரணியூர் மற்றும் நேமம் நகரக் கோவில்களில் ஒரே தூணில் சிவனின் சிற்ப வடிவங்கள், நவதுர்க்கை, சுப்பிரமணியர், விநாயகர், வீரபத்திரர் உருவங்களைச் செதுக்கியுள்ளதைக் காணலாம்.

எளிமையான சித்திரத் தூண்களை இலுப்பைக்குடி, மாத்தூர், சூரக்குடி, பிள்ளையார்பட்டி, வேலங்குடி நகரக் கோவில்களில் அமைத்தனர்.

கிழக்கு மேற்காக வரிசைக்கு ஐந்து தூண்கள் வீதம் நான்கு வரிசைகளில் இருபது தூண்கள் முக மண்டபத்தைத் தாங்கி நிற்கின்றன. இத் தூண்கள் ஒவ்வொன்றும் ஒரே கல்லில் அதிட்டானத்தின் மேல் அமைக்கப்பட்டுள்ளன.

"இவ்விதம் அதிட்டானங்களோடு தூண்களைச் செதுக்கி அமைப்பது நகரத்தார் கட்டடக் கலைப்பாணியின் குறிப்பிடத்தக்க அம்சமாகக் கூறலாம். நகரத்தார்களின் கலைப்பாணியை அடையாளம் காண்பதற்கு இவை பெரிதும் துணை புரிகின்றன" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

இத் தூண்களின் நான்கு மூலைகளிலும் பெரிய நாகபந்தக் கட்டுக்கள் உள்ளன.

சதுரப்பட்டையில் தெய்வ உருவங்கள், கந்தர்வர்கள், மானிடர், பறவைகள், மிருகங்கள், தளிர்இலைக் கருக்குகள், பூங்கொடிகள், பூக்கள் போன்றவை புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

நாணுதலின் முன்புறம் பூ முனை விரிந்து காணப்படுகிறது. பூ முனையின் மொட்டு கையால் திருகி மாட்டுவது போன்று காடி எடுத்துச் செருகப்பட்டுள்ளது.

"இம்முறை, நகரத்தார்களுக்கு முன்பு இப்பகுதியை ஆட்சி செய்த சேதுபதி, நாயக்கர், விஜயநகரர், பாண்டியர் கட்டிய ஆலயத் தூண்களில் பின்பற்றப்பட்டுள்ளன" எனக் குறிப்பிடுகிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

சுவாமி சன்னதியின் முன்புறம் உள்ள முக மண்டபத்தின் மேலே ராசி மண்டலம் சித்திரமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

முக மண்டபத்தில் உள்ள சித்திரத் தூண்கள் இருபதில் அழகிய புடைப்புச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு :

1. தண்டாயுதபாணி
2. சண்டிகேசுவரர்
3. சுப்பிரமணியர்
4. காமாட்சி அம்மன்
5. அப்பர் பெருமான்
6. வள்ளி
7. தெய்வானை
8. புருஷாமிருகம்
9. காவல் தெய்வம்
10. சுயம்புலிங்கம்
11. லிங்கத்திற்குப் பால் சொரியும் பசு
12. சுயம்பு லிங்கத்தை நாவால் நீவும் பசு
13. பாயும் குதிரை
14. மதங்கொண்ட யானை
15. துதியாளி
16. சீறி நிற்கும் சிம்மம்
17. இலைக்கருக்குகளைப் பற்றி நிற்கும் சிம்மம்

18. அன்னம்
19. ஆடும் பாம்பை அலகால் பற்றி நிற்கும் கொக்கு
20. பறவையின் தலையும், யானையின் உடலும் கொண்ட மிருகம்

பன்னீர் செம்பு, கும்பக் கலசம், பூரண கும்பம், பூ ஜாடி, பூத்தொட்டி, பூங்கொத்து, அடர்ந்த மரம், இலைக்கருக்கு, இலைக்கொத்து, விரிந்த மலர், தாமரை வட்டம், வட்டம், அரைவட்டம் முதலிய சிற்பங்களும் உள்ளன.

"இச் சிற்பங்கள் யாவும் வெள்ளைக் கல்லில் செதுக்கப்பட்டு, செட்டிநாட்டுச் சிற்பிகளின் கட்டடக் கலைப் பாங்கினை வெளிப்படுத்துகின்றன" என்கிறார் திரு. மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வேலங்குடிக் கோவில்)**

மேற்சுற்றுப் பிரகாரத்தில் 42 தூண்கள் உள்ளன. மற்ற நகரக் கோவில்களைப் போன்று, மூலைப் பகுதியில் பெரும் கர்ணக்கால் தூண்களோ, அணியொட்டித் தூண்களோ இக்கோவிலில் இல்லை.

"இச் சிற்பப் படைப்புகள் செட்டிநாட்டுச் சிற்பிகளுக்கு இருந்த சமய அறிவு, விலங்கினங்கள், பறப்பன, ஊர்வன, நீந்துவன பற்றிய அறிவு, தாவர இயல் அறிவு முதலியனவற்றை வெளிப்படுத்துவன வாகக் கொள்ளலாம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வேலங்குடிக் கோவில்)**

திருச்சுற்றுப் பாதையின் நான்கு மூலைகளிலும் காற்றும், வெளிச்சமும் வரத்தக்க வகையில் இரும்புச் சன்னல்களுடன் கூடிய எடுத்துக்கட்டி மண்டபம் உள்ளது.

திருச்சுற்று மாளிகைப் பத்தியில் 40 தூண்கள் உள்ளன.

கருவறையை ஒட்டித் தட்சிணாமூர்த்தி மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது.

அதிட்டானத்தில் அழகிய 140 சிலம்பக் குமுதவரிகள் உள்ளன. சிலம்புக் குமுதவரியின் முகப்பில் சிம்மத்தின் வாயிலிருந்து வெளிப்படும் மூன்று சிலம்புகள் உள்ளன.

தட்சிணாமூர்த்தி மண்டப அதிட்டான முன் வரிசையில் இரு கரிய நிற வட்டத் தூண்கள் உள்ளன. இத் தூண்கள் மரத்தைக்

குடைந்ததைப் போன்று உருளை வடிவில் உள்ளன. தூண்களின் மேலே 24 பூ இதழ்களை உடைய தாமரை மலர் செதுக்கப்பட்டுள்ளது. மர உத்தரங்களைப் போன்று கல் உத்திரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

"ஒன்பது நகரக் கோவில்களில் பெரும்பாலான கோவில்களில் தட்சிணாமூர்த்தி மண்டபம் செம்மையான அமைப்புடையதாக விளங்கக் காண்கிறோம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

## அம்மன் கோவில்

இக் கோவில் அம்மனின் பெயர் காமாட்சி அம்மன். கருவறை, அர்த்த மண்டபம், முக மண்டபம் ஆகிய பகுதிகளை அம்மன் கோவில் கொண்டுள்ளது. கருவறை சதுர வடிவில் உள்ளது. இதன் நடுவே தாமரை இருக்கையின் மேல் இரண்டு கரங்களுடன் நின்ற கோலத்தில் அருள் சுரக்கும் காமாட்சி அன்னை உள்ளாள்.

அன்னையின் வலது கை கடக முத்திரையில் நீலோற்பவ மலரைப் பற்றியுள்ளது. இடது கை லோப முத்திரையில் உள்ளது. தலையில் மகுடம், நெற்றியில் பட்டம், காதுகளில் மகரக் குழைகள், கழுத்தில் மங்கல நாண், மணிவடம், முத்துவடம், கச்சையில்லா மார்பு, கைகளில் வளையல்கள், கால்களில் பாதசரம் ஆகிய அணிகளை அன்னை அணிந்துள்ளாள்.

அன்னையின் ஆலய வாயிலில் இரு துவார சக்திகள் உள்ளனர்.

## பைரவர்

பள்ளியறையை அடுத்து பைரவர் சன்னதி உள்ளது. சதுர வடிவுடைய கருவறையில் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் இரு வடுக வாகனங்களுடன் உள்ளார். ஆடையில்லை. மேல் வலக்கையில் உடுக்கை உள்ளது. இடக்கை ஆடும் அரவத்தைப் பிடித்துள்ளது. கீழ் வலக்கையில் சிறிய திரிசூலம் உள்ளது. இடக்கையில் கபாலம் உள்ளது. தலையில் அனல் மகுடம் உள்ளது. நெற்றியில் பட்டமும், வலது காதில் மகர குண்டலமும், இடது காதில் பதர குண்டலமும், கழுத்தில் கண்டசரம், மணிவடம், மார்பில் நாகாபரணப் புரிநூல், தோளில் தோள்வளையம், முன் கைகளில் காப்பு, மேல் வயிற்றில் மெல்லிய உதரபந்தம், இடையில் ஆடும் அரவ அரைஞாண் முதலியவற்றையும் கால்களில் பாதசரமும் அணிந்துள்ளார்.

இப் பைரவர் இலுப்பைக்குடி, மாத்தூர் நகரக் கோவில்களில் உள்ள பைரவர்களைப் போலக் காட்சி தருகிறார்.

"சோழ நாட்டில் இரு நாய் வாகனங்களோடு பைரவரைக் காண்பதரிது. பாண்டிய நாட்டில் மட்டுமே இரு நாய் வாகனங்களோடு கூடிய பைரவரைக் காண முடிகிறது. நகரத்தார்கள் பாண்டியர் கோவில்களை முழுமையாகத் திருப்பணி செய்த நிலையிலும், கோவிலை அப்படியே வேறோர் இடத்திற்கு மாற்றி அமைக்கும் நிலையிலும் கூடப் பழைய கோவிலுக்குரிய பாண்டியர் காலப் பைரவரைப் புதுக் கோவிலில் எடுத்து வைத்து வழிபட்டனர்" எனப் பாராட்டுகிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

இவ் ஆலய முகப்பில் இரு நாய்களுடன் உள்ள சிறிய பைரவர் சிற்பம் உள்ளது.

கருவறையின் முன்புறம் நீளமான அர்த்த மண்டபம் உள்ளது. சிற்ப வேலைப்பாடும், செதுக்கு வேலைப்பாடும் மிக்கதாய் இதன் வாயில் விளங்குகிறது. வேலைப்பாடு மிக்க நிலைக் கால்கள் பொருத்தப்பட்டுள்ளன. நிலைவாயில் உத்திரத்தில் கஜலெட்சுமியின் சிற்பம் உள்ளது.

பைரவரின் கீழே அக்னி வீரபத்திரர், அகோர வீரபத்திரர் ஆகிய இருவரும் அசுரனை அழிக்கும் நிலையில் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளனர்.

பைரவரின் விமானம் வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ளது. இரு அடுக்குகளைக் கொண்ட விமானத் தளங்களில் அழகிய சுதைச் சிற்பங்கள் உள்ளன. இதில் பைரவரின் பல்வேறு வடிவங்கள் வாகனத்தோடும், வாகனமின்றியும் வடிக்கப்பட்டுள்ளன. விமானந்தாங்கிகள் உள்ளனர்.

அதிட்டானத்தின் பத்ம வரியின் மூலைகளில் உள்ள இதழ்களைத் தாங்க நாகபந்தக் கட்டும், அமர்ந்த சிம்மங்களும் உள்ளன.

"செட்டி நாட்டுச் சிற்பங்களின் எளிமையான கட்டடக் கலைக்குப் பைரவர் சன்னதியை எடுத்துக்காட்டாகக் கூறலாம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

## சண்டிகேசுவரர்

*மேற்சுற்றுப் பிரகாரத்தின் வடக்கே சண்டிகேசுவரருக்குத் தனிச் சன்னதி உள்ளது. தென் திசையில் உள்ளவாறு கட்டப்பட்டுள்ளது. விமானப் பகுதி செங்கல்லாலும், ஏனைய பகுதிகள் வெள்ளைக் கல்லாலும் கட்டப்பட்டுள்ளன.*

*பக்கத்துக்கு நான்கு தூண்கள் வீதம் பதினாறு அரைத்தூண்கள் சுவரை அலங்கரிக்கின்றன.*

*தேவகோட்ட மாடங்களில் சிற்பங்கள் இல்லை. அதிட்டான வேதிப்படையின் நான்கு மூலைகளிலும் இரட்டை நந்தியும், சிவ கணங்களும் உள்ளன. மான், மழு ஏந்தி, அபய வரமளித்து அருளும் சிவனின் அமர்ந்த கோலச் சிற்பங்கள் உள்ளன.*

*சண்டிகேசுவரர் இரண்டு கரங்களுடன் மழு ஆயுதத்தைப் பற்றி அமர்ந்த கோலத்தில் உள்ளார்.*

## சோமாஸ்கந்தர்

*திருச்சுற்று மாளிகைப் பத்தியின் தென்மேற்குப் பகுதியில் சோமாஸ்கந்தரின் உலோக வடிவம் வழிபாட்டில் உள்ளது.*

*இச் சன்னதியும் வெள்ளைக் கல்லும், செங்கல்லும் கொண்டு கட்டப்பட்டுள்ளது. சுவரைச் சுற்றிலும் அரைத்தூண்கள் உள்ளன. விமானத்தின் வேதிப் படையில் காளை மாடும், பூதமும் உள்ளன. சிறிய, பெரிய கஜலெட்சுமியின் உருவங்கள் உள்ளன.*

## கணபதி

*சோமாஸ்கந்தரின் சன்னதியை ஒட்டி கணபதிக்குச் சன்னதி உள்ளது. கிழக்குப் பார்த்த இச் சன்னதியில் நான்கு கரங்களுடன் கணபதி வீற்றிருக்கிறார். மேற் கைகளில் அங்குசம், பாசம் உள்ளது. கீழ்க் கைகளில் தந்தம், மோதகம் உள்ளது. இடம்புரி விநாயகரான இவரின் இடது கையில் உள்ள மோதகத்தைத் துதிக்கை பற்றியுள்ளது.*

*இச் சன்னதியும் வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ளது.*

*வேதிப்படையில் இரு மூஷிக வாகனங்களும் பூத கணங்களும் உள்ளன.*

## சுப்பிரமணியர்

திருச்சுற்று மாளிகைப் பத்தியின் வடமேற்கில் சுப்பிரமணியர் சன்னதி உள்ளது. இச் சன்னதியின் நடுவில் மயில் வாகனத்தில் நான்கு கரங்களுடன் சுப்பிரமணியர் அமர்ந்துள்ளார். மேற் கைகளில் சக்திப் படையும், வஜ்ஜரப் படையும் உள்ளது. கீழ்க் கைகள் அபய முத்திரையைக் காட்டி அருளுகின்றன. வலப்புறம் வள்ளியும், இடப்புறம் தெய்வானையும் உள்ளனர்.

இச் சன்னதி வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. விமானத்தில் உலோக ஸ்தூபி உள்ளது. மயில் வாகனர் வள்ளி, தெய்வானையுடன் விமானத்தில் சுதை உருவில் காட்சி தருகிறார். வேதிப் படையில் இரு மயில்கள் நடுவே சிவகணம் காட்சி தர நான்கு திசைகளிலும் வடிக்கப்பட்டுள்ளது.

## மகாலெட்சுமி

திருச்சுற்று வடமேற்கு மூலையில் மகாலெட்சுமி சன்னதி உள்ளது. சன்னதியின் நடுவே நான்கு கரங்களுடன் மகாலெட்சுமி உள்ளாள். மேற்கரங்களில் தாமரை மலர்களைப் பற்றி உள்ளாள். கீழ்க் கரங்களால் அபய வரமளித்து அருளுகிறாள். இரு யானைகள் மகாலெட்சுமியின் இருபுறமும் நின்று அமுத கலசத்தில் உள்ள நீரைப் பொழிகின்றன.

வெள்ளைக் கல்லாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டுள்ள இச் சன்னதியை அடைய நான்கு படிகள் உள்ளன.

## சூரியன் - சந்திரன்

கிழக்கு கோபுரத்தின் உள்ளே வடக்கிலும், தெற்கிலும் சூரியனும், சந்திரனும் உள்ளனர். இவர்களுக்குச் சன்னதி இல்லை. உயர்ந்த மேடை மீது உள்ளனர்.

## ஒன்பது கோள்கள்

திருச்சுற்று மாளிகையின் வடகிழக்குப் பகுதியில் உயர்ந்த மேடை மீது ஒன்பது கோள்களும் உள்ளனர்.

## சிற்பங்கள்

கருவறைப் புறச்சுவரில் உள்ள தேவகோட்ட மாடங்களில், தெற்கே தட்சிணாமூர்த்தியும், மேற்கே அண்ணாமலையாரும், வடக்கே நான்முகனும் சிற்ப வடிவில் உள்ளனர்.

## தட்சிணாமூர்த்தி

*ஆலமர்ச் செல்வனான இவர் அமர்ந்த நிலையில் உள்ளார். இவரது வலது திருவடி முயலகன் முதுகில் உள்ளது. இவரது இடது திருவடி தொடையின் கீழ் உள்ளது.*

*மேற் வலக் கையில் ஆடும் அரவம், இடக் கையில் அனல், கீழ் வலக்கையில் உருத்திராட்ச மாலை, இடக்கை முழங்காலின் மேல் உள்ளவாறு இச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. இடக் கையில் சுவடி உள்ளது. பின்னால் ஆலமரம் உள்ளது.*

*தலையில் ஜடாமகுடம், நெற்றியில் நெற்றிப் பட்டம், காதுகளில் மகரக்குழைகள், கழுத்தில் கண்டிகை, உருத்திராட்சப் பதக்கம் முதலிய அணிகலன்களை அணிந்துள்ளார்.*

*முயலகன் கையில் வாளும், கேடயமும் உள்ளன.*

*தட்சிணாமூர்த்தியும், முலயகனும் ஒரே கல்லில் வடிக்கப் பட்டுள்ளனர்.*

## அண்ணாமலையார்

*அடிமுடி காணா அண்ணலான அண்ணாமலையார் உருளை வடிவ லிங்கத்தில் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். மேலிரு கரங்களிலும் மழுவும், மானும் உள்ளன. கீழ் வலக்கை அபய முத்திரை காட்ட, இடக்கை வரத முத்திரையைக் காட்டி அருளுகிறது.*

*தலையில் ஜடா மகுடம், காதுகளில் குண்டலங்கள், கழுத்தில் கண்ட மாலை, மணிவடம், மார்பில் பூணூல் முதலிய அணிகலன்களை அணிந்துள்ளார்.*

*லிங்கத்தின் மேலே அன்னமும், திருவடியின் கீழ் வராகமும் காட்டப்பட்டுள்ளன.*

*"பொதுவாகச் சோழர் காலச் சிற்பங்களில் இவ் வராகம் பன்றி முகமும், மனித உடலுமாகக் காட்டப்படுவது வழக்கம்" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.*

**(நன்றி : வேலங்குடிக் கோவில்)**

## நான்முகன்

நான்கு கரங்களுடன் நின்ற நிலையில் வடிக்கப்பட்டுள்ளார். வலது மேற்கையில் உருத்திராட்ச மாலை, இடக்கையில் கெண்டியும், வலது கீழ்க்கை அபய முத்திரை காட்ட, இடது கை வரத முத்திரை காட்ட நான்முகன் வடிக்கப்பட்டுள்ளார்.

நான்கு தலைகளிலும் ஜடா மகுடம், நெற்றியில் பட்டம், காதுகளில் உருத்திராட்ச குண்டலங்கள், கழுத்தில் கண்டிகை, ஒற்றை வடமாலை, பதக்கத்துடன் கூடிய கொத்துச்சரம், வயிற்றில் உதரபந்தம், மார்பில் பூணூல் முதலியவற்றை அணிந்துள்ளார்.

"பொதுவாகப் பாண்டியர், விஜயநகரர் மற்றும் நாயக்கர் கால நான்முகனின் சிற்பங்கள் மூன்று தலைகளுடன் அமைந்திருக்க, வேலங்குடி நான்முகன் நான்கு தலைகளுடன் அமைந்து காட்சி தருகிறது. இது நகரத்தார் காலச் சிற்பக் கலையை அடையாளம் காண உதவுகிறது. மாத்தூரிலும் இத்தகைய நான்முகனைக் காண்கிறோம்" எனத் தெரிவிக்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வேலங்குடிக் கோவில்)**

## விநாயகர்

அர்த்த மண்டப தேவகோட்ட மாடத்திற்குத் தெற்கில் விநாயகர் உள்ளார். இவர் சதுரமான இருக்கையின்மீது நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். மேல் வலக்கையில் அங்குசம், இடக்கையில் பாசக்கயிறு, கீழ் இரு கைகளில் எழுத்தாணியும், மோதகமும் உள்ளது. இடம்புரி விநாயகரான இவர் பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளார்.

## விஷ்ணு துர்க்கை

அர்த்த மண்டபத்தின் வடக்கே விஷ்ணு துர்க்கை உள்ளாள். நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளாள். மேல் வலக்கையில் சக்கரம், இடக் கையில் சங்கு அத்திரி முத்திரையில் உள்ளது. இடக் கை தொடைமீது அமைந்துள்ளது. பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள்.

## துவார பாலகர்கள்

வாயிலை இரு துவார பாலகர்கள் காத்து நிற்கின்றனர். பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ள இவர்கள் எடுப்பான உடற்கட்டுடன் வடிக்கப்பட்டுள்ளனர்.

## துவார சக்திகள்

*அம்மன் கோவில் வாயிலில் துவார சக்திகள் உள்ளனர். நான்கு கரங்கள் உள்ளன. கரங்களில் ஆயுதங்கள் உள்ளன. பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளனர்.*

## கன்னிமூலை கணபதி

*திருச்சுற்று மாளிகையின் தென்மேற்கு மூலையில் கன்னிமூலை கணபதி உள்ளார். நான்கு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் உள்ளார். வழக்கமான ஆயுதங்களுடன் உள்ளார்.*

## நவக்கிரகச் சிற்பங்கள்

*திருச்சுற்று மாளிகையின் வடகிழக்குப் பகுதியில் ஒன்பது கோள்கள் அமர்ந்த கோலத்தில் உள்ளனர். இக் கோள்களுக்குரிய வாகனங்களும், தேவியரின் உருவங்களும் இல்லை. இராகுவும், கேதுவும் இரு கரங்களுடன் உள்ளனர். ஏனைய கிரகங்கள் நான்கு கரங்களுடன் உள்ளனர். ஒன்பது கோள்களின் தலையில் கிரீட மகுடம் உள்ளது. சூரியன் மற்றும் சந்திரனின் பின்புறத்தில் ஒளிவட்டம் உள்ளது. சனி பகவான் காக்கை வாகனமின்றி, இடக்கையில் காக்கைக் கொடியைப் பற்றியுள்ளார்.*

*"இது செட்டிநாட்டுச் சிற்பக் கலையின் தனிச் சிறப்பாகும். பிற சோழ, பாண்டிய, கொங்கு மண்டலங்களில் இதைக் காண்பதரிது" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.*

**(நன்றி : வேலங்குடிக் கோவில்)**

*திருச்சுற்று மாளிகையில் பல புடைப்புச் சிற்பங்கள் உள்ளன.*

## செப்புத் திருமேனிகள்

*இக் கோவிலில் 18 செப்புத் திருமேனிகள் உள்ளன.*

*இங்குள்ள செப்புத் திருமேனிகள் இரு காலகட்டங்களில் செய்யப் பெற்றவை.*

*சிவகங்கை மன்னர்கள் ஆட்சியில் இக் கோவிலுக்குச் செய்தளித்தவை, நகரத்தார்கள் திருப்பணி செய்தபோது செய்தளித்தவை என இரண்டு காலகட்டங்களில் செய்யப்பட்ட செப்புத் திருமேனிகள் இங்குள்ளன.*

சிவகங்கை மன்னர்கள் இக் கோவிலுக்கு இரு காலகட்டங்களில் செப்புத் திருமேனிகளை செய்தளித்துள்ளனர். அதன் விபரம் வருமாறு :

அஸ்திர தேவர், நடராசர், சிவகாமி, மாணிக்கவாசகர், சோமாஸ்கந்தர், தனி அம்மன், விநாயகர், சந்திரசேகரர், சந்திர சேகரர் அம்மன் முதலியன.

நகரத்தார்கள் இக் கோவிலுக்குச் செய்தளித்த செப்புத் திருமேனிகளின் விபரம் வருமாறு :

பிரதோஷ விநாயகர், பள்ளியறைச் சொக்கர், பள்ளியறை அம்மன், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சண்டிகேசுவரர், நந்தி, கண்ணாடி முதலியன.

இவை அனைத்தும் செப்புக் கலவை கொண்டு கனமாக வார்க்கப்பட்டுள்ளன.

## அஸ்திர தேவர்

பத்ர பீடத்தின் மேல் தாமரை இருக்கையில் உருளை வடிவில் முத்தலைச் சூலமாக அமைக்கப்பட்டுள்ளது. ஆலயத்தில் நடைபெறும் அனைத்து விழாக்களின்போதும் அஸ்திர தேவரை முன்னே எழுந்தருளச் செய்வது வழக்கம்.

## நடராசர்

நடராசரின் திருவடிக்கீழ் வலது காலையும், முயலகனது முதுகையும் இணைக்கும் வகையில் ஆடும் நாகம் ஒன்றுள்ளது. கவிழ்ந்து கிடக்கும் முயலகனின் முதுகின் மீது வலது காலை ஊன்றி ஆடுகிறார். மேல் வலக் கையில் உடுக்கை, இடக் கையில் அனல்சுடர், கீழ்க் கைகள் மார்பிலும் அமைந்துள்ளன. பல அணிகலன்களை அணிந்துள்ளார்.

"செட்டிநாட்டுப் பகுதியில் பக்கவாட்டில் விரிசடையோடும், கொக்கிறகு செருகிய மகுடத்தோடும், உயர்ந்த சடை மகுடத்தோடும் என மூன்று வகை நடராசர் வடிவங்களைக் காணலாம். இது மூன்றாவது வகையைச் சார்ந்த வடிவமாகும்" என்கிறார் திரு.மா.சந்திரமூர்த்தி.

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

ஆடும் பெருமானைச் சுற்றிலும் ஒளிக் கற்றைகளோடு கூடிய ஓங்கார வடிவத் திருவாச்சி உள்ளது. பிரபாவளியைச் சுற்றிலும் 25 தீச் சுடர்கள் வரிசையாக அமைந்து ஒளி வீசுகின்றன.

## சிவகாமி

ஆடும் பெருமானின் இடப்புறம் அன்னை சிவகாமி தனிப் பீடத்தில் உள்ளாள். வலது காலை ஊன்றியுள்ளாள். இடது காலை முன் வைத்துள்ளாள். இடையை வலப்புறமாக ஒடித்து நிற்கிறாள். பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள். அழகிய திருவாச்சி உள்ளது.

## மாணிக்கவாசகர்

ஆடும் பெருமானின் வலப்புறம் மாணிக்கவாசகர் உள்ளார். நின்ற கோலத்தில் உள்ள இவரின் வலக் கையில் அக்கமாலை உள்ளது. இடக் கையில் புத்தகம், ஏடு உள்ளது. ஏட்டின் மீது 'நமசிவாய' என எழுதப்பட்டுள்ளது.

## சோமாஸ்கந்தர்

நீண்ட பீடத்தில் அமர்ந்த கோலத்தில் சோமாஸ்கந்தர் உள்ளார். நான்கு கரங்களுடன் உள்ளார். மேல் வலக்கையில் பெரிய மழு உள்ளது. இடக் கையில் மான் உள்ளது. கீழ் வலக்கை அபய முத்திரை காட்ட, இடக் கை சிம்ஹகர்ண முத்திரை காட்டுகிறது. பிறைச் சந்திரன் உள்ளது. பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளார்.

முன்பு, இக் கோவிலில் நடந்த மாசி மகத்தின் போதும், பிற மாதாந்திர விழாக்களின் போதும் காலையிலும், மாலையிலும் சோமாஸ்கந்தரை எழுந்தருளச் செய்தவர். இக்கோவிலுக்கு உரிய இறைவனாக இவரது உற்சவ மூர்த்தியைக் கருதி வழிபடுகின்றனர்.

## பிரியாவிடை

சிவனைப் பிரியா அன்னை இரண்டு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் உள்ளாள். வலக் கையில் நீலோற்பவ மலர் உள்ளது. இடக் கை வரத முத்திரையைக் காட்டுகிறது. பல்வேறு ஆடை, அணிகளை அணிந்துள்ளாள்.

## ஸ்கந்தன்

தாமரைப் பீடத்தில் தாமரை மலரை இரு கைகளில் ஏந்திய வண்ணம் இடையில் ஆடை அணிந்து இளம் பிள்ளையாக ஸ்கந்தனது வடிவம் வடிக்கப்பட்டுள்ளது.

## தனி அம்மன்

சதுர பீடத்தில் நின்ற கோலத்தில் தனி அம்மன் உள்ளாள். வலக் கரம் மலர் ஏந்தியுள்ளது. இடக் கரம் தாழ்க்கரமாக நீண்டுள்ளது. பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளாள்.

## விநாயகர்

நான்கு கரங்களுடன் விநாயகர் நின்ற நிலையில் உள்ளார். வழக்கமான ஆயுதங்களும், மோதகமும் உள்ளன.

## சந்திரசேகரர்

நான்கு கரங்களுடன் சந்திரசேகரர் படிமம் உள்ளது. வழக்கமான ஆயுதங்கள் கரங்களில் உள்ளன.

## சந்திரசேகரர் அம்மன்

நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டுள்ள அம்மன் மலரை ஏந்தியுள்ளாள். வழக்கமான அணிகலன்களை அணிந்துள்ளாள்.

## பிரதோஷ நாயகர்

நீண்ட பீடத்தின் மீது சிவன் உமையுடன் தனித்தனியாக நின்ற கோலத்தில் உள்ளனர். சிவனது வடிவத்தில் நான்கு கரங்களுடன் உள்ளார். கரங்களில் மான், மழு, அபய முத்திரை, வரத முத்திரை உள்ளன. அணிகலன்கள் உள்ளன. இடப்புறம் உமை உள்ளாள். கரங்களில் மலரும், முத்திரையும் காணப்படுகிறது. அணிகலன்களை அணிந்துள்ளாள். 18 தீச் சுடர்கள் உள்ள திருவாச்சி உள்ளது.

## பள்ளியறைச் சொக்கர்

நான்கு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் சொக்கர் உள்ளார்.

## பள்ளியறை அம்மன்

இரண்டு கரங்களுடன் நின்ற கோலத்தில் அம்மன் உள்ளாள்.

## சுப்பிரமணியர் - வள்ளி - தெய்வானை

வள்ளி - தெய்வானை சூழ சுப்பிரமணியர் ஒரே பீடத்தில் நின்ற கோலத்தில் உள்ளார். சுப்பிரமணியர் நான்கு கரங்களுடன் உள்ளார். மூவரும் வழக்கமான அணிகலன்களை அணிந்துள்ளனர்.

## சண்டிகேசுவரர்

இரு கைகளைக் கூப்பி வணங்கி நிற்கும் நிலையில் சண்டிகேசுவரர் வடிக்கப்பட்டுள்ளார். வழக்கமான ஆயுதங்களும், அணிகலன்களும் உள்ளன.

## நந்தி

சுவாமி சன்னதிக்கு எதிரே ஒரு நீண்ட கல்மேடையில் நந்தி உள்ளார். கொம்பில் ஆரமும், கொப்பியும், நெற்றியில் சுட்டியும், கழுத்தில் சதங்கையும், கயிறும், மணிவாரும், உடல்மீது விரிப்பும், மணிகள் கோர்த்த இடைவாரும், மூக்கில் மூக்கணாங்கயிறும் நந்தியை அலங்கரிக்கின்றன.

## கண்ணாடி

நந்தியின் பின்புறம் கல்மேடையின் மீது உலோகக் கண்ணாடி உள்ளது. கண்ணாடியைச் சுற்றிலும் 22 இதழ்கள் கொண்ட இலைக் கருக்குகள் உள்ளன. கண்ணாடியின் முன்புறமும், பின்புறமும் இரு சிம்ம முகங்கள் உள்ளன. நான்கு மூலைகளிலும் சிறிய நந்தியின் சிற்ப வடிவங்கள் உள்ளன.

"இவை நகரத்தார் கலைக்கும், தொழில் நுட்பத்திற்கும் சீரிய எடுத்துக்காட்டாய் திகழ்பவை" என்கிறார் திரு.மா. சந்திரமூர்த்தி.

**(நன்றி : வேலங்குடிக் கோவில்)**

## இராசகோபுரம்

இக் கோவில் இராச கோபுரம் மூன்று நிலைகளை உடையது. இக் கோபுரம் மேலே போகப்போகக் குறுகி நீண்ட சதுர வடிவாய் அமைந்துள்ளது. வெள்ளைக் கல்லும், செங்கல்லும் கொண்டு கட்டப்பட்டுள்ளது. துவார பாலகர்கள், தெய்வங்கள், திசைக் காவலர்கள், விமானம் தாங்கிகள், வானவர், முனிவர், மானிடர், பூதகணங்கள், காளை வாகனம் போன்ற சுதை உருவங்கள் கோபுரத்தில் உள்ளன. சிவபுராணம் மற்றும் கந்தபுராணக் காட்சிகளும் சுதை வடிவில் உள்ளன. சிகரத்தின் உச்சியில் ஐந்து உலோக ஸ்தூபிகள் உள்ளன.

கோபுர வாயிலின் இருபுறமும் விநாயகரும், தண்டாயுத பாணியும் தனித் தனிச் சன்னதிகளில் உள்ளனர்.

## தேசிக நாராயணப் பெருமாள் கோவில்

நகரச் சிவன் கோவில் ஊருணியின் வடமேற்குத் திசையில் பெருமாள் கோவில் உள்ளது. பெருமாள் தேசிக நாராயணர். அன்னை அலர்மேலு மங்கை என்ற மகாலெட்சுமி.

இக் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், திருச்சுற்று, தாயார் சன்னதி, கருடாழ்வார் சன்னதி, கொடி மரம், திருமதில் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது.

இக் கோவில் விமானம் இரு தளங்களை உடையது.

தேசிக நாராயணப் பெருமாள் சதுர்புஜங்களுடன் ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவி சமேதராக நின்ற கோலத்தில் சேவை தருகிறார். பெருமாளின் மேற் கரங்களில் ஆழியும், சங்கும் உள்ளன. கீழ் வலக்கை அபய முத்திரை காட்டுகிறது. இடது கை ஊரு முத்திரையில் தொடைமீது உள்ளது. பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளார்.

பாஞ்சராத்ரா முறையில் இக் கோவிலில் வழிபாடு நடைபெறுகிறது.

அர்த்த மண்டப வாயிலை ஜெயன், விஜயன் என்ற இரு துவார பாலகர்கள் காத்து நிற்கின்றனர்.

திருச்சுற்றுப் பாதையின் தென்திசையில் தாயார் சன்னதி உள்ளது. தாயார் பத்மாசனத்தில் சதுர்புஜங்களுடன் வீற்றிருக்கிறார்.

திருச்சுற்றின் வடபுறம் ஆண்டாள் சன்னதி உள்ளது. இரண்டு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார்.

ஆலயத்திற்கு வெளியே அனுமனுக்குத் தனிச் சன்னதி உள்ளது. இருகரம் கூப்பி வணங்கிய நிலையில் அனுமன் உள்ளார். இவரை வழிபட்டால் திருமணம் முடியும் என நம்புகின்றனர். எனவே, இவர் 'கல்யாண ஆஞ்சநேயர்' என அழைக்கப்படுகிறார். இக் கோவில் அறங்காவலர் திரு.செ.மி.ச.ச. பிச்சப்பா வள்ளியம்மையால் கட்டப்பெற்று நிர்வகிக்கப்படுகிறது.

## சொற்கேட்டான் விநாயகர் கோவில்

ஊருணியின் மேற்கரையில் இவ் விநாயகர் கோவில் உள்ளது. கொடி மல்லிகைப் பூச்செடிகளை நிழலாகக் கொண்டு முன்பு திறந்தவெளியில் இவ் விநாயகர் வீற்றிருந்தார். வேலங்குடி நாட்டார்

வழிபாட்டில் இருந்த விநாயகரைப் பின்னர் ஊராரும், நகரத்தாரும் வழிபடத் தொடங்கினர்.

5.2.1992இல் திருப்பணி செய்து விநாயகரையும், நாகரையும் பிரதிஷ்டை செய்தனர். முன் மண்டபத்தில் நாட்டு ஓடு கூரை உள்ளது. திருச்சுற்றுச் சுவரும், தீர்த்தக் கேணியும் கட்டப்பட்டது. இத் திருப்பணியை நகரத்தார் செய்தனர்.

விநாயகர் நான்கு கரங்களுடன் உள்ளார். அங்குசம், பாசக்கயிறு, ஒடிந்த தந்தம், மோதகம் முதலியன கரங்களில் உள்ளன. பல அணிகலன்களை அணிந்துள்ளார்.

பாரம்பரியமாக ஒரே குடும்பத்தைச் சேர்ந்த பண்டார சாதியினர் (மூர்த்திகள்) இக் கோவிலுக்குப் பூசை செய்து வருகின்றனர்.

## மேதா தட்சிணாமூர்த்தி

விநாயகர் கோவில் திருச்சுற்றின் வடக்கே மேதா தட்சிணாமூர்த்தி சன்னதி உள்ளது. நான்கு கரங்களுடன் வீற்றிருக்கிறார். நாகம், அனல் தண்டு, அக்கமாலை முதலியன கரங்களில் உள்ளன. ஞானமுத்திரை காட்டுகிறார். சுவடியை ஏந்தியுள்ளார். கயிலை மலை மீது தனியாக உள்ள இவரின் பின்புறம் ஆலவிருட்சம் உள்ளது.

வேலங்குடி கோவில் நகரத்தார்களைச் சார்ந்த புள்ளிகள் குறைவாக இருப்பதற்குக் குருவின் சாபமே காரணம் என ஒரு கருத்து நிலவுகிறது. எனவே, அச் சாபத்திலிருந்து விடுபட தட்சிணாமூர்த்திக்கு ஒரு தனிக்கோவில் எழுப்புமாறு காஞ்சி சங்கராச்சாரியார் ஆலோசனை கூறினார். அதனால், நகரத்தார்கள் தனிக் கோவிலைக் கட்டினார்கள்.

இச் சன்னதி வெள்ளைக் கல்லும், செங்கல்லும் கொண்டு கட்டப்பட்டுள்ளது. விமானத்தின் கிரீவ கோட்டங்களின் நான்கு மூலைகளிலும் தட்சிணாமூர்த்தியின் சுதை வடிவங்கள் உள்ளன. வேதிப்படையின் நான்கு திசைகளிலும் இரு காளைகளுடன் கூடிய சிவ கணங்கள் சுதை வடிவில் உள்ளன.

இச் சன்னதி கருவறை வாயிலில் தேவகோட்டை செ.பி.ச.ச. பிச்சப்பா வள்ளியம்மை குடும்பத்தாருக்குச் சொந்தமானது எனக் கல்வெட்டில் உள்ளது.

## அருள்மிகு வயல் நாச்சியம்மன் கோவில்

இவ் ஊரின் கிராம தெய்வமான வயல் நாச்சியம்மனுக்குப் பெரிய கண்மாய் பாசனத்தில் அமைந்த வயல்களின் தென் பகுதியில் கோவில் எழுப்பியுள்ளனர். ஊரின் எல்லையை ஒட்டி இக் கோவில் அமைந்துள்ளது. பாலைய நாட்டுப் பதினாறு ஊர்களுக்கும் சொந்தமானது. எனவே, இக்கோவில் 'நாட்டுக்கோவில்' என்றழைக்கப்படுகிறது.

முன்பு மன்னன் ஒருவன் வேட்டையாடக் குதிரையில் வந்தான். அப்போது கல் தடுக்கி குதிரை கீழே விழுந்தது. இதன் காரணம் என்ன என மன்னன் சிந்தித்தான்.

குதிரை விழுந்த இடத்தில் நிலத்தைத் தோண்ட, பூமியிலிருந்து அம்மன் சிலை கண்டெடுக்கப்பட்டது. அதுவே கிராம தெய்வமாக இன்று வழிபாட்டில் உள்ளது. அம்மனின் தலையில் குதிரையின் கால் குளம்புத் தடம் காணப்படுகிறது.

இந்த அம்மன் வயல்வெளியில் கோவில் கொண்டுள்ளதால் 'வயல் நாச்சி அம்மன்' என அழைக்கப்படுகிறாள்.

எட்டுத் தோள்களுடன் கோபம் கொப்பளிக்க அம்மன் வீற்றிருக்கிறாள். இவள் நிசும்பன் என்ற அசுரனை அழித்தாள். அவன் இவள் காலடியில் விழுந்து கிடக்கிறான்.

மாத்தூரிலுள்ள அழகு நாச்சியம்மனுடன் ஒப்பிடத்தக்கவள் இவள்.

காளியின் சீற்றத்தைத் தணிக்கவும், அனைவரும் நல்வாழ்வு பெறவும், பூசையும், பொங்கலும் இட்டு, சந்தனக் காப்பு சாத்தி, செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் வழிபடுகின்றனர். ஏனைய நாட்களில் ஒருகாலப் பூசை நடைபெறுகிறது.

காளியின் செப்புத் திருமேனி ஊர் நடுவில் உள்ள பெரிய நாயகி அம்மன் கோவிலிலே உள்ளது. அதற்கு நாள்தோறும் மூன்று காலப் பூசை நடைபெறுகிறது.

இக் கோவில் திருப்பணியில் ஆ.முத்துப்பட்டணம் நகரத்தார்கள் பெரும் பங்காற்றியுள்ளனர்.

150 ஆண்டுகளுக்கு முன்பு, இக் கோவிலை வெள்ளைக் கல்லால் திருப்பணி செய்து, முன் மண்டபம், திருச்சுற்று மதில், இராச

கோபுரம் முதலியவற்றை நகரத்தார்கள் செய்ததாகக் கல்வெட்டு மூலம் அறிகிறோம்.

இக் கோவில் கருவறை, அர்த்த மண்டபம், முன் மண்டபம், ஆட்கொண்ட விநாயகர் சன்னதி, திருச்சுற்று, மடைப்பள்ளி, கிணறு, கோபுரம், பலி பீடம் எனப் பகுதிகளைப் பெற்றுள்ளது. கோவிலின் பின்புறம் ஊருணியும், சவுக்கையும், விடுதியும் உள்ளது.

பாலைய நாட்டுப் பதினாறு ஊர்களுக்குச் சொந்தமான இக் கோவிலில் ஆண்டுதோறும் தேர்த் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இவ் விழாவில் வேலங்குடி, பள்ளத்தூர், கோட்டையூர், மனச்சை, கண்டனூர், வடகுடி, கொத்தரி ஆகிய ஏழு ஊர் சாமியாடிகள் முன்னிலையில் மதுக்குடம் எடுத்து வருவர். இது 'ஏழூர் செவ்வாய்' என அழைக்கப்படுகிறது.

## ஊருணிகள்

இங்கு இரண்டு ஊருணிகள் உள்ளன. ஒன்று சிவன் கோவில் ஊருணி. இரண்டு வயல் நாச்சியம்மன் ஊருணி.

நான்கு புறமும் படித்துறைகள் உடைய பெரிய ஊருணி சிவன் கோவில் ஊருணியாகும்.

அல்லியும், தாமரையும் நிறைந்து வயல் நாச்சியம்மன் ஊருணி உள்ளது.

கோவிலின் பின்புறமுள்ள வடக்குப் படித்துறையின் மேற்புறத்தில் "இவ் ஊருணி பாலைய நாட்டைச் சார்ந்த வேலங்குடி பெரிய நாயகி அம்மன் கோவில் ஊருணி" என்ற கல்வெட்டு ஒன்று உள்ளது.

"மாத்தூர் அரும்பாக்கூர் பிரிவைச் சார்ந்த ஆத்தங்குடி பெரிய அழகப்ப செட்டியார் மகன் சின்னான் செட்டியார் தாது வருடம் தை மாதம் பத்தாம் தேதி (21.1.1877) ஊருணி வெட்டிக் கல்கட்டுக் கட்டியதாகவும்" இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

இவ் ஊருணிக்கு இடம் போதாததால் மீண்டும் நிலம் வாங்கப்பட்டுச் சேர்க்கப்பட்டதை 12.1.1916இல் எழுதப்பட்ட காகித ஆவணம் தெரிவிக்கிறது. இதன் விலை ரூ. 706/- எனவும் குறிக்கப் பட்டுள்ளது.

மாத்தூர் அரும்பாக்கூர் பிரிவைச் சேர்ந்த ஆத்தங்குடி சி.மு. சுப்பிரமணியன் செட்டி லெட்சுமணன், பெரிச்சியப்பன் செட்டி

பெரி. கருப்பன், அருணாசலம் செட்டி, இராமநாதன், பெரி. கருப்பன் செட்டி பழனியப்பன், அள.சு.சுப்பிரமணியன் செட்டி பெரியணன் முதலிய நகரத்தார்கள் வயல் நாச்சியம்மன் கோவில் ஊருணிக்குத் தர்மம் செய்துள்ளதாக அக் காகித ஆவணம் தெரிவிக்கிறது.

இக் காகித ஆவணத்தினை எழுதும்போது நாட்டார்கள் சார்பில் கலந்து கொண்டவர்கள் விபரம் வருமாறு :

பழனியப்பன் மகன் திருவுடையான் சேர்வை, பழனியம்பலம் மகன் இராமன், பாகைச்சான் மெய்யப்பன் அம்பலம் மகன் வீரப்பன், சின்னா சின்னக் கருப்பன் அம்பலம், பெரியணம்பலம், சின்ன வீரனத்தம்பலம், சோலையன் முதலியோர் ஆவர்.

இந்த ஆவணத்தை எழுதியவர் நாட்டுக் கணக்கு கோவிலதன் கணக்கு நெல்லியப்பன் மகன் நெல்லியப்பன்.

இதற்குச் சாட்சி : அள.அரு. இராமசாமி, அ. அருணாசலன்.

இவ் ஆவணத்தை அறிந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளவர் : சா.ராம. முத்தையா செட்டி.

இந்த முதல் காகித ஆவணம் ஆத்தங்குடி பெ.க.சு. பெரிச்சியப்ப செட்டியாருக்குக் கோட்டையூர் பெ.மு.சு. முத்தய்யா செட்டியார் எழுதிக் கொடுத்தது ஆகும்.

இவ் ஊருணிக்கு ஆங்கில அரசின் குத்தகைதாரர் வரி விதித்துள்ளார்.

இச் செய்தியை 1920இல் எழுதப்பட்ட மற்றொரு காகித ஆவணம் தெரிவிக்கிறது.

இந்த ஆவணத்தில் வரி குத்தகைதாரர் கோட்டையூர் பெ.மு.சு. முத்தய்யா செட்டியார் ஆத்தங்குடி பெ.க.சு. பெரிச்சியப்ப செட்டியாருக்கு ஊருணி வரியைக் குறைக்க இயலாதென எழுதியுள்ளார்.

ஊருணி வரியாக நிலவரி, சாலை வரி, தொடர் வண்டி வரி ஆகியவை ஒரு பசலிக்கு எட்டு ரூபாய் ஓர் அணா, ஐந்து பைசா வீதம் தீர்வையாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இக் குத்தகை உடன்படிக்கையைக் ‘கவுல்’ எனக் குறிப்பிடுகின்றனர்.

இவ் ஆவணத்தை எழுதியவர் மதுரையில் வந்திருக்கும் தேவகோட்டை வெங்கடாசலமய்யன் குமாரர் குப்பய்யன்.

இவ் ஆவணம் ஆத்தங்குடி பெ.க.சு. பெரிச்சியப்ப செட்டியாருக்குக் கோட்டையூர் பெ.மு.சு. முத்தய்யா செட்டியார் சார்பாக சித்தார்த்தி வருடம் மாசி மாதம் 25ஆம் தேதி பேஷ்கர் சாமினாத அய்யர் எழுதியது. வரி வசூல் செய்தவர் வேலங்குடி லை. பெரியணனம்பலம்.

இவ் ஊருணியைச் சுற்றி நாட்டார்கள் வைத்திருந்த தென்னை மரங்களை அகற்றித் திருவீதி அமைக்க, பெரிய கண்மாயிலிருந்து மஞ்சள் மடை வழியாக ஊருணிக்குத் தண்ணீர் விட, கோவிலுக்கு வரப் பாலம் அமைத்துக் கொள்ள, அனுமதி தரப்பட்டதை ஓர் ஓலை ஆவணம் தெரிவிக்கிறது.

நிலங்களைத் திருத்தி, திருவீதி அமைத்து, இறைவி உலா வர, ஆறாம் திருநாளை, திருப்பணி செய்த ஆத்தங்குடி மாத்தூர் கோவில் அரும்பாக்கூர் பிரிவு நகரத்தார் நடத்த நாட்டார்கள் சம்மதம் தெரிவிக்க, திருவிழா நாள் குறித்துத் திருமுகம் அனுப்ப சம்மதிக்க, ஊருணியைச் சுற்றித் தென்னைமரம் வளர்த்து, அதன் வருவாயைக் கோவிலுக்குத் தர ஒப்புக் கொண்டதையும், ஊருணி மீன் வருவாயை ஊருணிப் பராமரிப்புக்குச் செலவிடவும், ஊருணிக் கரையில் விடுதி கட்டிக் கொள்ளவும், தண்ணீர் பற்றாக் காலத்தில் ஊருணி நீரை விவசாயத்திற்கு நாட்டார் பயன்படுத்தாமல் இருக்க, ஊருணியில் சேறு அள்ளும்போது நாட்டாரின் தென்னை மரங்களுக்குக் கெடுதல் இல்லாமல் போட, ஆத்தங்குடி நகரத்தாரில் ஒரு பிரிவினரும், நாட்டாரும் செய்து கொண்ட உடன்படிக்கைகளை மற்றொரு ஓலை ஆவணம் தெரிவிக்கிறது.

இவ் உடன்படிக்கை 'வேலங்குடி ஊருணி முறி' என அழைக்கப்படுகிறது. இம் முறி பவ வருடம் மார்கழி மாதம் 4ம் தேதி (1875) ஆத்தங்குடி லெட்சுமணன் செட்டியார் முதலானோருடன் நாட்டார் செய்து கொண்ட உடன்பாடாகும்.

இம் முறியில் குறிக்கப்படும் லெட்சுமணன் செட்டியார் சிதைந்திருந்த வயல் நாச்சியம்மன் கோவிலின் கருவறை, அர்த்த மண்டபம், இவற்றை ஒட்டியுள்ள சுவர், நடை மண்டபம் ஆகியவற்றையும் புதிதாக அமைத்தவர் ஆவார்.

இவருக்கு ஒரு செப்புத் திருமேனி செய்யப் பெற்று, இக் கோவிலில் 'பாவை விளக்காக' உள்ளது.

தகவல் : திரு.மா.சந்திரமூர்த்தி

(நன்றி : வேலங்குடிக் கோவில்)

மாமன்னர் இராசராச சோழனைப் போல, நகரத்தார்களும் உடன்படிக்கைகளை ஆவணப்படுத்தியுள்ளதை இதன் மூலம் அறியலாம். நகரத்தார்களின் அறப்பண்பு தெளிவாகத் தெரிகிறது.

இக்கோவிலைச் சார்ந்த நகரத்தார்கள் வாழும் ஊர்கள் 4. அவை:

1. தேவகோட்டை
2. காரைக்குடி
3. பட்டமங்கலம்
4. கருங்குளம்

**வேலங்குடிக் கோவில் வேள்வணிகச் செட்டிமக்கள்**
**ஞாலமதில் பேரோங்க நாடுபுகழ்-மூலவராய்க்**
**காலமெல்லாம் கண்டீஸ்வரர் காமாட்சி அம்மையுடன்**
**சீலமுடன் வாழ்வளிப்பார் சேர்ந்து**

**- நல்லறக் கவிராயர் சுப.நா.நாகப்பன்**

**காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலம்திருத்தி**
**வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர் வீடுகட்கு**
**அன்றைக்கு வந்தளங்கள் அம்மா இலக்குமியே**
**என்றைக்கும் நீங்கா திரு.**

**- பாடுவார் முத்தப்பர்**

இந்நூல் எழுதத் துணை புரிந்த நூல்களின் பட்டியல் :

1. நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு - பண்டிதமணி
2. ஒன்பது நகரக் கோவில்கள் - முனைவர் தமிழண்ணல் - நகரமலர்
3. ஒன்பது நகரக் கோவில்கள் - முனைவர் வ. தேனப்பன்
4. நகரக் கோவில்கள் ஒன்பது திருப்பதிகம் - கவிஞர் சித.சிதம்பரம்
5. பிள்ளையார்பட்டி - தலவரலாறு - கம்பன் அடிப்பொடி சா. கணேசன்
6. இளையாற்றங்குடி மான்மியம்
7. இலுப்பைக்குடிப் புராணம்
8. நகரத்தார் மரபும், பண்பாடும் - கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி
9. நகரத்தார் கலைக்களஞ்சியம்
10. நகரத்தார் பெருமை - வெற்றியூர் அரு. சுந்தரம்

11. இணையற்ற இளையாத்தங்குடி - டாக்டர் எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்
12. இளையாத்தங்குடிக் கோவில்
13. மாத்தூர் கோவில்
14. இலுப்பைக்குடிக் கோவில்
15. பிள்ளையார்பட்டிக் கோவில்
16. வயிரவன்பட்டிக் கோவில்
17. நேமம் கோவில்
18. சூரக்குடிக் கோவில்
19. இரணிக் கோவில்
20. வேலங்குடிக் கோவில்

12 முதல் 20 வரை உள்ள நூல்களின் ஆசிரியர் கோவில் கலைச் செம்மல் மா. சந்திரமூர்த்தி.

21. பூச்சரம்.

## பிற்சேர்க்கை

வேலங்குடிக் கோவிலுக்குச் சென்று அக் கோவிலைப் பற்றிய செய்திகளைப் பலரிடம் கேட்டபோது, வேலங்குடியில் உள்ளவர்கள் சொன்ன ஒரு செய்தி என்னை மிகவும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது.

செய்தி இதுதான் :

நகரத்தார்களுக்கு, அவர்களுடைய குருவின் சாபம் ரொம்ப நாட்களாக உள்ளது. அதனால் நகரத்தார்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். குறிப்பாக, வேலங்குடிக் கோவில் நகரத்தார் புள்ளிகள் கூடாததற்கு, குருவின் சாபமே காரணம் எனத் தெரிவித்தனர்.

இச் செய்தி இதுவரை நான் கேள்விப்படாத செய்தியானதால், எனக்கு மிகுந்த வேதனை மற்றும் கவலை ஏற்பட்டது.

என்னைப் போலவே பெரும்பான்மையான நகரத்தார்களுக்குக் குருவின் சாபம், விபரம் தெரியாமல் இருக்கலாம்.

குருவின் சாபம் என்ன, அச் சாபம் எதனால் ஏற்பட்டது? இதைப் பற்றி யாரிடம் விளக்கம் கேட்கலாம் என நான் யோசித்தேன்.

இறைவன் கருணையாலே, 'பூச்சரம்' சிறப்பாசிரியரும், என்னுடைய பேராசிரியருமான முனைவர் தெ. சொக்கலிங்கம் அவர்களால் விடை கிடைத்தது.

'பூச்சரம்' ஆசிரியர் திரு. பழ.ப. பழனியப்பன் அவர்கள் வேலங்குடிக் கோவிலில் செய்த பரிகாரத்தைப் பற்றி எழுதியிருந்தார்கள்.

அவர்களின் கருத்துக்களை எல்லா நகரத்தார்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் இந்நூலின் பிற்சேர்க்கையில் தெரிவித்துள்ளேன்.

குருவின் சாபம் நீங்கி, நகரத்தார்கள் வளம் பெற, என்னுடைய பேராசிரியர் பிள்ளையார் சுழி போட்டுள்ளார்.

நகரத்தார்கள் எல்லோரும் சாப நிவர்த்திக்காக குருவிடம் மன்னிப்பு கேட்டு மன்றாடுவோம். குருவின் அருளால் அச் சாபத்திலிருந்து விடுபடுவோம்.

தக்க சமயத்தில் குருவின் சாபத்தை நினைவூட்டி, அதிலிருந்து விடுபட நம்மைத் தூண்டிய என்னுடைய பேராசிரியருக்கு என் நன்றி. 'பூச்சரம்' ஆசிரியருக்கும் என் நன்றி.

அன்பன்,

அரு. சுந்தரம்



# நகரத்தார்கள்
# குரு சாபம் - விவரம்

அக் காலத்தில் பாண்டிய நாட்டில் குடியேறிய நகரத்தார்கள், தங்களிடையே இன்ன கோவிலார் - இன்ன பிரிவினர் - இன்ன காரியங்களைப் பார்த்துக் கொள்வது என்ற வழக்கம் நடைமுறையில் இருந்தது.

இதன்படி, நகரத்தார் குழுவின் தலைவராக இளையாத்தங்குடி பட்டினசாமிப் பிரிவினர் இருந்தனர். இவர்களுக்குக் கோவிலில் முதற்கண் பட்டுச் சாத்தும் உரிமை இருந்தது.

இளையாத்தங்குடி, ஒக்கூருடையார் பிரிவினருக்குக் கோவிலில் முதல் மரியாதை, முதல் காலாஞ்சி பெறும் உரிமம் கொடுக்கப்பட்டது.

பாண்டிய மன்னன் விதித்த தண்டனையாக எட்டுத்தலையில் வியன் தலையை ஒக்கூருடையார் பிரிவினர் கொடுக்க முன்வந்ததில், கோவிலில் அவர்களுக்கு முதல் மரியாதையை நகரத்தார்கள் வழங்கிய செய்தியை நாமறிவோம்.

இம் முதல் மரியாதையை இவர்கள் பெற்றதற்கு வேறு ஒரு காரணத்தைப் பேராசிரியர் முனைவர் தெ. சொக்கலிங்கம் தெரிவிக்கிறார். அது வருமாறு :

இராங்கியத்தில் இளையாத்தங்குடி ஒக்கூருடையார் பிரிவினைச் சார்ந்த வணஜ இராமன் செட்டியார் கி.பி. 1450க்கு முன்னர் சிவன் கோவிலைக் கட்டியுள்ளார். இக் கோவிலில் உள்ள கல்வெட்டு ஒக்கூருடையாருக்கு முதல் மரியாதை கொடுக்க வேண்டும் என்றும், இரண்டாவது மரியாதை கழனிவாசல் உடையார்க்கு (வயிரவன் கோவில்) கொடுக்க வேண்டும் என்றும் தெரிவிக்கிறது.

திருக்கோவில் திருப்பணியை முதன்முதலில் தொடங்கி வைத்தவர்கள் ஒக்கூருடையாரே. அந்தச் சிறப்பின் காரணமாகவே

எல்லா நகரக் கோவில்களிலும் ஒக்கூருடையாருக்கு முதல் மரியாதை கொடுக்கப்படுகிறது.

சிவன் கோவில் கட்டிய திருப்பணியில் இரண்டாவதாக இடம் பெறும் நகரத்தார்கள் உய்யக் கொண்டான் சிறுவயல் ஒக்கூருடையார்கள்.

இவர்கள், உ.சிறுவயலில் ஊருக்கு வெளியே இருந்த வெண்ணாண்டார் கோவிலை இப்போதுள்ள இடத்திற்குக் கொண்டு வந்து கட்டினர்.

இவ்வாறு தொடர்ந்து ஒக்கூருடையார் சிவன் கோவில் திருப்பணி செய்தனர்.

ஆதியில் சிவன் கோவில் கட்டிக் குடமுழுக்குச் செய்து வழிபட்டு வந்தமையால், இவர்களுக்கு முதல் மரியாதை வழங்கப்படுகிறது.

**(நன்றி : பேரா. தெ. சொக்கலிங்கம் - பூச்சரம் மார்ச் 2010.)**

நகரத்தார் வணிகக் குழுவின் பொதுப் பாதுகாப்பு, படை போன்றவற்றை ஏழகப் பெருந்தெருவாரும், மாத்தூர் நகரத்தாரும் நிர்வகித்தனர்.

நகரத்தார் குருபீடம் போன்றவற்றை வேலங்குடி நகரத்தாரும், இளையாத்தங்குடிசிறுசேத்தூருடையாரும் கவனித்தனர்.

**(நன்றி : பேரா. தெ. சொக்கலிங்கம் - பூச்சரம் மார்ச் 2010.)**

## நகரத்தார்களின் ஆதி குருபீடம்

பாண்டிய நாட்டில் நகரத்தார்கள் வளமாக வாழ்ந்தபோது அவர்களின் குரு 'பாண்டிய நாட்டரசன்'. இக் குரு பீடத் தலைமையிடம் 'கொடுங்குன்றம்' என்னும் பிரான்மலை. நகரத்தார்கள் அவரிடம் உபதேசம் கேட்டனர்.

பல பிரிவினரும் அவரிடம் உபதேசம் கேட்டதால், நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சற்று ஒதுக்கப்பட்டனர்.

இதனால், இவர்கள் தங்களுக்குத் தனி உரிமையும், மதிப்பும் வேண்டித் தனியே ஒரு குருவை ஏற்படுத்திக் கொள்ள விரும்பினர்.

குருவிடம் தங்கள் விருப்பத்தைக் கூறினர். ஆதி குருவும் அரை மனதுடன் ஒப்புக் கொண்டார். தன் வழிமுறையைச் சார்ந்த

ஒருவரைக் குருவாக்கினார். அவர் தங்குவதற்குக் கொடுங்குன்றத்தைச் சார்ந்த பல சிற்றூர்களில் ஒன்றான தெக்கூருக்கு அருகில் உள்ள ஊரை வழங்கினார். இம் மடம் ஆதி மடத்தின் கிளை மடமாகும். அதுவே 'கிளாமடம்' என வழங்கப் பெற்றது.

இந்தக் குரு மாற்றத்தில் எந்தெந்த கோவிலார் ஈடுபட்டனர் எனத் துல்லியமாகக் குறிக்க முடியவில்லை. இதில் இளையாத்தங்குடிக் கோவில் சில பிரிவும், வேலங்குடிக் கோவிலாரும் விருப்பம் காட்டி உள்ளனர்.

இந் நிலையில் கிளாமடத்துக் குருசாமி, துலாவூர் குருசாமியுடனும், சில நகரத்தார்களுடனும் காசிக்குச் சென்றார்.

தெரிசனம் முடித்துத் துலாவூர் ஆதினகர்த்தரும், நகரத்தார்களும் ஊர் திரும்பினர்.

ஆனால், கிளாமடம் குருசாமி இவர்களுடன் ஊர் திரும்பவில்லை.

ஆண்டுகள் கடந்தன. அவரைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை.

காசிக்குப் போன சாமியார் காசி விஸ்வநாதர் திருவடி சேர்ந்து விட்டார் என்று யாரோ கிளப்பிவிட்டு விட்டார்கள்.

பொய்யை மெய்யென்று நம்பி, நகரத்தார்கள் அடுத்து ஆக வேண்டியதைப் பற்றிச் சிந்தித்தனர்.

ஏற்கெனவே ஆதி குருவிடமிருந்து பிரிந்து, புதிய குருவை ஏற்படுத்திக் கொண்ட துணிச்சலால் மீண்டும் புதிய குருவைத் தேடலாயினர்.

இந்தக் கருத்தை வலுவாக நம்பிச் செயல்பட்டவர்கள் இளையாத்தங்குடி சிறுசேத்தூருடையார், பேரசெந்தூருடையார், வேலங்குடியார், சூரக்குடியார் முதலிய நகரத்தார்கள் ஆவர். தேவகோட்டை நகரத்தார்களில் பெரும்பான்மையோர் புதிய குருவை ஏற்படுத்த வேண்டும் என முனைந்து நின்றனர்.

இந் நிலையில், திருப்புனவாசல் முதன்மைக் குரு நகரத்தார்களின் புதிய குருவாகப் பட்டம் ஏற்றார்.

அவரிடம் நகரத்தார்கள் உபதேசம் கேட்டனர்.

இவ்வாறு நகரத்தார்கள் செயல்பட்ட நேரத்தில், காசிக்குச் சென்ற கிளாமடத்துக் குருசாமியார் ஊர் திரும்பினார்.

நகரத்தார்கள் புதிய குருவை ஏற்படுத்திக் கொண்டதை அறிந்து கொண்டார். அவர் கிளாமடம் செல்லாமல், கோவிலூரில் தங்கினார்.

செய்தி அறிந்த நகரத்தார்கள் கலங்கினர். ஆசிர்வாதம் வாங்கவும், விபூதி பிரசாதம் வாங்கவும் அவரிடம் செல்ல அஞ்சினர்.

புதிய குருவிடம் உபதேசம் கேட்காத நகரத்தார்கள் மன தைரியத்துடன் காணிக்கைப் பொருட்களுடன் பழைய குருவைச் சந்திக்கக் கோவிலூர் சென்றனர்.

காணிக்கைப் பொருட்களை குருவின் முன் வைத்து வணங்கினர்.

குருவோ அக் காணிக்கைப் பொருட்களை ஏற்காமலும், வாய் திறவாமலும், விபூதிப் பிரசாதம் வழங்காமலும், "நல்லது, அங்கே கேட்டவர்கள் வம்சம் அங்கேயே போகட்டும். நமக்காக காத்திருந்தவர்கள் நம்மிடமே கேட்கட்டும்" என மன வருத்தத்துடன் சொல்லி, எழுந்து போய்விட்டார்.

இங்ஙனம் ஒரு குருபீடம் இரண்டாய் மாறியது.

இதுவே நகரத்தார்களுக்கு ஏற்பட்ட குருவின் சாபமாகும்.

(நன்றி : பேரா. தெ. சொக்கலிங்கம் - பூச்சரம் நவம்பர் 2010.)

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் குருபீடங்களைத் தேடி ஆதரிக்காத காரணத்தால், எவ்வளவோ தருமம் செய்தும், திருக்கோவில்கள் கட்டியும், இவர்களைப் பிடித்த குருதோஷம் தொலையவில்லை.

சிவன் கோவில் திருப்பணி செய்யும்போது, சிவபெருமான் கருவறையின் தென்புறம் தென்முகக் கடவுளுக்கு (தட்சிணாமூர்த்தி) சன்னதியும், மண்டபமும் அமைத்தனர். இதனால் குரு சாபத்தின் வேகம் சற்றே குறைந்தது.

கிளாமடத்துக் குருசாமியை நகரத்தார்கள் புறக்கணித்ததால், அப் பட்டத்திற்குக் குருவாக வந்தவர் கோட்டையூர் - அழகாபுரிக்கு வடக்கே உள்ள கல்லாங்குடி மடத்தில் தங்கினார்.

இக் குருவை கல்லாங்குடிக்குக் கூட்டி வந்து, அவருக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுத்தவர்கள் பள்ளத்தூர் திரு. உ.அ.பெரி.மு. அருணாசலம் செட்டியார்.

(நன்றி : பேரா. தெ. சொக்கலிங்கம் - பூச்சரம் மே 2010.)

## குருவின் சிறப்பு

குரு பீடங்களை மாற்றிக் குருவாக விளங்கியவர்களின் மதிப்பை நகரத்தார்கள் குறைத்தனர்.

இரண்டு குரு பீடங்களிடையே போட்டி ஏற்பட்டது. அதனால், ஒருவரை மற்றவர் தாழ்த்திப் பேசலாயினர்.

"இறைவனை யாரும் கண்ணால் பார்க்கவில்லை. நாம் கண்ணால் பார்க்கும் ஒருவர்தான் குரு. குருவிடம் நாம் வைக்கும் பக்தியே நம்மைக் கடைத்தேறச் செய்துவிடும்".

"இறைவனுக்கு அபசாரம் பண்ணினால், ஈசுவரனிடத்தில் போய் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்பதில்லையே. ஆச்சார்யன் மன்னித்து விட்டாலே போதும். ஈசுவரனுடைய கோபம் தணிந்து விடும்".

"ஆனால், குருவினிடத்தில் அபசாரம் பண்ணிவிட்டு ஈசுவரனிடத்தில் போனாலும் ஒன்றும் நடக்காது. குருவினிடத்திலே போய்த்தான் அந்த அபசாரத்திற்கு நிவர்த்தி தேடிக் கொள்ள வேண்டும்" என்று சுவாமியே சொல்லி விடுவார்.

"சிஷ்யனுக்காகக் குருவே பரமாத்மாவிடம் சிபாரிசு பண்ணினால், அவருக்குக் கோபம் போய், இவனுக்கு அனுக்கிரகம் பண்ணி விடுவார். ஆனால், குருவுக்கே கோபம் வந்து விட்டால் ரட்சிக்கிறவர் எவருமில்லை".

"அதனால்தான் குரு பக்தியை சாஸ்திரங்கள் மிகவும் விசேஷமாகச் சொல்கின்றன. உத்தமமான குரு கிடைக்கவில்லை என்றால், அரைகுறையாக ஒரு குரு இருந்தாலும், அவரை வழிகாட்டியாக வைத்துக்கொண்டு ஈசுவர பக்தி செய்ய வேண்டும்.

- தெய்வத்தின் குரல்- பாகம் 2 - பக்.45-46ல் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

இப் பகுதி குருவின் தலையாய சிறப்பை, குருவைப் போற்ற வேண்டியதன் தேவையை நன்கு எடுத்துரைக்கிறது.

நகரத்தார்கள் குருவைப் போற்றாததால், அவரிடம் உபதேசம் கேட்காததால், குருவின் சாபத்திற்கு ஆளாயினர்.

(நன்றி : பேரா. தெ. சொக்கலிங்கம் - பூச்சரம் டிசம்பர் 2010.)

## நகரத்தார் குரு தோஷப் பரிகாரம்

கல்லாங்குடி மடத்து முகப்பில் பின்வரும் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

உ
சிவமயம்
ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் சகாயம்
பாண்டிய நாட்டு முதன்மை ஸ்ரீ ஈசான்ய
சிவாச்சாரியார் - கலாமடம் ஆதினம்
நகரத்தார் ஆச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீலஸ்ரீ
பரமசிவம் என்ற ராமசாமி தேசிகரவர்கள்
ஜனனம் : பிலவஹு - ஆவணிமீ"-உயரு (9.9.1901)
பட்டம் : பிரமாதீசஹு சித்திரைமீ" சா-தேதி (21.4.1913)
சித்தி : விகாரி வருஷம் மாசி மாதம் 2ம் தேதி (14.2.1960)
கல்லாங்குடி சார்வரி வருஷம் ஆவணி (21.9.1989)

ராமசாமி தேசிகருக்குப் பின் ஸ்ரீலஸ்ரீ இரவீந்திர சுவாமிகள் பட்டத்திற்கு வந்தார்கள்.

இவருக்கு வேண்டியவற்றைப் பள்ளத்தூர் திரு.உ.அ.பெரி.மு. அருணாசல செட்டியார் அவர்கள் செய்தார்கள்.

நகரத்தார்கள் பால் பேரன்பு கொண்ட திருச்சி சுவாமிகள், நகரத்தார் குருவை பெங்களூருக்குக் கூட்டிச் சென்று சமஸ்கிருதக் கல்வி புகட்டி, புடம் போட்ட தங்கமாக்கினர்.

(நன்றி : பேரா. தெ. சொக்கலிங்கம் - பூச்சரம் மே 2010.)

நகரத்தார் பெண்களின் உபதேசக் குருவான துலாவூர் குருவுடன், நகரத்தார் குல குருவான கிளாமடத்துக் குரு காசிக்குச் சென்றார்.

நகரத்தார் பெண்களுக்கு ஏற்பட்ட தோஷம் நீங்கவும், நகரத்தார் ஆண்கள் நலனுக்காகவும், பல யாகம், ஹோமங்களைக் காசியில் செய்து வணங்கினார்.

சுமார் 5 வருடங்களுக்குப் பிறகு பெண்களின் உபதேச குரு ஊர் திரும்பினார்.

ஆனால், ஆண்களின் குரு காசியில் பல வருடங்கள் தங்கி நகரத்தார் இனம் சிறப்புற பல யாகங்கள் செய்து, பின் ஊர் திரும்பினார்.

அந்தக் காலச் சூழ்நிலை உபதேசம் கேட்டபிறகுதான் திருமணம் என்ற நிலை இருந்தது. உபதேசம் பெற குரு இல்லாததால் ஆண் பிள்ளைகள் திருமணம் தடைப்பட்டது.

அப்பொழுது நகரத்தார்களின் ஆன்மிகப் பொறுப்பில் இருந்த வேலங்குடிக் கோவிலாரிடம் ஏனைய நகரக் கோவிலார்கள் இத்தடையை நீக்க என்ன செய்யலாம் எனக் கேட்டனர்.

புதிய குருவை ஏற்படுத்தி, அவரைப் பாதரக்குடியில் தங்க வைத்து உபதேசம் கேட்கலாம் என முடிவு செய்தனர்.

அவ்வாறே புதிய குருவைப் பாதரக்குடியில் தங்கச் செய்து, உபதேசம் கேட்டனர். இதனால் திருமணத் தடை நீங்கியது.

சில ஆண்டுகளுக்குப் பின் கிளாமடத்துக் குரு காசியிலிருந்து ஊர் திரும்பினார்.

புதிய குருவை நகரத்தார்கள் ஏற்படுத்தி உபதேசம் கேட்பது அறிந்து அவர் மிகவும் வருந்தினார்.

அவர் வருகை அறிந்த நகரத்தார்களில் சிலர் அவரைச் சந்திக்கச் சென்றனர்.

காணிக்கையை அவர் முன்பு வைத்துக் கீழே விழுந்து வணங்கி நின்றனர்.

"நகரத்தார்கள் இனம் தழைக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் நான் கடவுளை வணங்கி வந்துள்ளேன். ஆகவே, என்னால் உங்கள்மீது கோபம் கொள்ள முடியாது. ஆனால், மனதில் சிறிது வருத்தம்

உள்ளது. என்னிடம் உபதேசம் கேட்க நினைப்பவர்கள் என்னிடம் கேட்கட்டும். அவரிடம் கேட்க நினைப்பவர்கள் அவரிடம் கேட்கட்டும்'' என்று கூறி, ஆசிர்வாதம் செய்யாமலும், விபூதி கொடுக்காமலும் எழுந்து சென்று விட்டார்.

அக் குருவின் மனவருத்தம் நகரத்தார் அனைவரையும் பாதித்தது. அவர் செய்த யாகம், ஹோமங்களின் பலன்கள் நகரத்தார்களுக்கு கிடைக்க வாய்ப்பில்லாமல் போய் விட்டது.

பல பெரியவர்கள் இதுபற்றி அறிந்து, தோஷ நிவர்த்தி செய்ய பலமுறை முயன்றனர். முடியவில்லை.

இத் தோஷ நிவர்த்திக்காக 'பூச்சரம்' சிறப்பாசிரியர் பேராசிரியர் முனைவர் தெ. சொக்கலிங்கம் அவர்கள் முயற்சியால், பூச்சரம் ஆசிரியர் திரு. பழனியப்பன் அவர்கள், வேலங்குடிக் கோவில் புள்ளியான திரு. சுப்பு மூலம் முயன்றனர்.

கோவிலில் இருந்த ஐம்பொன் சிலை திருடு போனதால் முயற்சி தடைப்பட்டது.

குறி சொல்பவரிடம் கேட்டதற்கு, "96 வருஷத் தோஷம் உள்ளது. அதை நீக்கவேண்டும். இல்லையெனில் 9 நகரக் கோவில்கள் 8 கோவில்களாக மாறி விடும்'' என்றார்.

குரு தோஷ நிவாரணம் செய்ய திரு. சுப்பு அவர்கள் முயற்சியால் 14.8.2010இல் தோஷத்திற்கு மூல காரணமான வேலங்குடிக் கோவில் புள்ளிகள் கிளாமடம் சென்றனர்.

அங்கு ஆண்கள் குருபீடம் பாதரக்குடி ஸ்ரீலஸ்ரீ இரவீந்திர சுவாமிகள் வேத பாராயணம் படித்து, தீபம் காண்பித்து, விபூதி வழங்கி ஆசிர்வதித்தார்கள்.

15.8.2010இல் இராமேஸ்வரம் சென்று அக்னித் தீர்த்தத்தில் தீர்த்தமாடி, இறை வழிபாடு செய்து வேலங்குடி வந்தனர்.

வேலங்குடியில் ஹோமம் செய்தனர்.

பாதரக்குடி சுவாமிகள், துலாவூர் சுவாமிகள், கோவிலூர் சீர்வளர் நாச்சியப்ப சுவாமிகள் மூவரும் ஹோமத்தில் கலந்துகொண்டு விபூதி

வழங்கி ஆசீர்வதித்தனர். "இனி நல்லதே நடக்கும்" எனக் கோவிலூர் சுவாமிகள் ஆசீர்வதித்தனர்.

வேலங்குடிக்குப் பெருமை சேர்ப்பது மாணிக்கவாசக சுவாமிகள் வழங்கிய யோக தண்டமாகும். இதை வைத்துத்தான் கிளாமடத்துக் குரு 96 வருடங்களுக்கு முன் உபதேசம் செய்தார்கள்.

வேலங்குடியில் நடந்த ஹோமங்கள் முடிந்த பின், பாதரக்குடி சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ இரவீந்திர சுவாமிகள் இந்த யோக தண்டத்தை வைத்து உபதேசம் செய்தனர். உபதேசம் கேட்க நினைப்பவர்கள் வேலங்குடிக் கோவிலில் கேட்பது சிறப்பு என்று சுவாமிகள் கூறினார்கள்.

(நன்றி : பூச்சரம் அக்டோபர் 2010.)

இனியாவது நகரத்தார்கள் குரு தோஷ நிவர்த்திக்கான முயற்சியில் ஈடுபட்டு, வாழ்க்கையில் பெற்றி பெற ஸ்ரீ பெரியநாயகி உடனாய ஸ்ரீ ஐந்நூற்றீசுவரர் திருவருள் புரிவாராக.



# இந்நூலாசிரியரைப் பற்றி!



## வெற்றியூர் அரு.சுந்தரம்

வெற்றியூர் கதிர்வேலன் செட்டியார் வீட்டில் அரு.கதி.அருணாசலம் செட்டியார்-சிவகாமி ஆச்சியின் மூத்த மகனாக 09-10-1944 -இல் பிறந்தார். மாத்தூர் கோயில் அரும்பாக் கூருடையார் பிரிவைச் சார்ந்தவர் இவர்.

நகரத்தார் சமூகத்தைப் பற்றி இதுவரை மூன்று நூல்கள் எழுதியுள்ளார். இம் மூன்று நூல்களையும் மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்டுள்ளது.

இந் நூல் இவருடைய 20-ஆவது நூலாகும். இன்னும் பல நூல்களை எழுத இவரை நாம் வாழ்த்துவோம்.

- பதிப்பகத்தார்.